# அருள்மிகு இராமர் அற்புதத் தகவல்கள்

பல்வகை இராமாயணங்கள்
பாரதத்திலுள்ள இராமர் திருத்தலங்கள்
பன்னிரு திருமுறைகளில்,
நாலாயிர திவ்ய ப்ரபந்தத்தில்,
திருப்புகழில் இராமாயணம், இராம பக்தர்கள்,
தோத்திரங்கள், ஆஞ்சநேயர் முதலியன

திருவருட் செல்வர், திருப்புகழ்ச் செம்மணி
மருத்துவர் கைலாசம் சுப்ரமணியம்



வானதி பதிப்பகம்
23, தீனதயாளு தெரு,
தி.நகர், சென்னை – 17.

நூல் : அருள்மிகு இராமர் அற்புதத் தகவல்கள்
முதல் பதிப்பு : ஜனவரி 2023
உரிமை : ஆசிரியருக்கு

வானதி வெளியீடு

விலை : ₹ 150.00

Title : Arulmigu Ramar Arputhath Thagavalgal

Author : Dr. K. Subramaniam, M.B.B.S., DTCD
No. 46, Hasthinapuram Main Road,
Nehru Nagar, Chrompet, Chennai - 600 044
Ph: 98414 20780

Language : Tamil
Subject : Religion
Edition : First Edition - Jan 2023
Pages : 176
Published by : VANATHI PATHIPPAGAM
23, Deenadayalu Street, T. Nagar,
Chennai - 600 017.
Ph: 2434 2810 / 24310769
E-mail: vanathipathippagam@gmail.com
Price : ₹ 150.00

Lazer Type : Sri Vinayaga Printers Private Limited,
No.16, Hasthinapuram Main Road,
Nehru Nagar, Chrompet, Chennai - 600 044.
PH: 044-2223 0830 / 9043641379

Printed by : Novena offset printing co., Chennai-5. Ph:28446891

# சமர்ப்பணம்



அயோத்யா, ஸ்ரீராமரின் ஜன்மபூமி. இத்தலத்தில் இராமர் அவதரித்து, ஆட்சி செய்து, மீண்டும் வைகுண்டம் அடைந்தார். புதிதாக இங்கு இராமர் கோயில் திருப்பணி பிரம்மாண்டமாக நடைபெற்று வருகிறது. இத்திருக்கோயிலில் எழுந்தருளி உள்ள ஸ்ரீ சீதா சமேத இராமர் மற்றும் இதர தெய்வங்களுக்கும் இந்நூலை சமர்ப்பிக்கிறேன்.

- மருத்துவர் கைலாசம் சுப்ரமணியம்



# ஜகத்குரு
# ஸ்ரீ காஞ்சி காமகோடி பெரியவாள் அருள் வாக்கு



ஸ்ரீராமநவமியன்று குழந்தைகள் முதல் முதியவர்கள் வரை ஒவ்வொருவரும் கம்பராமாயணத்தில் உள்ள கீழ்க்காணும் பாக்களைப் பாராயணம் செய்ய வேண்டும்

*வெய்புனர் பூசமும் விண்ணு ளோர்களும்*
*தூயகற்கடகமும் எழுந்து துள்ளவே*
*சித்தரும் இயக்கரும் தெரிவை மார்களும்*
*வித்தக முனிவரும் விண்ணு ளோரர்களும்*
*நித்தரும் முறைமுறை நெருங்கி யார்ப்புற*
*தத்துறல் ஒழிந்துநீள் தருமம் ஓங்கவே*

*ஒருபகல் உலகெலாம் உதரட்துட் பொதிந்*
*தருமறைக் குணர்வரும் அவனை யஞ்சனக்*
*கருமுகிற் கொழுந்தெழில் காட்டுஞ் சோதியைத்*
*திருவுறப் பயந்தனள்திறங்கொள் கோசலை*

(கம்பராமாயணம்: பாலகாண்டம் - திரு அவதாரப்படலம்)

*மங்கள கீதம் பாடமறையொலி முழங்கவல்வாய்ச்*
*சங்கினம் குமுறப் பாண்டில் தண்ணுமை யொப்பத் தாவில்*
*பொங்குபல் லியங்கள்ஆர்ப்பப்பூமழை பொழியவிண்ணோர்*
*எங்கள்நாயகனை வெவ்வேறுஎதிர் அபிடேகஞ் செய்தார்*

*மாதவர் மறைவ வாளர் மந்திரக் கிழவர் முற்று*
*மூதறி வாளர் உள்ளஞ் சான்றவர் முதனீ ராட்டச்*
*சோதியானமகனுமற்றைத் துணைவரும் அனுமன் தானும்*
*தீதிலா இலங்கை வேந்தும் – பின் அபிடேகஞ் செய்தார்*

*சித்தமொத் தனன்என் றோதுந் திருநகர்ச் செல்வ மென்ன*
*உத்தமத் தொருவன் சென்னிவிளங்கியஉயர்பொன் மௌலி*
*ஒத்துமெய்க் குவமைகூரஓங்குமூ வுலகத் தோர்க்குந்*
*தத்தம் உச்சியின்மேல் வைத்தது ஒத்தெனத் தளர்வு தீர்ந்தார்.*

(கம்பராமாயணம்: யுத்த காண்டம் - திரு அபிடேகப்படலம்)

(நாட்டில் உள்ள எல்லா மக்களிடையேயும் தெய்வபக்தியும், நன்னடத்தையும் வேரூன்றி வளரவேண்டும் என்று எல்லோரும் ஸ்ரீ ராமநவமியன்றும், மறுநாள் புனர் பூஜையிலும், ஸ்ரீராமச்சந்திர மூர்த்தியைப் பிரார்த்தித்துக் கொள்ள வேண்டும்.

நன்றி தெய்வத்தின் குரல் - முதற்பகுதி - ஸ்ரீ ராமநவமி)

# பதிப்புரை

முனைவர் **திரு. இராமநாதன்**
வானதி பதிப்பகம்

இதிகாசங்கள் இரண்டில் இராமாயணம்தான் அதிக அளவில் மக்களிடம் சென்றடைந்துள்ளது. இது இந்திய மொழிகளில் மட்டுமல்லாமல், பல அயல் நாட்டு மொழிகளிலும் மொழி பெயர்க்கப்பட்டுள்ளது.

தசாவதாரத்தில் ஒரு அவதாரமாக, அயோத்தியில் அவதரித்து ஒரு உன்னத புருஷராக வாழ்ந்து, பல கஷ்டங்களை அனுபவித்து, தன் பணி முடிந்து, மீண்டும் வைகுண்டம் சென்ற சக்ரவர்த்தித் திருமகனின் சரித்திரம் தான் இராமாயணம்.

வால்மீகி முனிவர், கம்பர், துளசிதாசர், கிருத்திவாசர் போன்ற பல மகான்கள் தங்கள் மொழியில் இராமாயணத்தை எழுதியுள்ளார்கள். பத்திரிகைகள், வானொலி, தொலைக்காட்சி, நாடகம், சினிமா, தெருக்கூத்து போன்ற ஊடகங்கள் மூலம் பலமுறை இராமாயணம் வெளிப்பட்டு வருவதைக் கண்கூடாகக் காண்கிறோம்.

மருத்துவர் கைலாசம் சுப்ரமணியம் அவர்கள் வானதி வாசகர்களுக்கு ஏற்கனவே அறிமுகமானவர். பல நூல்களை எழுதியுள்ளார். 'அருள்மிகு இராமர் அற்புதத் தகவல்கள்' என்ற இந்நூலில், இராமர் திருத்தலங்கள், பல்வகை இராமாயணம், திருமுறை, திவ்யப் பிரபந்தம், திருப்புகழ் போன்றவைகளிலிருந்து பல தொகுப்புகளைத் தந்துள்ளார். அங்கங்கே படங்களும் உள்ளன.

இந்நூலை வானதி பதிப்பகம் மூலம் வெளியிடுவதில் பெருமகிழ்ச்சியடைகிறேன். வாங்கிப் படித்துப் பயன்பெறுமாறு கேட்டுக்கொள்கிறேன்.

முனைவர் திரு. இராமநாதன்<br>வானதி பதிப்பகம்,<br>சென்னை - 600 017.

# வாழ்த்துரை

**இரா. தியாகராஜன்**
பேராசிரியர், முனைவர்,
இலக்கிய மாமணி, ஸம்ஸ்கிருதரத்னா,
முன்னாள் ஸம்ஸ்கிருதத்துறைத் தலைவர்,
மாநிலக் கல்லூரி, சென்னை.
தொலைபேசி : 9840316797

இந்தியத் திருநாட்டில் இணையிலா மன்னராக "பண்பாட்டின் சிகரமாக", உலகெல்லாம் வியந்து பாராட்டும் உத்தம புருஷனாக, அவதரித்து உள்ளத்தைக் கொள்ளை கொண்ட இறைவனாய்த் திகழ்ந்தவர் இராமபிரான். "ராமோ விக்ரஹவான் தர்ம:" – தர்மத்தின் மறு உருவமே இராமர். "ஏகபத்னி விரதராக, தந்தை–தாய் சொற்களே மந்திரமாக", வாழ்ந்து காட்டியவர். அவர் மாவீரராக தெய்வீக குணங்களுடன், அறம் தவறிய அரக்கனை அழித்த கதை யாவரும் அறிந்ததே ! பிறர் மனை நோக்கல் போன்ற பஞ்ச மஹா பாதகங்கள் தலைதூக்கும்போதும், நல்லோர்கள் நலிவடைந்து, புல்லர்கள் வலுவடையும் நேரத்தில் அவதரிப்பது தானே இறைசக்தியின் இயல்பு, மாண்பு !

பறவையிடத்திலும் அன்பு (ஜடாயு), விலங்கினங்களோடு தோழமை (அனுமன்), இனவேற்றுமை பாராத சமநோக்கு (குகன்), வேறுபாடு காணாமல் இறைபக்தியூட்டும் பண்பு (சிவபிரானை பூஜித்தல்), சகோதரபாசம், கருணையுள்ளம் மற்றும் பேச்சிலும், எழுத்திலும் எண்ணிலடங்கா நற்பண்புகளோடு விளங்கியவர் இராமர்.

ஆகவே தான், "இராம இராஜ்ஜியம்" என்ற சிறப்பான ஆளுமைப் பெயர் இன்றளவும் பேசப்படுகிறது. இப்படி, இதயத்தைக் கவர்ந்திருக்கும், எண்ணத்தில் பிரம்மிக்கவைக்கும், உள்ளத்தைச் சிலிர்க்க வைக்கும் சரிதமே இராம சரிதம் ! இந்தியர் மட்டுமின்றி, இவ்வுலகமே அறியும் வகையில், வால்மீகியின் மூலநூல் தொடங்கி, எத்தனையோ மொழிகளில் இராமகாவியங்கள் தோன்றியுள்ளன என்பதையறிந்தால், மிக வியப்பாகத்தான் உள்ளது. சீதையின் 'பதிவ்ரதா தர்மமும்', அதனைக் காக்க அவள் கொண்ட மனஉறுதியும், எக்காலப் பெண்களுக்கும், எடுத்துக்காட்டாக, தன்னம்பிக்கையூட்டும் தவமன்றோ !

ஆஹா! சுருக்கிவிட இயலாத, இதயத்தைத் தொட்ட இராமாயணங்கள் பலவற்றையும், இராமரை இறைவனாக வழிபட்ட இந்தியா மட்டுமின்றி இதர தேசத்து திருத்தலங்களையும், குறிப்பாக தமிழ்மொழியில் தொன்றுதொட்டு இராம காதையை இலக்கியமாக்கி இயம்பிய நூல்களையும், பாக்களையும், பாசுரங்களையும், பன்னிரு திருமுறைகளையும், மேற்கோள்களையும், திரட்டி, திகட்டாத திரட்டிப் பாலாக இனிக்கச் செய்திருக்கிறார் இந்த அருள்மிகு இராமர் அற்புதத் தகவல்கள் என்ற அருமையான நூலில் ஆசிரியர்.

இதற்கு முன், பல்வேறு திருத்தலங்கள் பற்றியும், திருக்கோவில்கள் பற்றியும், அவரது நண்பர் பேராசிரியர் சீ. சுந்தரம் அவர்களோடு இணைந்து, "ஸ்ரீ அழகிய சிங்கனின் அற்புத ஆலயங்கள்", மகான்களின் வாழ்க்கையில் மகத்தான நிகழ்ச்சிகள் மற்றும் Saints and Sages of India (4 Vols: 2250pp) ஆகிய நூல்களையும் எழுதியுள்ளார். இதுபோல, பல நூல்கள் அவரது கைவண்ணத்தில் உருவாகி மலர்ந்துள்ளன.

குரோம்பேட்டை குமரன் குன்றம் திருப்புகழ் மன்றத்தின் ஒருங்கிணைப்பாளராகவும், குமரன்குன்றம் அருள்மிகு பாலசுப்ரமண்ய ஸ்வாமி திருக்கோயில், ஸத்சங்கம், ஸ்ரீ பாரதீய கலாசார ஸமிதி இவைகள் மூலமாக ஆன்மீகத் தொண்டாற்றுகிறார், இந்நூலின் ஆசிரியர்.

இத்தகைய ஆன்மீகச் செம்மல், தனது தள்ளாத வயதிலும் தளராத உறுதியுடன், தனது எழுத்துப்பணியில் ஈடுபட்டுள்ள எழுத்தாளராக இருப்பது வியப்பிலும் வியப்பே ! இவர் பல நூல்களில் தகவல்களை சேகரித்து, பகிர்ந்தளித்த இராமர் தொடர்பான இந்நன்னூல் பக்தர்கள் மட்டுமின்றி ஆய்வாளர்கள் அனைவருக்குமே ஒரு பொக்கிஷம்.

இந்நூலாசிரியர் "திருவருட்செல்வர்" திருப்புகழ் செம்மணி, மருத்துவ மாமணி, கைலாசம் சுப்ரமண்யம் அவர்களின் சேவையை வணங்கி, அவர் திறனை வியந்து, அவரது பணி சிறக்க, தொடர, வாழ்க, வாழ்க பல்லாண்டு என வாழ்த்துகிறேன்.

இந்நூலைப் பதிப்பித்த வானதி பதிப்பகத்திற்கும் எனது மனமார்ந்த பாராட்டுகள்!

ஸ்ரீராம ஜயம்

***இரா. தியாகராஜன்***

# என்னுரை

திருவருட்செல்வர் திருப்புகழ் செம்மணி,
மருத்துவர் **கைலாசம் சுப்ரமணியம்,** MBBS., DTCD.,

**அருள்மிகு நடராஜரின் அற்புதத் தகவல்கள்** என்ற நூலைத் தொடர்ந்து, ஒரு ஆண்டு கழித்து **அருள்மிகு இராமரின் அற்புதத் தகவல்கள்** என்ற நூல் உங்கள் கரங்களில் தவழ்கிறது.

ஸ்ரீராம ஜன்ம பூமியான அயோத்தியில் பிரம்மாண்டமான கோயில் ஸ்ரீராமருக்கு கட்டப்பட்டு வருகிறது. திருப்பணி முடிந்து, கும்பாபிஷேகத்திற்கு முன்பு இந்நூலை அவர் திருவடியில் சமர்ப்பிக்கிறேன்.

இந்நூலில் பல்வேறு மொழிகளில், பல மகான்கள் எழுதிய இராமாயணத் தொகுப்பு மிகவும் சுருக்கமாகத் தரப்பட்டுள்ளது. பலருடைய, பல மொழிகளிலுள்ள மேலும் பல இராமாயணம் விடுபட்டிருக்கலாம். சரியான தகவல் கிடைக்காததே காரணம். மன்னிக்குமாறு கேட்டுக் கொள்கிறேன்.

இராமருடைய திருத்தலங்கள் பகுதியில் பாரத நாட்டிலுள்ள இராமபிரானுக்காக பிரத்யேகமாக உள்ள திருக்கோயில்களும், தனியாக உள்ள ராமர் சந்நிதிகளும் தரப்பட்டுள்ளன. இவை தவிர இராமருக்கு உதவிய ஜடாயுவிற்கு உள்ள சில கோயில்களின் தல வரலாறும் தரப்பட்டுள்ளன. சில படங்களும் உள்ளன.

திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர் மற்றும் பன்னிரு திருமுறை ஆசிரியர்கள் தங்கள் பதிகங்களில் இராவணன் திருக்கயிலையைப் பெயர்க்க முயன்று, சிவபெருமானால் தண்டிக்கப்பெற்று, அவர் அவனுக்கு அருளிச்செய்த நிகழ்வும், தலங்களின் பெயர்கள், பதிகம், பாடல்கள் எண், சில இடங்களில் பொழிப்புரையும் தரப்பட்டுள்ளது.

நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில் ஆழ்வார்களின் இராமாயணப் பகுதிப் பாசுரங்களும், அருணகிரிநாதர் தமது திருப்புகழில் இராமர் பிறப்பு முதல் சரயு நதியில் இறங்கி வைகுண்டம் செல்லும் வரை நடைபெற்ற அனைத்து தகவல்களும் "திருப்புகழில் இராமாயணம்" என்ற தலைப்பில் தரப்பட்டுள்ளது. இராம பக்தர்கள் என்ற பகுதியில் ஒரு சிலரையும், ஸ்தோத்திரங்கள் சிலவும் தரப்பட்டுள்ளது.

இராமாயணம் ஒரு பெருங்கடல். எவ்வளவோ மகான்கள் அதில் மூழ்கி முத்தெடுத்துள்ளார்கள். நானும் அதில் மூழ்கி ஒரு முத்தெடுக்க

முயன்றுள்ளேன். அதில் வெற்றி பெற்றேனா? என்று வாசகர்கள் தான் தீர்மானிக்க வேண்டும்.

**என்னுடைய முயற்சிக்கு உறுதுணையாக இருந்தவர்கள்:**

இந்நூலுக்கு ஒரு சிறந்த வாழ்த்துரை வழங்கிய பேராசிரியர், முனைவர் இரா. தியாகராஜன், முன்னாள் ஸம்ஸ்கிருதத்துறைத் தலைவர், மாநிலக் கல்லூரி, சென்னை அவர்களுக்கு என் மனமார்ந்த நன்றி.

முனைவர் திரு. **இராமநாதன்** வானதி பதிப்பக உரிமையாளர் அவர்கள், என்னையும் ஒரு எழுத்தாளனாக வாசகர்களுக்கு அறிமுகப்படுத்தி, அதைத் தொடர்ந்தும் வருகிறார். மேலும் அவர் இப்பணியைச் சிறப்புடன் ஆற்ற இறைவனை வேண்டுகிறேன்.

என்னை எழுத்துப் பணியில் ஊக்குவித்தவர் முனைவர் சு.சுந்தரம். இந்நூலில் உள்ள நாலாயிர திவ்யப் பிரபந்த பகுதியைச் சரிபார்த்து முழுமையடைவதற்குள் ஸ்ரீமந் நாராயணன் திருவடியை அடைந்துவிட்டார். அவருடைய சகோதரிகளுக்கு என் நன்றியும், ஆசியும் உரித்தாகுக.

என் துணைவி தெய்வத்திரு. குணா சுப்ரமணியம் வைகுண்டத்திலிருந்து அனைவரையும் வாழ்த்தட்டும்.

எனக்கு ஊக்கமும், ஆதரவும் அளித்து வரும் அன்பர்கள் **R. உபேந்திரா, லயன் C.R. நரசிம்மன், லயன் T. C. அன்பழகன். வலையப்பேட்டை ரா. கிருஷ்ணன், கோமடம் ஸ்ரீராமன், K.S. சுப்ரமணியன்** அவர்களுக்கும், என்னுடைய அனைத்து நூல்களையும், நான் சம்பந்தப்பட்ட குமரன் குன்றம் திருப்புகழ் நூல்களையும் சிறப்பாக கணினி வடிவமைத்துத் தரும் திரு. **T. C. அருள்ஜி,** ஸ்ரீ விநாயகா பிரிண்டர்ஸ் மற்றும் அவர் குழுவினருக்கும் என் மனமார்ந்த நன்றி உரித்தாகுக.

என்னுடைய குடும்பத்தினர் **குமரன் சுப்ரமணியம், அனு குமரன், நியதி குமரன், வேதாந்த் குமரன், கண்ணன் S. ஆதித்யன், சாந்தி கண்ணன், அருள் விக்ரம், சித்தார்த்** முதலியோருக்கு எனது ஆசி உரித்தாகுக.

ஸ்ரீ சீதா ராமஜெயம்

**கைலாசம் சுப்ரமணியம்**
46, அஸ்தினாபுரம் மெயின் ரோடு,
நேருநகர். குரோம்பேட்டை. சென்னை-600 044.
கைப்பேசி: 9941420780

உள்ளே...



# அருள்மிகு இராமர்








*ஸ்ரீராகவம் தசரதாத்மஜமப்ரமேயம்*
*சீதாபதிம் ரகுகுலார்ணவ ரத்நதீபம்*
*ஆஜாநு பாஹூம் அரவிந்த தளாயதாக்ஷம்*
*ராமம் நிசாசர விநாசகரம் நமாமி ।।*

திருமால் எடுத்த அவதாரங்களில் இராமாவதாரம், கிருஷ்ணாவதாரம் இரண்டும் பூர்ண அவதாரமாகக் கருதப்படுகிறது. ஸ்ரீராம அவதாரம் பூர்ண அவதாரம் என்று பெரியோர்களால் போற்றப்படுகிறது. **"கற்பார் இராமபிரானை யல்லால் மற்றும் கற்பரோ"** என்கிறார் நம்மாழ்வார்.

ரகுவம்சக் கதையை, நாரதர் விவரித்தவாறு வால்மீகி இயற்றினார். இதை முதலில் பாடியவர்கள் ராமரின் மகன்களான லவனும், குசனுமாகும். ராம நாமத்தை ஜபித்து வால்மீகி ரிஷியான வேடன் ரத்னாகரன், வடமொழியில் ராமாயணத்தை இயற்றினார். அதைத் தொடர்ந்து கம்பர்-தமிழிலும் மற்றும் பலர் பலமொழிகளிலும் ராமாயணத்தை இயற்றியுள்ளனர். இச்சிறிய நூலில் அவைகள் சுருக்கமாகக், குறிப்பிடப்பட்டுள்ளன.

கம்பர் நினைவாலயம்: சிவகங்கையிலிருந்து 6 கி.மீ. தொலைவிலுள்ள நாட்டரசன் கோட்டையில் உள்ளது.

மனிதனாக வாழ்ந்த ராமனின் வரலாற்றைக் கூறுகிறார் வால்மீகி; வணங்குதற்குரிய தெய்வமாக ராமனைப் போற்றி, கவிதை இயற்றியிருக்கிறார் கம்பர்; துளசிதாசரோ பரமசிவனால் வணங்கித் துதிக்கப்பட்ட பரப்ரமத்தைப் பற்றிய நூலாகத் தனது ராமாயணத்தை இயற்றியிருக்கிறார்.

அயோத்தி என்பதன் பொருள் யுத்தம் என்பதே இல்லாத இடம்.

இராமாயணம் என்பதன் பொருள் - ராம + அயனம் - ராமனின் பயணத்தைப்பற்றிக் கூறுவது.

கோசலை வளர்பிறை 9-ம் நாள் புனர்வசு நட்சத்திரம், கடக லக்னத்தில் - ராமரை ஈன்றெடுத்தாள்.

கைகேயிக்குப் பூச நட்சத்திரத்தில் பரதனும், சுமித்திரைக்கு ஆயில்ய நட்சத்திரத்தில் லட்சுமணனும், சத்துருக்கனனும் பிறந்தனர்.

இராமருடைய உயர்ந்த குணத்தை, இராவணனின் மனைவி மண்டோதரி புகழ்ந்துள்ளாள்.

காசியில் இறப்பவர்களின் காதில் ராம நாமத்தை ஓதி முக்தி அருள்பவர் காசி விஸ்வநாதர்.

*ஸ்ரீ ராம ராம ராமேதி ரமே ராமே மனோரமே*
*ஸகஸ்ரநாம தத்துல்யம் ராம நாம வராநநே*
*ஸ்ரீ ராம நாம வராநந ஓம் நமஇதி ||*

(ஸ்ரீ விஷ்ணு ஸகஸ்ர நாமம்)

இராம நாமம் விஷ்ணு சகஸ்ரநாமத்துக்கு இணையானது என்று சிவபெருமான் கூறியுள்ளார். உள்ளே செல்வோம்.





# 1. பல்வகை இராமாயணம்



**இராமாயணம்:** சம்ஸ்கிருதம், தமிழ், தெலுங்கு, மலையாளம், கன்னடம், ஹிந்தி, ஒரியா, மராத்தி, வங்காளி, காஷ்மீரி மற்றும் நாட்டிலுள்ள அனைத்து மொழிகளிலும், அறிஞர்கள் ராமாயணத்தை இயற்றியுள்ளார்கள். அவைகள் கீழே தரப்பட்டுள்ளன.

1. **சம்ஸ்கிருதம்:** வால்மீகி ராமாயணம் (24,253 ஸ்லோகங்கள், 647 சர்க்கங்கள், கி.மு.3- ம் நூற்றாண்டு),

   **யோக வாசிஷ்ட ராமாயணம்** (ஞானவாசிஷ்டம் என்றும் பெயர்),

   **அத்யாத்ம ராமாயணம்** (பிரம்மாண்ட புராணத்தில் அடங்கிய பகுதி. ராமானந்த சுவாமிகள் இயற்றினார் என்று கூறப்படுகிறது).

   **ஆனந்த ராமாயணம்** (9 காண்டங்கள்,109 சருக்கங்கள், 12252 பாடல்கள் உடையது. இதில் யாக காண்டத்தில் 108 அசுவமேத யாகங்கள் கூறப்பட்டுள்ளது).

   **அத்புத ராமாயணம்:** (27 அத்தியாயங்களைக் கொண்டது. இதில் ஆஞ்சநேயருக்கு ராமர் செய்த உபதேசம் ஒரு முக்கியப் பகுதியாகும்). இதுவும் வால்மீகி இயற்றியதாகக் கூறப்படுகிறது.

   **பிரம்மானந்த தத்வ சங்கிரஹ ராமாயணம்**

   **காளிதாசரின் ரகு வம்சம்:** ஒரு மகா காவ்யம். சூர்ய வம்சத்தைச் சேர்ந்த 29 மன்னர்களைக் குறிப்பிட்டுள்ளார்.

   **அக்னிவேசிய ராமாயணம்:** இராமாயணத்தின் முக்கியமான செய்திகளை வருடம், மாதம், திதி ஆகிய குறிப்புகளுடன் பஞ்சாங்க ரூபமாகச் சொல்லும் நூல்.

2. **தமிழ்:** கம்பர் இயற்றிய ராமகாதை - கம்ப ராமாயணம் (கி.பி.12ம் நூற்றாண்டு). கம்ப இராமாயணம் ஸ்ரீரங்கம் திருவரங்கனுக்கு முன்பு, ஒரு பங்குனி மாதம் உத்திர நட்சத்திரத்தில் அரங்கேற்றம் செய்யப்பட்டது.

*எண்ணிய சகாத்தம் எண்ணூற்று ஏழின்மேல் சடையன் வாழ்வு*
*நண்ணிய வெண்ணெய்நல்லூர் தன்னிலே கம்பநாடன்*
*பண்ணிய இராம காதை பங்குனி அத்த நாளில்*
*கண்ணிய அரங்கர் முன்னே கவி அரங்கேற்றினானே*

- பால காண்டம்

பாரதம் பாடிய பெருந்தேவனார், ராமாயணத்தை **"சீராம கதை"** என்று வழங்கியுள்ளார்.

பஃறொடை வெண்பாவில், யாப்பருங்கலத்திற்கு விருத்தி உரை எழுதியவர் - ***"பலவடியான் வந்த பஃறொடை ராமாயணம்"*** என்று எழுதியுள்ளார்.

வீரசோழியத்தின் உரை ஆசிரியர் ராமாயணக் கதை கூறும் மேற்கோள் பாடல்களைத் தந்துள்ளார்.

ஆசிரிய மாலை என்ற தொகை நூல் புறத்திரட்டில் சேர்க்கப் பட்டுள்ளது.

ஸ்ரீபுராணம் என்ற ஜைன நூலில் ஆசிரியப்பாவில் இராமாயண நிகழ்ச்சிகள் எழுதப்பட்டுள்ளன.

தமிழ்நாடு அரசின் கையெழுத்துப் புத்தகச் சாலையில், பலதிரட்டு என்ற சுவடியில் ராமாயண வெண்பாக்கள் உள்ளதை திரு.மு. இராகவையங்கார் வெளிப்படுத்தியுள்ளார்.

நச்சினார்க்கினியர் தமது உரையில், ராமாயண வரிகளை எடுத்துக் காட்டியுள்ளார். அகநானூறு, புறநானூற்றில் ராமாயண நிகழ்ச்சியைச் சுட்டிக் காட்டியுள்ளனர். மணிமேகலை, சிலப்பதிகாரத்திலும் ராமாயணம் கையாளப்பட்டுள்ளது !

**அருணாசலக்கவி ராம நாடகம் :**

*அண்டர்தம் துயரம்தீர அயோத்தி மாநகரில் வந்து*
*தண்டகாரணியஞ்சென்று சமுத்திரமீதணையைக்கட்டிக்*
*கொண்டு ராவணனை மாட்டக் கோதண்டங்கையில் ஏந்தும்*
*புண்டரீகக் கண்ணன் ராமன் பொன்னடிக் கமலம் போற்றி*

- அருணாசலக் கவி

பன்னிரு திருமுறையில் இராமாயணம், நாலாயிர திவ்ய பிரபந்தத்தில் இராமாயணம், அருணகிரிநாதரின் திருப்புகழில் இராமாயணம் மூன்றும் தனிப் பகுதியாகத் தரப்பட்டுள்ளன.

3. **ஹிந்தி:** ஸ்ரீகோஸ்வாமி துளசிதாசரின் ராமசரித மானஸ் (1532-1623), பாசு ராமநாதர் இயற்றிய ராமாயணம், கேசவதாஸ் இயற்றிய ராம சந்திரிகா, சிந்தாமணி திரிபாதி, ராமேஸ்வர மேதா, மதுசூதனதாஸ், மணியாசிங் முதலியோர் ஹிந்தியில் ராமாயணம் எழுதியுள்ளனர்.

4. **மராத்தி:** ஏகநாதர் (கி.பி.1548-1609) எழுதிய பாவார்த்த ராமாயணம், பாவார்த்தராவின் அத்யாத்ம ராமாயணம், சமர்த்த ராமதாசரின் லகு ராமாயணம், ஸ்ரீதரரின் ராம விஜயம், பஞ்ச சாம ராமாயணம், தாமரா ராமாயணம், நிரோஷ்ட ராமாயணம், அபயங்கரரின் சீதா சுயம்வரம், அன்னாகிரிலோஸ்கரின் ராம விஜயம் முதலியன.

5. **குஜராத்தி:** பிரேம்நாதர் ராமாயணம், பாலண்ணா ராமலீலா ராமாயணம், கர்மண்ணாவின் சீதா கல்யாணம், ஸ்ரீதரின் ராமவிஜயம், கிரிதரர் பாடல் வடிவில் உள்ள ராமசரிதம். மஹா சங்கரர், ஞான சங்கரர் ஆகியோர் சீதா வனவாசம் முதலியவைகளை இயற்றியுள்ளனர்.

6. **வங்காளி:** கிருத்திவாசரின் ராமாயணம். (கிருத்திவாசர் வங்காளத்தில் ஃபூலியா என்ற கிராமத்தில் 1380ல் பிறந்தவர். கிருத்திவாசர் தனது ராமாயணத்தை 'பயார்' என்ற எளிய சந்தத்தில் இரண்டு வரிச் செய்யுள்களாக எழுதியுள்ளார்). பவானிசாகர், கிவிசந்திரர் இருவரும் ராமாயணத்தை வங்காள மொழியில் இயற்றியுள்ளனர். நித்யானந்தரின் ராம காவியம், மதுசூதனதத்தரின் மேகநாத வத காவியம், கிரீஷ் சந்திரகோஷ் ராவண வதம், சீதா வனவாசம் முதலியன வங்காள மொழியில் உள்ள இராமாயணமாகும்.

7. **அஸ்ஸாம்:** மாதவ கண்டலி (கஸ்குனி)யின் ராமாயணம் (கி.பி. 14ம் நூற்றாண்டு), துர்க்காபார் கீர்த்தி ராமாயணம், ரகுநாதரின் ராமாயண வசன காவியம், தாஸ் இயற்றிய சீதா ஹரண்ய காவியம் முதலியன.

8. **ஒரியா:** பலராமதாஸரின் ஜகன்மோகன ராமாயணம் (கி.பி. 16ம் நூற்றாண்டு), ஹலதரதேவர் அத்யாத்ம ராமாயணம், கேசவ ஹரிசந்திரா ராமசரிதை, மிஸ்ராவின் சீதா விவாஹம், சரளாதாசரின் வில்லங்க ராமாயணம், பீதாம்பர தாசரின் தண்டி ராமாயணம், மதுசூதன தாசரின் ஹனுமன் நாடகம், சிகிடி ராமாயணம், தனஞ்சய பஞ்ஜாவின் ரகுநாத விலாசம் முதலியனவும், மேலும் பலரும் ஒரிய மொழியில் ராமாயணம் இயற்றியுள்ளனர். ஒரிசா மக்கள் இராமரை "மர்யாத புருஷோத்தமர்" "பதீத பாவனா" என்றும் அழைக்கிறார்கள்.

9. **கன்னடம்:** நாகசந்திரர் (அபிநவ பம்பர்) இயற்றிய பம்ப ராமாயணம், தேவசந்திரரின் ராமாவதாரம், திம்மராயன் கவி ஆனந்த ராமாயணம், புட்டப்பாவின் ராமாயணம், தேவப்பாவின் ராம விஜய சரிதம், மூல இராமாயணம் முதலியன. ஸ்ரீ மத்வாசாரியரின் மகாபாரத தாத்பர்ய நிர்ணயா என்ற நூலில் 6 அத்யாயங்களில் ராமகதா நிருபண பாகா என்று ராமாயணத்தை எழுதியுள்ளார். ஸ்ரீ நாராயண பண்டிதர் இயற்றிய சங்கிரஹ ராமாயணம், ஸ்ரீராஜராஜேஸ்வர தீர்த்தர், உடுப்பி பாலிமர் மடம் 6வது மடாதிபதி, 'ராம சந்தேச' என்றும், ஸ்ரீ வாதிராஜ தீர்த்தர் இயற்றிய தசாவதார ஸ்தோத்திரத்தில் 11 ஸ்லோகங்களில், ராமர் கதையையும் கூறியுள்ளனர். ஸ்ரீ ராகவேந்திர தீர்த்தர் 'ஸ்ரீ ராம சரித மஞ்சரி', ஸ்ரீ சுமீந்திர தீர்த்தா 'ராம தண்டகம், ராம தாராவளி'யும், உத்தராதி மடாதிபதி ஸ்ரீ சத்ய தர்ம தீர்த்தர் 'ராம அமிர்தம், வால்மீகி ராமாயண வியாக்யானம்' நூலையும், ராயர் மடாதிபதி ஸ்ரீ வாதீந்திர தீர்த்தர் 'ராகவேந்திர மதாகதா அர்சகதி கிரம' என்ற ராமாயணத்தையும் இயற்றியுள்ளனர்.

மூல ராமாயணம், ஆனந்த ராமாயணம்: இவ்விரண்டு ராமாயணங்களிலும் ஆஞ்சநேயருக்கு முக்கியத்வம் தரப்பட்டுள்ளது. மத்வ சம்பிரதாயத்தைக் கடைப்பிடிக்கும் மக்களிடம் பிரபலமாக உள்ளது.

**ஸ்ரீமூல ராமர்:** ஸ்வயம் வியக்த விக்ரகம். பிரம்மா இந்த ராமரை வணங்கியதாகக் கூறப்படுகிறது. சூர்ய தேவன் வணங்கி வந்து, அவருடைய வம்சமான சூர்ய வம்சம் வணங்கி வந்துள்ளது. தசரதன் தன் மகனுக்கு மூல ராமர் நினைவாக 'ராமர்' என்று பெயர் சூட்டியதாகவும் கூறப்படுகிறது. பிற்பாடு இம்மூர்த்தி

அநுமன் கைக்கு வந்தது. அநுமன் பீமனிடம் கொடுத்தாகவும், அதை திரௌபதி வணங்கிய பின் பரிட்சித், ஜனமேஜயன் முதலியோர் வணங்கி வந்துள்ளனர். அதை மத்வாசாரியார் பூஜித்து வந்தார். அதைத் தொடர்ந்து பின்வந்த மடாதிபதிகள் வழிபட்டு வருகின்றனர்.

ஸ்ரீ மான் ஸ்ரீ பாதராஜர், வியாசராஜர், வாதிராஜர், புரந்தர தாசர், கனக தாசர், விஜய தாசர், கோபால தாசர், ஜகந்நாத தாசர், ப்ரணேச தாசர் முதலிய தாசர்கள் ராமர் பேரில் பல பாடல்கள், சுலாதிகள், உகாயோகம் போன்ற இசை மாலைகளை வெளியிட்டுள்ளனர். ஸ்ரீ புரந்தர தாசர் தமது கீர்த்தனை ஒன்றில், ராமர் ஒரு புதன்கிழமையில் அவதரித்ததாகக் குறிப்பிட்டுள்ளார்.

10. **தெலுங்கு:** மூன்று வார்த்தை ராமாயணம்: 'கட்டே-கொட்டே-தெச்சே'வில் முடிந்துவிடும். கட்டே - சேதுவைக் கட்டினான்; கொட்டே - இராவணனை அழித்தான்; தெச்சே - சீதையை மீட்டுக்கொண்டு வந்தான். பத்ராசல ராமதாசும், திருவையாறு தியாகராஜரும் சுந்தரமான சங்கீதத் தெலுங்கு மூலம் ராமாயணத்தை இயற்றி இருக்கிறார்கள்.

ரங்கநாத கவியின் பாஸ்கர ராமாயணம், ரங்கநாத ராமாயணம்-ராஜ கோணபுத்தா, கோபிநாத ராமாயணம், அத்யாத்ய ராமாயணம், சுப்பாராவின் மந்தாரம், சத்யநாராயணாவின் ராமாயணம், முதலியவை தெலுங்கில் உள்ள இராமாயணம் ஆகும்.

அடுகூரி மொல்லமாம்பா என்ற பெண்மணி கோபவரம் என்ற கிராமத்தில், ஒரு குயவரது குடும்பத்தில் தோன்றியவர். தெலுங்கு மொழியிலேயே முழுக் காவியத்தையும் இயற்றியுள்ளார். இவர் ராமாயணம் பெண்களை முன்னிருத்தி எழுதப்பட்டது. (1530-ஆம் ஆண்டு தனது தொண்ணூறாவது வயதில் மகா சமாதி அடைந்தாள்).

11. **மலையாளம்:** நம்பூதிரி இயற்றிய ராமாயண சம்பூ, எழுத்தச்சன் ராமாயணம் (கி.பி. 14ம் நூற்றாண்டு), பத்மநாப குரூப் ராமசந்திர விலாசம்.

12. **உருது:** முன்ஷி ஜகன்னாதர் இயற்றிய ராமாயண குஷ்டார்.

13. **காஷ்மீரி:** திவாகர பிரகாச பட்டர் ராமாவதார சரித்ரா (பிரகாச ராமாயணம்) (1847), சங்கர கௌலின் சங்கர ராமாயணம், ஆனந்தராம ரஸ்தானின் ஆனந்த ராமாயணம், பண்டித விஸ்வாம்பர நாதர் இயற்றிய விஷ்ணுபிரதாப ராமாயணம், நீலகாந்த சர்மாவின் சர்ம ராமாயணம், பண்டிட் தாரா சந்தாவின் தாரா சந்த ராமாயணம், பண்டிட் அமரநாதரின் அமர ராமாயணம், பண்டிட் லக்ஷமண ஜு இயற்றிய ராம கீதா, பண்டிட் பிரகாஷ் ராமாவின் ராமாவதார சரித்ரம் முதலியோரின் ராமாயணம் சிலவாகும்.

14. **நேபாளி:** பானுபட் இயற்றிய அத்யாத்ம ராமாயணம்

15. போஜ ராஜா இயற்றிய சம்பு ராமாயணம்

16. கங்கணபந்த ராமாயணம் - கிருஷ்ணமூர்த்தி

17. ஆர்ய ராமாயணம் - பண்டித சூர்யா

18. கிரியாகோபண ராமாயணம்

19. ராமாயணார்யா- அசேசனக ராமாயணம் - சுப்ரமண்ய சூரி

20. வசிஷ்டோத்தர ராமாயணம் (சீதா விஜயம்)

21. யோகவாசிஷ்ட மஹா ராமாயணம் (வசிஷ்ட ராமாயணம்) யோகா & தத்துவத்தை விவரிக்கிறது.

22. மிருகண்டு ராமாயணம்

23. காகபுசண்டி ராமாயணம்

24. நாடக ராமாயணம்

25. விபீஷண ராமாயணம்

26. பிரம்ம ராமாயணம்

27. சிவ ராமாயணம்

28. அகஸ்திய ராமாயணம்

29. சேஷ ராமாயணம்

30. ஆகம ராமாயணம்

31. கர்ம ராமாயணம்

32. கீர்த்தி ராமாயணம் - தூர்காபூரி

33. ஸ்கந்த ராமாயணம்

34. புலஸ்த்ய ராமாயணம்

35. பரத ராமாயணம்

36. தர்ம ராமாயணம்

37. கல்யாண ராமாயணம்

38 சந்நிதி ராமாயணம்

39. ஏகஸ்லோகி ராமாயணம்

40. சப்தஸ்லோகி ராமாயணம்

41. காயத்ரி ராமாயணம்

42. மங்களஸ்லோக ராமாயணம்

43. கங்கணபந்த ராமாயணம்

44. வேதபாத ராமாயணம்

45. காயத்ரி ராமாயணம்

46. ஆர்ய ராமாயணம் - பண்டித சூர்யா

47. கிரியாகோபண்ணா ராமாயணம் - கிருஷ்ணகவி

48. தத்வசங்க்ரக ராமாயணம்

49. சிரஞ்சீவி ராமாயணம் - ஐந்து செய்யுள்களில் இயற்றப்பட்ட சிறிய ராமாயணம்

50. சிதிகண்ட ராமாயணம்

51. **உத்தர ராமசரிதம்** - பவபூதி. இவர் மகாவீர சரிதம், உத்தர ராம சரிதம் என்ற இரண்டு நூல்களையும் எழுதியுள்ளார். மகாவீர சரிதம் ராமரின் ஆரம்பக்கால வீர வாழ்க்கையை, அவரது திருமணம் முதல் ராவண வதம் வரையில் உள்ள நிகழ்ச்சிகளை விளக்குகிறது. உத்தர ராம சரிதம் ராமரின் ராஜ்யாபிஷேகம் முதல், சீதையைப் பிரிதல் மற்றும் சீதா - ராம சந்திப்பு வரையில் நடந்த நிகழ்ச்சிகளை விளக்குகிறது. இரண்டும் நாடக வடிவில் உள்ளது. முதல் நாடகம் வீர ரசத்தையும், அடுத்த நாடகம் கருணா ரசத்தையும் எடுத்துக் காட்டுகின்றன.

52. ஜானகி பரிணயம் - ராமபத்ர தீக்ஷிதர்

53. கரகரரின் தொர்வே தண்டை மொழி

54. ராம கதா ரஸவாஹினி - சத்ய சாயி பாபா

55. அத்புதோத்தர ராமாயணம்

56. அக்னி புராணத்தில் 5-11 அத்தியாயங்களில் ராமாயணம் கூறப்பட்டுள்ளது.

57. முராரி - அனதர்க்கராகவம்

58. ராஜசேகர் - பாலராமாயணம்

59. ஸ்ரீபட்டி - பட்டி மகா காவ்யம் அல்லது ராவண வதம்

60. தாமோதர மிஸ்ரா - ஹனுமன் நாடகம்

61. ஜெயதேவர் - பிரசன்னராகவம்

62. புசுண்டி ராமாயணம்

63. அப்துல் பாஸல் என்னும் பாரசீகக் கவிஞர் பாரசீக மொழியில் வால்மீகி ராமாயணத்தைப் பின்பற்றி ராமாயணம் எழுதியுள்ளார்.

**64. சப்த ரிஷி ராமாயணம்**

1. மகரிஷி காஸ்யபர் - பால காண்டம்
2. மகரிஷி அத்ரி - அயோத்யா காண்டம்
3. மகரிஷி பரத்வாஜர் - ஆரண்ய காண்டம்
4. மகரிஷி கௌசிகர் - கிஷ்கிந்தா காண்டம்
5. மகரிஷி கௌதமர் - சுந்தர காண்டம்
6. மகரிஷி ஜமதக்னி - யுத்த காண்டம்
7. மகரிஷி வசிஷ்டர் - உத்தர காண்டம்

**65. ஏகவிருத்த ராமாயணம்:**

*தாதையார் சொலராமன் காடு போதல்*
*சார்ந்துள பொன் மானெனுமா ரீசன் சாதல்*
*சீதையார் பிரிவு; எருவை மரணம், பானு*
*சேயோடு நட்புக் கோடல்; வாலிவீடல்*

*ஓதநீர்க் கடற்பரப்பை அநுமன் தாண்டல்*
*உயரிலங்கை நகரெரியால் வேவக் காண்டல்*
*பாதகராம் அரக்கரெலாம் இறக்கத் தாக்கல்*
*பாக்கிய ராமாயணச்சீர்க் காதை ஈதே*

(எருவை- சடாயு; பானு சேய்-சுக்ரீவன்)

இந்த ஏகவிருத்தப் பாடலை டாக்டர் உ.வே. சாமிநாதய்யர் ஓர் ஓலைச்சுவடியிலிருந்து பதிப்பித்தார்.

66. திவ்யப் பிரபந்த பாசுரப்படி ராமாயணம் - பெரியவாச்சான் பிள்ளை இயற்றியது

பாலகாண்டம்

அயோத்தியா காண்டம்

ஆரண்ய காண்டம்

கிஷ்கிந்தா காண்டம்

சுந்தர காண்டம்

யுத்த காண்டம் என ஆறு காண்டங்களைக் கொண்டது.

67. இலங்கையில் குமாரதாசன் என்ற அரசன் "ஜானகி ஹரணம்" என்ற சம்ஸ்கிருத காவியத்தை எழுதியுள்ளான்.

68. சி. டான் பாஸ்டியன் என்பவர் இராமாயணத்தை சிங்கள மொழியில் மொழிபெயர்ப்பு செய்துள்ளார். சிங்கள மக்களை வெகுவாகக் கவர்ந்துள்ளது.

69. மலேசியாவில் உள்ள இராமாயணச் சுவடிக்கு "ஹகாயத் ஸெரி ராமா" என்று பெயர். தமிழ் வசனத்தை அடிப்படையாகக் கொண்டு எழுதப்பட்டுள்ளது.

70. இந்தோனேஷியாவில் இன்றும் கூட இராமாயண, மகாபாரதக் கலை நிகழ்ச்சிகளே அரசு சார்பில் வேற்று நாட்டு விருந்தினர்களின் முன்னிலையில் நடத்தப்படுகின்றன. முதல் உலக இராமாயண மகாநாட்டை நடத்தியது.

71. தாய்லாந்து: அரசர்கள் தங்கள் பெயரோடு 'ராம' என்ற பெயரையும் சேர்த்துக்கொண்டனர்.

"ராம கீர்த்தி" என்ற பெயரில் இராமாயண காவியம் இயற்றப்பட்டிருக்கிறது.

'ராமாகியான்' என்று வழங்கும் தாய்மொழி ராமகாதை பல விதங்களில் வால்மீகியை அடியொற்றி எழுதப் பட்டிருக்கிறது.

72. மொரீஷியஸ்: இந்தத் தீவிற்கு மொரீஷியஸ் என்று பெயர் வரக் காரணமே, ராமபிரானது பாணத்திற்கு இரையாகாமல் தப்பி ஓடிய மாரீசன் ஒளிந்து கொண்ட இடம் என்றே இன்றளவும் கருதப்படுகிறது.

**சங்க இலக்கியங்களில் இராமாயணம்:**

*வென் வேற் கவுரியர் தொல் முது கோடி*
*முழங்கு இரும் பௌவம் இரங்கும் முன்துறை*
*வெல்போர் இராமன் அருமறைக்கு அவிந்த*
*பல் வீழ் ஆலம் போல ஒலி அவிந்தன்று*
*இவ் அழுங்கல் ஊரே* - அகநானூறு 70 ஆவது பாடல்

(பொருள்: பாண்டியர் வெற்றிவேலை ஏந்தியவர்கள், பாண்டிய நாட்டில் தொன்மையான திருஅணைக்கரை இருக்கிறது. அதன் அருகில் பெரிய கடல் பேரொலி செய்கிறது. பறவைகள் ஆரவாரம் செய்கின்றன. ஜயராமன் போரில் வெல்வதற்காக அரிய ரகசியச் செய்தியை, வானர வீரர்களுடன் ஆராய்கிறான். பறவைகளின் ஆரவார ஒலியை ராமன் கை கவித்து இடங்கிடச் செய்தான்).

*என் இரும்பேர் ஒக்கல்*
*விரல்செறி மரபின செவித்தொடக் குநரும்*
*செவித்தொடர் மரபின விரற்செறிக் குநரும்*
*அரைக்கமை மரபின மிடற்றுயாக் குநரும்*
*மிடற்றுஅமை மரபின அரைக்குயாக் குநரும்*
*கடுந்தெறல் இராமன் உடன்புணர் சீதையை*
*வலித்தகை அரக்கன் வௌவிய ஞான்றை*
*நிலஞ்சேர் மதர் அணி கண்ட குரங்கின்*
*செம்முகப் பெருங்கிளை இழைப் பொலிந்தா அங்கு*
*அறாஅ அருநகை இனிதுபெற் றிகுமே*
*இருங்கிளைத் தலைமை எய்தி*
*அரும்படர் எவ்வம் உழந்ததன் தலையே*

(பொருள்: ஏழைப் புலவன் ஒருவன் மன்னனைப் பாடிப் பல பொன் நகைகளைப் பரிசாகக் கொண்டு வந்தான். அவன் கூறுவது: "என் சுற்றத்தார் வறுமையால் வாடினர். அவர்கள் நகைகளை அணிந்ததே இல்லை. அவன் கொடுத்த நகைகளை எடுத்துச் சிலர் விரல்களில் அணியவேண்டியவற்றைக் காதிலும், இடுப்பில் அணிய வேண்டியவற்றைக் கழுத்திலும், கழுத்தில் அணிய வேண்டியவற்றை இடையிலுமாக அணிந்து கொண்டார்கள்! இது எது போல் இருந்தது? என்றால், "கடும் போரில் வென்றவனான ராமனுடைய மனைவி சீதையை வல்லரக்கன் ராவணன் கவர்ந்து போனான். அவ்வமயம் சீதை தன் அணிகலன்களைக் கழற்றிக் கீழே எறிந்தாள். அந்த அணிகலன்கள் விழுந்த இடத்தில் சில குரங்குகள் இருந்தன. அவை சிவந்த முகம் உடையவை. அவை அந்த அணிகலன்களைத் தாறு மாறாக அணிந்ததைப்போல் என் சுற்றத்தாரின் நிலைமையும் இருந்தது. குரங்குகளைப் பார்த்து சிலர் நகைத்து மகிழ்ந்தார்கள். அதுபோல் என் சுற்றத்தாரின் செயல் கண்டும் பலர் சிரித்தார்கள்" என்றான்.

*****

**இராமாயணத்தில் நவபக்திரசம்:**

| | |
|---|---|
| சிரவணம் | - அனுமன் |
| கீர்த்தனம் | - வால்மீகி |
| ஸ்மரணம் | - சீதா பிராட்டி |
| பாத சேவை | - பரதன் |
| அர்ச்சனம் | - சபரி |
| வந்தனம் | - விபீஷணன் |
| தாஸ்யம் | - இலக்குவன் |
| ஸக்யம் | - சுக்ரீவன் |
| ஆத்ம நிவேதனம் | - ஜடாயு |

*****

இளங்கோவடிகள் சிலப்பதிகாரத்தில் ராமனைக் குறிக்க 'சேவகன்' என்ற பெயரைப் பயன்படுத்துகிறார். திருமால் 'சோ' என்ற மதிலை அழித்தது, ராமனாக நிலவுலகில் தோன்றி வனம் சென்றது, இலங்கையை அழித்தது ஆகியன எல்லாம் தம் அன்பர்களுக்காகச் செய்தவையே' என்று இளங்கோவடிகள் போற்றுகின்றார்.

*மூவுலகும் ஈரடியான் முறைநிரம்பா வகைமுடியத்*
*தாவிய சேவடி சேப்பத் தம்பியொடும் கான் போந்து*
*சோஅரணும் போர்மடியத் தொல்லிலங்கை கட்டழித்த*
*சேவகன்சீர் கேளாத செவி என்ன செவியே*
*திருமால்சீர் கேளாத செவி என்ன செவியே*

(நன்றி : ஸ்ரீராமகிருஷ்ண விஜயம் ஏப்ரல் - சித்திரை - 2008 இலக்கியங்கள் கூறும் ஸ்ரீராமர் வாழ்க்கை)

*****



**ராமர் பாலம்**

**ராமர் பாலம்:** நாசா (NASA - National Aeronautic and Space Administration) என்பது அமெரிக்காவின் விண்வெளி ஆராய்ச்சிக்கூடம்.

நாசாவின் ராக்கெட்டுகள் விண்வெளியிலிருந்து உலகின் பல பகுதிகளை மிகவும் துல்லியமாக புகைப் படங்கள் எடுத்துள்ளன.

அப்படி எடுக்கப்பட்ட படங்களிலிருந்து இந்தியாவிற்கும் இலங்கைக்கும் இடையே ஒரு பாலம் இருந்ததாகவும், அது நாளடைவில் மணல்மேடுகளாக மாறிவிட்டன என்றும் தெரிகிறது. இப்பாலத்தை Adams Bridge என்று நாசா பெயரிட்டுள்ளது. அதன் நீளம் 16.5 மைல்கள். ராமேஸ்வரத்திற்கும் இலங்கைக்கும் இடையே ராமர் தலைமையில் கட்டப்பட்ட பாலம் இதுதானா என்று நிச்சயமாகத் தெரியவில்லை.

# 2. தமிழ்நாட்டிலுள்ள அருள்மிகு இராமர் திருத்தலங்கள்

**இராமேஸ்வரம்:**

பன்னிரண்டு ஜோதிர்லிங்கத் தலங்களுல் ஒன்று. இராவணனைக் கொன்ற பாவம் நீங்க, இராமர் சிவலிங்கப் பிரதிஷ்டை செய்து வழிபட்ட தலம். கயிலையிலிருந்து சிவலிங்கத்தை அநுமன் கொண்டுவரத் தாமதமானதால், சீதை மணலால் அமைத்த லிங்கத்தை இராமர் வழிபட்டார். அநுமன் கொண்டு வந்த லிங்கம் 'விஸ்வ லிங்கம்' என்ற பெயரில் தனிச் சந்நிதியில் பிரதிஷ்டை செய்யப்பட்டுள்ளது.

இறைவன்: ஸ்ரீ இராமநாத சுவாமி, இறைவி: பர்வதவர்த்தனி. மூலவருக்கு கங்கா ஜலம் மட்டுமே அபிஷேகம் செய்யப்படுகிறது.

கோயிலுக்குள் 22 தீர்த்தங்களும், வெளியில் 22 தீர்த்தங்களும் உள்ளன. இக்கோயிலில் 'பள்ளிகொண்ட பெருமாள், சேது மாதவர், மகாலக்ஷ்மி சந்நிதிகள் உள்ளன. திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர் பாடல் பெற்றது.

கோயிலுக்கு வடக்கில் 2 கி.மீ தொலைவில் கந்தமாதனப் பர்வதம் உள்ளது. இதில் இரு பாதச் சுவடுகள் உள்ளன. இவைகள் 'இராமர் பாதம்' என அழைக்கப்படுகின்றன.

**ஸ்ரீகோதண்டராமர் கோயில்:** தனுஷ்கோடி செல்லும் வழியில் 2 கி.மீ தொலைவில் உள்ளது.

**காசி-ராமேஸ்வரம் யாத்திரை:**

முதலில் இராமேஸ்வரம் வந்து கடலில் நீராடி, இராமநாதரைத் தொழுது, கடல் மண்ணையெடுத்துக் கொண்டு காசி சென்று கங்கையில் சேர்த்துவிட்டு, அங்கிருந்து கங்கை தீர்த்தத்தைக் கொண்டு வந்து இராமேஸ்வரம் இராமநாதருக்கு அபிஷேகம் செய்யவேண்டும்.

கோயில், கட்டிய பாலம், ராமரின் திருப்பாதங்கள், கந்தமாதனப் பர்வதம், ராமாயணப் பாத்திரங்களின் பெயரால் அமைந்த பல புனித தீர்த்தங்கள் முதலியவை ராமாயணத்துடன் சம்பந்தப் பட்டவைகள்.



இராமேஸ்வரம்



கந்தமாதனப் பர்வதம்

தேவி பட்டினம் ராமநாதபுரத்திலிருந்து 16 கி.மீ. தொலைவில் உள்ளது. இராமர் இலங்கை போகும் முன்பு, இங்குள்ள கடலில் நவபாஷாணத்தால் நவக்ரஹங்களை ஸ்தாபித்து வழிபட்டார்.

**திருப்புல்லாணி - தர்ப்ப சயனம்:**

இராமநாதபுரத்திலிருந்து 12 கி.மீ. தொலைவில் உள்ளது. 108 திவ்ய தேசங்களில் ஒன்று. தர்ப்பைப் புல்லின் மீது ஸ்ரீ பட்டாபிராமர் படுத்திருந்து வருணனை வேண்டிப் பாலம் கட்ட அனுமதி பெற்றார். விபீஷணன் சரண் புகுந்ததும் இத்தலத்தில்தான். மூலவர்: ஸ்ரீ ஜகந்நாதப் பெருமாள், தாயார்: பத்மாசனித் தாயார். கருவறையில் சீதை இல்லை. ஆதிசேஷன் உள்ளதால் இலட்சுமணன் இல்லை. ஆஞ்சநேயர், சூரியன், சந்திரன் முதலியோர் உள்ளனர். சீதையை மீட்டு வரும் வழியில் இங்கு வந்து பெருமாளைத் தரிசனம் செய்ததன் நினைவாக, சீதா, இலட்சுமணருடன் ராமர் அருள்பாலிக்கின்றார்.

இங்கு தசரதர், ஆதி ஜகந்நாதரை வேண்டிப் புத்திர காமேஷ்டி யாகம் செய்து ராமனைப் புத்திரனாக அடைந்தார் எனப்படுகிறது. திருமங்கை ஆழ்வாரால் மங்களாசாசனம் செய்யப் பெற்றது.

இங்கிருந்து 2 கி.மீ. தொலைவில் "ஆதி சேது" என்ற சமுத்திர ஸ்நான கட்டம் உள்ளது.

**உப்பூர் வெயிலுகந்த விநாயகர்:**

இவ்விநாயகரை வேண்டிப் பின் பாலம் கட்டும் வேலையை ராமர் துவங்கினார்.

**மன்னார் கோயில் ஸ்ரீவேதநாராயண ராஜகோபால சுவாமி, குலசேகர ஆழ்வார் கோயில்:**

திருநெல்வேலி மாவட்டம் அம்பாசமுத்திரம் அருகில் 2 கி.மீ. தொலைவில் உள்ளது. அஷ்டாங்க விமானத்தின் கீழே பெருமாள், ஸ்ரீதேவி, பூதேவியுடன் சுதை சிற்பத்தில் நின்ற கோலத்திலும், மேலே இருந்த கோலத்திலும், கிடந்த கோலத்திலும் அருள்பாலிக்கின்றார். அர்த்த மண்டபத்தில் ஸ்ரீ சீதா பிராட்டி, இலட்சுமணருடன் ராமரைத் தரிசிக்கலாம். குலசேகர ஆழ்வார் பூஜை செய்ததாகக் கருதப்படுகிறது. ஸ்ரீராமர் அருகிலேயே கூப்பிய கரங்களுடன் குலசேகரப் பெருமாளும் அருள்பாலிக்கின்றார்.

## தஞ்சாவூர், கும்பகோணம், மயிலாடுதுறை, திருவாரூர், நாகப்பட்டினம், பகுதியிலுள்ள தலங்கள்:

### கும்பகோணம் ஸ்ரீ இராமசுவாமி கோயில்:

பெரிய கடைவீதி தென் பகுதியில் உள்ளது. ராமருக்கு பட்டாபிராமர் என்று பெயர். பட்டாபிராமர், மனைவி சீதையுடன் ஒரே ஆசனத்தில் அமர்ந்த நிலையில், சாமரம் வீசும் சத்ருக்கனன், கோதண்டம் தாங்கிய லக்ஷ்மணன், குடை பிடிக்கும் பரதன், கையில் இராமாயணப் புத்தகத்துடன், வீணையும் ஏந்திய வண்ணம் அனுமனும் அருள்பாலிக்கின்றனர். மூலவருக்கு முன்பு இராமர், சீதை, இலக்குவன், அனுமன் ஆகியோரின் உற்சவ மூர்த்தங்கள் உள்ளன.

மண்டபத்தில் உள்ள தூண்களில் ஸ்ரீதேவி, பூதேவி மகா விஷ்ணுவிற்கு அபிஷேகம் செய்யும் காட்சி, சுக்ரீவ, விபீஷண பட்டாபிஷேகம், வாலி, சுக்ரீவன் சண்டைக் காட்சி, அகலிகை சாப விமோசனம் முதலியவை காண்பதற்கு அரியவையாகும். பிரகாரத்தைச் சுற்றியுள்ள மண்டபத்தில் ராமாயணத்தில் உள்ள அரிய காட்சிகள் மூலிகை வண்ணத்தால் வரையப்பட்டுள்ளது. கண்ணாடியால் செய்யப்பட்ட மூலவர் (தஞ்சாவூர் கண்ணாடி சிற்பம்) படம் ஒன்றும் உள்ளது. இக்கோயிலைக் கட்டிய அச்சுதப்ப நாயக்கரின் உருவச் சிலை, அவருடைய மனைவியர், புதல்விகளுடன் உள்ளது.

*அரியணை அநுமன் தாங்க அங்கதன் உடைவாள் ஏந்த*
*பரதன் வெண்குடை கவிக்க இருவரும் கவரி வீச*
*விரைசெறி குழலி ஓங்க வெண்ணையூர்ச் சடையன் தங்கள்*
*மரபுளோர் கொடுக்க வாங்கி வசிட்டனே புனைந்தான் மௌலி*

- (கம்பராமாயணம்)



தூண் ஒன்றில் உள்ள சிற்பம்

இந்நகரில் காமாட்சி ஜோசியர் தெரு அருகில் ஸ்ரீ பட்டாபிராமன் கோயில் ஒன்று உள்ளது.

**கும்பகோணம் ஸ்ரீ சார்ங்கபாணி கோயில்:**

நகரின் மையப் பகுதியில், ஸ்ரீகும்பேஸ்வரர் கோயில் செல்லும் வழியில் பொற்றாமரைக் குளத்தின் கிழக்கில் அமைந்துள்ளது. சோழநாட்டுத் திருப்பதிகளில் ஒன்று. மூலவர்: ஸ்ரீ சார்ங்கபாணி, ஆராவமுதன். உத்தான சயன திருக்கோலம். திருமாலின் திருவடியில் ஸ்ரீதேவி, பூதேவி, சப்த ரிஷிகள், பிரம்மா, சூரியன், வானவர், கந்தர்வர், கின்னரர் முதலியோர் உள்ளனர். தாயார்: கோமளவல்லி, படிதாண்டாப் பத்தினி. பொற்றாமரைக் குளத்தில் குழந்தையாக அவத்ரித்து, ஹேம ரிஷியால் வளர்க்கப்பட்டுத் தவம் புரிந்து பெருமாளை மணந்து கொண்டார். இத்திருமணம் ஆண்டுதோறும் தை மாதம் ஆறாம் நாள் உற்சவமாக நடைபெறுகிறது. ஐப்பசி அமாவாசையன்று பெருமாள், இத்திருக்கோயிலுக்குத் திருப்பணி செய்த பிரமச்சாரி நாராயண முனி என்ற பக்தருக்குச் சிரார்த்தம் செய்யும் நிகழ்ச்சி நடைபெறுகிறது. திருமழிசை ஆழ்வார், திருமங்கை ஆழ்வார், பூதத்தாழ்வார், பெரியாழ்வார், பேயாழ்வார், நம்மாழ்வார், ஆண்டாள் முதலியோர் மங்களாசாஸனம் செய்துள்ளனர்.

திருமாமணி மண்டபத்திலுள்ள தூண்களில் இராமாயணக் காட்சிகள் சித்தரிக்கப்பட்டுள்ளன. திருமாமணி மண்டபத்தின் வெளிப்புறத்தில் ராமர், சீதை, இலக்குவன், அனுமன் முதலியோரின் சந்நிதி உள்ளது.

**திருப்புள்ளம்பூதங்குடி - ஸ்ரீ வல்வில் ராமன் கோயில்:**

கும்பகோணத்திற்கு வடமேற்கே 11 கிலோ மீட்டரில், கொள்ளிடத்திற்கு தெற்காகவும், காவிரிக்கு வடக்காகவும் உள்ள இடைப்பட்ட இடத்தில் உள்ளது. இராமர் ஜடாயுவுக்கு இறுதிக்கடன் செய்து, சற்று ஓய்வு பெற்ற தலம். அருகில் சீதை இல்லை.

108 திவ்ய தேசங்களில் ஒன்று. மூலவர்: ஸ்ரீ வல்வில் ராமன், சங்கு, சக்கரத்துடன், நான்கு கரங்களுடன் புஜங்க சயனக் கோலத்தில் காட்சியளிக்கும் தலம். புஜங்க சயனத் திருக்கோலம். உற்சவர்: வல்வில் ராமன். தாயார்: பொற்றாமரையாள். உற்சவ மூர்த்திக்கு நான்கு கரங்கள் உள்ளன. திருமங்கை ஆழ்வாரால் மங்களாசாஸனம் செய்யப்பெற்றது.

**புது அக்கிரஹாரம் ஸ்ரீ பட்டாபிராமர் கோயில்**



இக்கோயில் திருவையாற்றுக்கும் கல்யாணபுரத்திற்கும் இடையில் காவிரி ஆற்றின் கரையில் அமைந்துள்ளது. ஸ்ரீராமரும், சீதையும் அமர்ந்திருக்க, லட்சுமணர் தனது வில்லோடு, மூத்தவனின் வில்லையும் தாங்கி நிற்கிறார். பரதன் குடை பிடிக்க, சத்ருக்கனன் சாமரம் வீசுகிறார், அனுமன் மண்டியிட்டு, இடது கரத்தால் ராமரின் திருவடியைத் தொட்டுக் கொண்டு, வலது கரத்தால் வாய் பொத்தியவண்ணம் காட்சி தருகிறார்.

அனுமன் தனியாக வீணை புத்தகத்துடன் காட்சி தருகிறார்.

**புன்னைநல்லூர் ஸ்ரீ கோதண்டராமர் கோயில்**

தஞ்சாவூருக்குக் கிழக்கே 5 கி.மீ. தொலைவில் பிரசித்திபெற்ற மாரியம்மன் கோயில் அருகில் உள்ளது.

இராமர், சீதை, லட்சுமணர், ஆஞ்சநேயர் நால்வரும் சாளக்ராம மூர்த்திகள். உற்சவ மூர்த்திகளும் அபூர்வ மூர்த்திகளாக எழுந்தருளி உள்ளனர். தனி அலங்கார மண்டபத்தில் ஸ்ரீவீர ஆஞ்சநேய மூர்த்தி, விஸ்வரூப கோலத்தில், நின்ற திருக்கோலத்தில் சேவை சாதிக்கிறார்.

இராமரையும், அருகிலுள்ள மாரியம்மனையும் தரிசித்து அருள் பெறுவோமாக.

**ஸ்ரீ விஜயராமர் கோயில், தஞ்சாவூர்**

ஸ்ரீ பங்காரு காமாக்ஷி அம்மன் கோயிலின் வலது புறம் அமைந்துள்ளது.

***"ராமன்" என்றாலே ஆனந்தமாக இருப்பவன் என்று அர்த்தம்; மற்றவர்களுக்கு ஆனந்தத்தைத் தருகிறவன் என்றும் அர்த்தம். எத்தனைவிதமான துக்கங்கள் வந்தாலும், அதனால் மனம் சலனம் அடையாமல் ஆனந்தமாகத் தர்மத்தையே அநுசரித்துக்கொண்டு ஒருத்தன் இருந்தான் என்றால் அது ராமன் தான். வெளிப்பார்வைக்கு அவன் துக்கப்பட்டதாகத் தெரிந்தாலும் உள்ளுக்குள் ஆனந்தமாகவே இருந்தான்.***

- ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி பெரியவாள் அருள்வாக்கு



திருவெள்ளியங்குடி
ஸ்ரீ கோலவல்வில்லி ராமர்



திருப்புள்ளம்பூதங்குடி
ஸ்ரீ வல்வில் ராமர்

**பட்டீஸ்வரம் ஸ்ரீ பட்டீஸ்வரர் திருக்கோயில்:**

கும்பகோணம்-ஆவூர் பாதையில் உள்ளது. காமதேனுவின் புதல்வி பட்டி பூஜித்தது. திருஞானசம்பந்தருக்காக நந்தி விலகியிருக்கும் தலம். இறைவன்: ஸ்ரீபட்டீஸ்வரர், இறைவி: ஞானாம்பிகை. இராவணனைக் கொன்ற பாபம் தீர, இராமர் வில் முனையால் கோடி தீர்த்தம் உண்டாக்கி, இராமநாதரைப் பிரதிஷ்டை செய்து வழிபட்டதாக வரலாறு. இராமலிங்கர் சந்நிதியும், கோடி தீர்த்தமும் உள்ளன. சம்பந்தர் பாடல் பெற்றது.

**திருவெள்ளியங்குடி ஸ்ரீ கோலவல்வில்லி ராமர் கோயில்:**

கும்பகோணத்திலிருந்து அணைக்கரை செல்லும் சாலையில், சோழபுரத்திலிருந்து 6 கி.மீ. தொலைவில் உள்ளது. இதனருகில் சண்டிகேஸ்வரரும், பெரியவாச்சான்பிள்ளை என்ற வைணவப் பெரியாரும் அவதரித்த திருச்சேய்ஞலூர் என்ற தலம் உள்ளது. 108 திவ்ய தேசங்களில் ஒன்று. மூலவர்: ஸ்ரீ க்ஷீராப்தி நாதர், கோலவில்லி ராமர் புஜங்க சயனத்தில் அருள்பாலிக்கின்றார். உற்சவர்: சிருங்கார சுந்தரர். தாயார்: மரகதவல்லித் தாயார். கருடாழ்வார் நான்கு கரங்களுடன் சங்கு, சக்கரத்துடன் காட்சியளிக்கிறார். திருமங்கை ஆழ்வாரால் மங்களாசாசனம் செய்யப்பெற்ற தலம். தல விருட்சம்: செவ்வாழை. இது வைணவ சுக்கிரத் தலம்.

இதர வைணவ நட்சத்திரத் தலங்கள்: 1. சூரியன் - குடந்தை சார்ங்கபாணி, 2. சந்திரன் - நாதன் கோயில், நந்திபுர விண்ணகரம், 3. அங்காரகன் - திருநறையூர், நாச்சியார் கோயில் 4. புதன் - திருப்புள்ளம் பூதங்குடி 5. குரு - திருஆதனூர் 6. சனி - திருவிண்ணகரம், ஒப்பிலியப்பன் கோயில் 7. ராகு - கபிஸ்தலம் 8. கேது - திருக்கூடலூர்.

**ஆடுதுறை பெருமாள் கோயில் - வடகுரங்காடுதுறை:**

கும்பகோணம் - திருவையாறு சாலையில் உள்ளது. வாலி வழிபட்ட தலம், வாலி வழிபடும் சிற்பம் உள்ளது. இறைவன்: ஸ்ரீ வாலி நாதர். இறைவி: ஸ்ரீ ஜடா மகுடேஸ்வரி. சம்பந்தர் பாடல் பெற்றது. இத்தலத்தில் நடராஜப் பெருமான், அன்னை சிவகாமியுடன் சிலா ரூபத்தில் காட்சியளிக்கின்றார்.

**கபிஸ்தலம் ஸ்ரீ கஜேந்திர வரதராஜப் பெருமாள் கோயில்:**

சோழநாட்டு திவ்யதேசம். திருவையாற்றிலிருந்து கும்பகோணம் செல்லும் வழியில் உள்ளது. பஞ்ச கிருஷ்ண க்ஷேத்திரங்களில் ஒன்று.

கும்பகோணம் நாகேஸ்வர சுவாமி கோயில், ராமசுவாமி கோயில், திருப்புள்ளமங்கை, திருச்சி அருகே வெள்ளறை, ஸ்ரீரங்கம் கோயில் ரங்கவிலாச மண்டபம், அழகர் கோயில் வசந்த மண்டபம், புதுக்கோட்டை திருக்கோகர்ணம் கோயில், உடையார்பாளையம் பெருமாள் கோயில், மன்னார்குடி ராஜகோபால சுவாமி கோயில், ஸ்ரீவில்லிபுத்தூர், தர்மபுரி மாவட்டம் அதமன் கோட்டை முதலிய இடங்களில் ராமாயண காட்சிகள் சித்திரங்களாகத் தீட்டப்பட்டுள்ளன.

கஜேந்திரனுக்கு சாப விமோசனம் அளித்த தலம். ஆஞ்சநேயருக்கு இறைவன் காட்சி அளித்த தலம். ஆழ்வார்களால் மங்களாசாசனம் செய்யப்பெற்றது.

**பாபநாசம் :** 108 சிவலிங்கக் கோயில். இராமர் பிரதிஷ்டை செய்து வழிபட்டது. தஞ்சாவூர் - கும்பகோணம் பேருந்து தடத்தில் உள்ளது. ஆடுதுறை (தென் குரங்காடுதுறை) ஸ்ரீ ஆபத் சகாயேஸ்வரர் கோயில்.

கும்பகோணம் - மயிலாடுதுறை சாலையில் உள்ளது. சுக்ரீவன் வழிபட்டதலம். சம்பந்தர், அப்பர் பாடல் பெற்றது. மண்டபத்தில் சுக்ரீவன் பெருமானை வழிபடும் சுதை சிற்பம் உள்ளது,

**வடுவூர் ஸ்ரீ கோதண்டராமர் கோயில்:**

தஞ்சாவூர் - மன்னார்குடி சாலையில் 24 கி.மீ. தொலைவில் பெரிய ஏரிக்கருகில் அமைந்துள்ளது. தென்னக அயோத்தி என்றும் அழைக்கப்படுகிறது. மூலவர்: ஸ்ரீ கோதண்டராமர். மார்பில் மகாலக்ஷ்மி பதக்கம், சாளக்ராம மாலை அணிந்திருக்கிறார். உற்சவ ராமர், சீதை, இலக்குவன், அனுமன் ஆகிய மூர்த்தங்கள் புகழ் பெற்றவை. தஞ்சாவூரை ஆண்ட சரபோஜி மன்னன் காலத்தில், தலைஞாயிறு என்ற இடத்தில் புதையுண்டிருப்பதை, கனவில் அறிந்து, அங்கிருந்து கொண்டுவரப்பட்டு, இத்தலத்தில் பிரதிஷ்டை செய்யப்பட்டவை உற்சவ மூர்த்திகள். ஸ்ரீலட்சுமி ஹயக்ரீவரும், உபய நாச்சியாருடன் கல்யாண நர்த்தன கோபாலரும் உள்ளனர். ராமரின் நட்சத்திரமான புனர்பூசத்தில் திருமஞ்சனம் சிறப்பாக நடைபெறுகிறது. முன் மண்டபத்தில் ருக்மணி சத்யபாமாவுடன், கோபாலன், தேசிகர், மணவாள மாமுனிகள், ஆழ்வார்கள் சந்நிதியும், ஒரு கண்ணாடி அறையும் உள்ளன. இங்குள்ள தேரில் இராமாயணமும், மகாபாரதமும் சித்தரிக்கப் பெற்றுள்ளன.

**நீடாமங்கலம் ஸ்ரீ சந்தான ராமசுவாமி கோயில்:**

மராட்டிய மன்னர் பிரதாபசிம்மராவ் கட்டிய கோயில். முத்துசுவாமி தீக்ஷிதர் பாடல் பெற்றது.

**நரசிங்கன்பேட்டை ராமர் சீதை கோயில்:**

கும்பகோணம் - மயிலாடுதுறை வழியில் உள்ளது.

**பாஸ்கரராஜபுரம் கோதண்டராமஸ்வாமி கோயில்:**

திருவிடைமருதூர் வட்டம் பாஸ்கரராஜபுரத்தில், திருக்கோடிக்காவிற்கு கிழக்கில் உள்ளது இக்கோயில்.

**திருக்காழிச் சீராம விண்ணகரம்:**

சீர்காழி இரயில் நிலையத்திலிருந்து 1கி.மீ. தொலைவில் உள்ள திவ்ய தேசம். இராமர் வழிபட்ட தலம்.

மூலவர்: ஸ்ரீ தாடாளப் பெருமாள். உலகளந்த திருவுருவம்.

தாயார்: லோக நாயகி. பெருமாள் சந்நிதிக்கு அருகில் இராமர், சீதை, இலக்குவன், அனுமன் முதலியோர் தனிச் சந்நிதியில் உள்ளனர். திருமங்கை ஆழ்வாரும், மணவாள மாமுனிகளும் மங்களாசாஸனம் செய்துள்ளனர்.

**வைத்தீஸ்வரன் கோயில்:**

வைத்தீஸ்வரன் கோயில் சீர்காழிக்கு அருகில் உள்ளது. புள் (சடாயு) இருக்கு (வேதம்) வேள் (முருகன்) ஊர் (சூரியன்) என்ற நால்வரும் வழிபட்டதால் புள்ளிருக்கு வேளூர் என்று பெயர் பெற்றது, சடாயு பூஜித்ததால் சடாயுபுரி என்று பெயர். இறைவன்: ஸ்ரீ வைத்தியநாதர்; இறைவி : தையல் நாயகி.

முருகப் பெருமான் செல்வ முத்துக்குமார சுவாமியாக எழுந்தருளியுள்ளார். அங்காரகத் தலம். சடாயு வழிபட்ட லிங்கமும் உற்சவ மூர்த்தமும் உள்ளது. சம்பந்தர், அப்பர் பாடல் பெற்றது.

**ஸ்ரீ செம்பொன்னரங்கர் கோயில்:**

சீர்காழிக்குத் தென்கிழக்கே திருநாங்கூர் திவ்ய தேசங்களில் ஒன்றாக அமைந்துள்ளது. இராமர் இராவண வதத்திற்குப் பிறகு, பிரம்மஹத்தி தோஷ நிவர்த்திக்காக இத்தலத்திற்கு வந்தார். த்ருடநேத்ர முனிவரின் ஆஸ்ரமத்தில் தங்கி, முனிவர் சொல்லியபடி, தங்கத்தினால் ஒரு பசு செய்து, பிராமணர் ஒருவருக்குத் தானம் செய்தார்.

அந்த பிராமணர், ராமர் கொடுத்த தங்கப் பசுவைக் கொண்டு, இந்தக் கோயிலைக் கட்டியதால் 'செம்பொன்செய் கோயில்' என்ற பெயர் ஏற்பட்டதாக வரலாறு. மூலவர்: ஸ்ரீ பேரருளாளன். தாயார்: அல்லிமாமலர் நாச்சியார். திருமங்கை ஆழ்வார் மங்களாசாஸனம் செய்துள்ளார்.

தை அமாவாசை கழிந்த மறுநாள் திருநாங்கூர் பதினோறு திவ்யதேச எம்பெருமான்களும், 11 கருட வாகனங்களில் எழுந்தருளும் கருடசேவை மிகவும் பிரபலமானது. வருடா வருடம் நடைபெறுகிறது. திருஅரிமேய விண்ணகரம், திருவண் புருடோத்தமம், திருச்செம்பொன்செய் கோயில், திருமணிமாடக் கோயில், திருவைகுந்த விண்ணகரம், திருத்தெற்றியம்பலம், திருத்தேவனார் தொகை, திருமணிக்கூடம், திருவெள்ளக்குளம், திருக்காவளம்பாடி, திருப்பார்த்தன்பள்ளி, திருவாலி-திருநகரி ஆகிய தலங்களாகும்.

**தில்லை விளாகம் ஸ்ரீ வீரகோதண்டராமர் கோயில்:**

திருத்துறைப்பூண்டியிலிருந்து 20 கி.மீ. தொலைவில், முத்துப்பேட்டை மார்க்கத்தில், தில்லை விளாகம் ரயிலடியிலிருந்து 3 கி.மீ தொலைவில் உள்ளது. மூலவர்: ஸ்ரீ வீரகோதண்டராமர், சீதா தேவி, இலக்ஷ்மணர், அனுமன் முதலியோரின் ஐம்பொன் விக்ரகங்களே, இக்கோயிலின் மூல மூர்த்திகள். இவை நிலத்தினடியில் கிடந்ததாகவும், அவைகளை 1862ல் எடுத்து கோயில் அமைத்ததாகவும் கூறப்படுகிறது. மூர்த்தங்கள் மிக அழகாக உள்ளன. தனித்தனியே பிரிந்திருக்கும் விரல்களுடன் கரங்கள், நகங்கள், கைரேகைகள், இடது கரத்தில் ரட்சை, வலது கரத்தில் ராமசரம், கோதண்டம், அம்பு உடனிருக்க, வலதுபுறம் சீதா தேவி நின்ற கோலத்திலும், இலக்ஷ்மணன் சற்று கோபமான முகத்துடனும், இடக்கை தொடையில் வைத்து வாய் பொத்திப் பணிவுடன் அநுமன் நிற்கும் காட்சியும் மிகவும் அருமையாக உள்ளது. பிரகாரத்தில் இராமாயணக் காட்சிகள் சிலவற்றை வண்ணச் சித்திரமாக வரைந்துள்ளனர்.

இம்மூர்த்திகள் கிடைத்த 30 ஆண்டுகளுக்குப் பிறகு, அம்பலக்குளம் என்ற இடத்தில் ஸ்ரீ நடராஜர், சிவகாமி அம்பிகை சிலைகள் கிடைத்தன! அவைகளும் ராமர் சிலை போலவே அழகாக உள்ளன. இராமர் சந்நிதிக்கு வலப்புறத்தில் தனிக் கோயிலில் ஸ்ரீசிவகாமி சமேத நடராஜர், கணபதி, சுப்ரமணியருடன் எழுந்தருளி உள்ளார்.

தில்லை விளாகம்: இது ஆதியில் 'தில்லைச் சித்திரகூடம்' என்று பேர் பெற்றிருக்கக் கூடும்தான். தில்லைக்குரிய நடராஜாவும், சித்ரகூடத்துக்கு உரிய ராமரும் சேர்ந்து இருக்கும் இந்த ஊருக்குத்தானே இந்தப் பெயர் ரொம்பப் பொருத்தம்?

(நன்றி: தெய்வத்தின் குரல் - ஏழாம் பகுதி - தில்லை விளாகம் ராமவிக்ரஹச் சிறப்பு)

**பருத்தியூர் ஸ்ரீ கல்யாணவரதராஜப் பெருமாள் கோயில்:**

திருவாரூர் மாவட்டம், குடவாசல் வட்டத்தில் உள்ளது. ஆதி வரதராஜர், கல்யாண வரதராஜர் என்று இரண்டு வரதராஜர் உள்ளனர். இராமர் தெற்கு நோக்கிய சந்நிதியில், சீதை, இலக்ஷ்மணர், ஆஞ்சநேயருடன் காட்சி தருகிறார். மகாலக்ஷ்மி தாயாருக்குத் தனி சந்நிதி உள்ளது.

(தில்லைவிளாகம், திருச்சேறை, பருத்தியூர், கப்பலூர் போன்ற தலங்களில் உள்ள உற்வசத் திருமேனிகள் தமிழக கலை சிறப்புகளைப் பறைசாற்றுகின்றன. விஜயநகர மன்னர் காலத்திலும், தஞ்சையை ஆண்ட நாயக்கர் காலத்திலும் உள்ள நாணயங்களில் ராமர் வடிவம் இடம்பெற்றிருந்தது குறிப்பிடத்தக்கதாகும்).

**திலதைப்பதி - செதலபதி ஸ்ரீ முத்தீஸ்வரர் கோயில்:**

மயிலாடுதுறை - திருவாரூர் சாலையில் பூந்தோட்டம் அருகில், அரிசிலாற்றின் கரையில் உள்ளது. திலதர்ப்பணபுரி என்ற பெயரே மருவி திலதைப்பதி என்றாயிற்று. இங்கு இராம, லக்ஷ்மணர்கள், தன் தந்தை தசரதற்கும், ஜடாயுவுக்கும் தர்ப்பணம் செய்ததாக வரலாறு. இச்சிற்பம் கோயில் பிரகாரத்தில் உள்ளது. இறைவன்: ஸ்ரீ முத்தீஸ்வரர். இறைவி: சுவர்ணவல்லி. விநாயகர் தும்பிக்கையில்லாமல் 'ஆதி விநாயகராகக்' காட்சி தருகிறார். திருஞானசம்பந்தர் பாடல் பெற்றது. அருகிலுள்ள கூத்தனூரில் சரஸ்வதி தேவிக்கு தனிக் கோயில் உள்ளது.

**திருக்கண்ணபுரம் ஸ்ரீ சௌரிராஜப் பெருமாள் கோயில்:**

பஞ்ச கிருஷ்ண க்ஷேத்திரங்களில் ஒன்றாகவும், பரமபத வாசல் இல்லாத மண்ணிலமைந்த விண்ணகரமாகவும், எட்டெழுத்துக்களின் மொத்த வடிவினராக உள்ள தலமாகவும், ஆழ்வார்களால் மங்களா சாசனம் செய்யப்பட்ட திருப்பதிகளில் அதிக பாசுரங்கள் பெற்ற பெருமையுடையதாகவும் உள்ள தலம். மூலவர்: ஸ்ரீ நீலமேகப் பெருமாள். உத்சவர்: சௌரிராஜப் பெருமாள். தாயார்: கண்ணபுர நாயகி. இங்கு விபீஷணருக்கு நடை அழகைக் காட்டியதாக ஐதீகம். விபீஷண ஆழ்வார் சந்நிதியும், சீதை, இராமர் சந்நிதியும் உள்ளன.

குலசேகர ஆழ்வார்,

*மன்னு புகழ் கோசலை தன் மணி வயிறு வாய்த்தவனே !*
*தென்னிலங்கைக் கோன்முடிகள் சிந்துவித்தாய் "செம்பொன் சேர்!*
*கன்னிநன்மா மதில்புடைசூழ் கனபுரத்தென் கருமணியே !*
*என்னுடைய இன்னமுதே ! இராகவனே ! தாலேலோ !*

என்று இத்தலத்து பெருமாளை இராமனாகக் கண்டு கோசலை, தாலாட்டுவது போல் தாலாட்டு பாடியுள்ளார்.

அருணகிரிநாதரும் திருச்செந்தூர் திருப்புகழில், கோசலை இராமரைக் கொஞ்சுவதாகப் பாடியுள்ளார்.

*எந்தை வருக ரகுநாயக வருக*
*மைந்த வருக மகனேயினி வருக*
*என்கண் வருக எனதா ருயிர் வருக அபிராம*
*இங்கு வருக அரசே வருக முலை*
*யுண்க வருக மலர்சூ டிட வருக*
*என்று பரிவி னொடு கோசலை புகல வருமாயன்*

- தொந்தி சரிய - திருச்செந்தூர்

**திரு இராமனதீச்சரம் (திருக்கண்ணபுரம்)**
**ஸ்ரீ இராமனதீஸ்வரர் கோயில்:**

திருக்கண்ணபுரம் ஸ்ரீ சௌரிராஜப் பெருமாள் கோயிலுக்கு அருகில் உள்ளது. இராவணனைக் கொன்ற பழிதீர, ராமர் இத்தலத்து இறைவனை வழிபட்டதாக வரலாறு. இறைவன்: ஸ்ரீ இராமனதீஸ்வரர், இறைவி: கருவார்குழலி, தனிக் கோயில். திருஞானசம்பந்தர் பாடல் பெற்றது. ராமர் வழிபட வரும்போது நந்தி தடுத்ததாகவும், தேவி குறுக்கிட்டு, ராமர் வழிபட உதவி செய்ததாகவும் வரலாறு.

**திரு உசாத்தானம் ஸ்ரீ மந்திரபுரீஸ்வரர் கோயில்:**

முத்துப்பேட்டைக்கு அருகில் உள்ளது. இராமர், இலக்குவன், ஜாம்பவான், சுக்ரீவன், அநுமன், இந்திரன் ஆகியோர் வழிபட்ட தலம். விசுவாமித்திரருக்கு ஈசன் நடனக் காட்சி அருளிய தலம். இராமர் சேது அணை கட்டுவதற்கு இத்தல இறைனிடம் மந்திர உபதேசம் பெற்றதாக வரலாறு. எனவே இறைவனுக்கு மந்திரபுரீஸ்வரர் என்ற பெயர் வழங்குகிறது. மேலும் கடலில் அணை கட்டுவதற்குரிய வழிமுறைகளை, ராமர் இத்தலத்து இறைவனிடம் உசாவிய (கேட்டறிந்த) காரணத்தால் இத்தலம் உசாத்தானம் என்று பெயர் பெற்றது.

இவ்வரலாற்றுக்கு ஆதரவாக இவ்வூருக்கு அருகில் இராமன் கோயில், சாம்பவான் ஓடை, அநுமான் காடு, சுக்ரீவன்பேட்டை, தம்பிக்கு நல்லான் பட்டினம் முதலிய ஊர்கள் உள்ளன.

இறைவன்: ஸ்ரீ மந்திரபுரீஸ்வரர். இறைவி: பெரியநாயகி. இராமர் வழிபட்ட லிங்கம் உள்ளது.

**திருஞானசம்பந்தர் பாடல் பெற்றது.**

*நீரிடைத் துயின்றவன் தம்பிநீள் சாம்புவான்*
*போருடைச் சுக்கிரீ வன்அநு மான்தொழக்*
*காருடை நஞ்சுண்டு காத்தருள் செய்தஎம்*
*சீருடைச் சேடர்வாழ் திருவுசாத் தானமே*

- (மூன்றாம் திருமுறை)

**திருவாரூர் ஸ்ரீ தியாகராஜா கோயில்:**

சப்த விடங்கத் தலங்களில் முதன்மையானது, தியாகராஜ மூர்த்தி அஜபா நடன மூர்த்தியாகத் திகழும் தலம். பெரிய கோயில்; பல சந்நிதிகளைக் கொண்டது. இறைவன்: ஸ்ரீவன்மீகநாதர். இறைவி: கமலாம்பிகை, அல்லியங்கோதை. இராமபிரான் வழிபட்ட தலம்.

**குடவாயில் ஸ்ரீகோணேஸ்வரர் கோயில்:**

கும்பகோணத்திலிருந்து 15 கி.மீ. தொலைவில் உள்ளது. பிரளய காலத்தில் இறைவன் உயிர்கள் அனைத்தையும் அமிர்த குடம் ஒன்றில் வைத்து காத்தார். அமிர்த குடத்தின் வாயிலை கருடன் தன் மூக்கினால் பிளந்து வெளிப்படுத்தியதால் இத்தலம் இப்பெயர் பெற்றது. இறைவன்: ஸ்ரீகோணேஸ்வரர். இறைவி: பெரியநாயகி. சம்பந்தர் பாடல் பெற்றது.

**திருப்பள்ளி முக்கூடல் ஸ்ரீ அஞ்சனாட்சி சமேத திருநேத்திரநாதர் திருக்கோயில்**

திருவாரூரிலிருந்து 5 கி.மீ. தொலைவில் உள்ளது. ஜடாயு வழிபட்டதால் 'குருவி ராமேஸ்வரம்' என்றும் அழைக்கப்படுகிறது. கோயிலில் முகப்பில் இராமர், ஜடாயு சுதை உருவங்கள் உள்ளன.

இறைவன்: ஸ்ரீ திருநேத்திரநாதர்; இறைவி: ஸ்ரீ அஞ்சனாட்சி இங்கு இராமர் தம் தந்தைக்கு பிதிர்க் கடன் செய்ததாக வரலாறு. மூர்க்க ரிஷி பூசித்த தலம். திருநாவுக்கரசர் பாடல் பெற்றது.

**முக்கூடல் தீர்த்தம்:**

ஜடாயு "ஒரே நேரத்தில் காசி, இராமேஸ்வரம் ஆகிய இரண்டு தலங்களில் நீராடி இறைவனைத் தரிசித்து முக்தி அடையவேண்டும் என்று நினைக்கிறேன். அவ்வாறே எனக்கு வரம் அருளவேண்டும்" என சிவபெருமானை வேண்ட, அவர் "இராவணன் சீதையை எடுத்து வரும் நேரத்தில் நீ அவனைத் தடுப்பாய். அப்போது அவன் உன் சிறகுகளை வெட்ட நீ வீழ்ந்து இறப்பாய்" என்றார். ஜடாயு, "பெருமானே! அப்படியானால் நான் காசி, இராமேஸ்வரம் முதலிய தீர்த்தங்களில் மூழ்கித் தீர்த்த பலனை அடைய முடியாமல் போகுமே? என் செய்வேன்!" என்று வேண்ட, இறைவன் முக்கூடல் தீர்த்தத்தை உண்டாக்கி அதில் மூழ்குமாறு பணிக்க, ஜடாயுவும் அதில் மூழ்கிப் பலன் பெற்றதால், இத்தீர்த்தத்தைத் திரிவேணி சங்கமத்திற்கு நிகராகக் கூறுகின்றனர். இதில் ஸ்நானம் செய்வோருக்கு பதினாறு மடங்கு தீர்த்த விசேஷப் பலனைத் தருவதால் இத்தீர்த்தம் "ஷோடச சேது" என்றழைக்கப்படுகிறது.

**வேதாரண்யம்:**

நாகப்பட்டினத்திலிருந்து 45 கி.மீ. தொலைவில் உள்ள கடற்கரைத் தலம். சப்த விடங்கத் தலங்களில் ஒன்று. அகத்தியருக்குச் சிவபெருமான் திருமணக் காட்சியைக் காட்டி அருளிய தலம். திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர் பாடல் பெற்றது. இராவணனைக் கொன்ற பாவம் தீர இங்கு கடலில் நீராடி வீரஹத்தி விநாயகரை வழிபட்டார். அவருடைய சந்நிதி வெளிப் பிரகாரத்தில் உள்ளது. இராமலிங்கர் சந்நிதியும் உள்ளது.

**ராமர் பாதம்:**

வேதாரண்யம் - கோடியக்கரை சாலையில் 3 கி.மீ. தொலைவில் உள்ளது. சீதையை மீட்பதற்காக ராமர் வேதாரண்யம் வந்தார். இங்குள்ள மணல்மேட்டில் இருந்து, ராவணனின் கோட்டையைப் பார்த்தபோது, கால் பதித்த மண்டபமே 'ராமர் பாதம்' எனப்படுகிறது.



## திருச்சி மாவட்டம் - ஸ்ரீரங்கம் அரங்கநாதர் கோயில்:

ஆதிசேஷன் மேல் பள்ளி கொண்ட பகவானைப் பிரமன் வழிபட்டுப் பூஜை செய்து வந்தான். அவனிடமிருந்து சூரியகுல மன்னனாகிய இக்ஷ்வாகு தவமியற்றி அந்த மூர்த்தியைப் பெற்றுப் பூஜித்தான். அவன் வம்சத்தினருக்கு அப்பெருமானே குலதெய்வமானார். அவரையே ஸ்ரீராமரும் வணங்கினார். பிறகு இராமபிரான் அம்மூர்த்தியை விபீஷணனுக்கு வழங்கினார். அதை விபீஷணன் இலங்கைக்கு எடுத்துச் செல்லும் போது, விநாயகரின் திருவிளையாடலால், தற்போதுள்ள இடத்தில் பெருமாள் கோயில் கொள்ளலானார்.

கம்பர் தனது இராமாயணத்தை இத்தலத்தில் அரங்கேற்றினார்.

### ஸ்ரீரங்கம் கோதண்டராமர்-பட்டாபி ராமர் கோயில்:

இத்தலத்தில் மேற்குறிப்பிட்ட இரண்டு கோயில்களும் உள்ளன.

*நன்மையும் செல்வமும் நாளும் நல்குமே*
*தின்மையும் பாவமும் சிதைந்து தேயுமே*
*சென்மமும் மரணமும் இன்றித் தீருமே*
*இம்மையே ராம என்ற இரண்டு எழுத்தினால்*

- கம்பராமாயணம்

### திருவண்ணாமலை மாவட்டம் நெடுங்குணம் (நெடுங்குன்றம்) ஸ்ரீ இராமச்சந்திர பெருமாள் கோயில்

இக்கோயில் திருவண்ணாமலை மாவட்டம், வந்தவாசியிலிருந்து சோத்துப்பாக்கம் செல்லும் வழியில் 24 கி.மீ. தொலைவில் உள்ளது.

இராவணனை அழித்துவிட்டு, அயோத்தி திரும்பும் வழியில் சுகப்பிரம ரிஷியின் வேண்டுகோளின்படி இராமர் தங்கிய இடம் நெடுங்குணம். கருவறையில் கையில் கோதண்டமின்றி, சின் முத்திரையுடன் ஸ்ரீயோகராமராகக் காட்சி தருகிறார். அருகில் சீதா தேவியும், லட்சுமணரும் உள்ளனர். அநுமன் தனது கையில் தர்ம சாஸ்திர நூலினை வைத்திருக்கிறார்! ஸ்ரீராம நவமி பத்து நாள் விழாவாகக் கொண்டாடப்படுகிறது. மலையின் உச்சியில் இராமர் திருவடிகள் உள்ளன.

அருகில் ஸ்ரீதீர்க்கஜலேஸ்வரர் கோயில் உள்ளது. இங்கு சுகப்பிரமருக்குச் சந்நிதி உள்ளது.

பெரணமல்லூருக்கு அருகிலுள்ள இராமநாத சமுத்திரம் என்ற ஊரில் யோக ராமர் திருத்தலம் உள்ளது.

**செய்யாறு ஸ்ரீ விஜயகோதண்டராமர் கோயில்:**

400 ஆண்டுகள் பழமையான ஸ்ரீபாதுகா ஸேவக அனுமார் கோயில். 1917ல் ஸ்ரீ விஜயகோதண்டராமர் கோயில் கட்டப்பட்டது. ஸ்ரீலக்ஷ்மி நாராயணர், லக்ஷ்மி ஹயக்ரீவர், ராமானுஜர், நம்மாழ்வார், சுவாமி தேசிகன் ஆகியோர் சந்நிதிகள் உள்ளன. ஆண்டு தோறும் ஸ்ரீராம நவமி விழா சிறப்பாகக் கொண்டாடப்பட்டு வருகிறது.,

**படவேடு ஸ்ரீ யோகராமச்சந்திர மூர்த்தி கோயில்:**

திருவண்ணாமலையிலிருந்து வேலூர் செல்லும் ரோடில் 50 கி.மீ. தொலைவிலுள்ள சந்தவாசல் என்ற இடத்திலிருந்து 7 கி.மீ. தொலைவில் உள்ளது.

இராமபிரான் வீராசனத்தில் அமர்ந்து வலது கரத்தை மார்பில் வைத்தவாறு யோகத்தில் அமர்ந்ததால், ஸ்ரீ யோகராமச்சந்திர மூர்த்தி என்று அழைக்கப்படுகிறார். அருகில் சீதா பிராட்டியுடன் இருவரும் ஒரே பீடத்தில் அமர்ந்தவாறு உள்ளனர். திருக்கரத்தில் சக்ரவர்த்திக்குரிய போர் ஆயுதங்கள் எதுவும் இல்லை, இலட்சுமணர் மட்டும் கையில் வில், அம்பு வைத்திருக்கிறார். ஆஞ்சநேயர் கையில் ஓலைச்சுவடியுடன் உள்ளார். மாசி மகத்தன்று கோதண்டராமர் மகாபலிபுரம் கடலில் தீர்த்தவாரி காண்பார்.

படவேட்டில் பிரசித்தி பெற்ற ஸ்ரீரேணுகாம்பாள் கோயில் உள்ளது. கோயிலின் பின்புறமுள்ள கோட்டை மலையில் வேணுகோபாலர் கோயில் உள்ளது.

**ஆரணி அருள்மிகு ஸ்ரீ புத்திர காமேஷ்டீஸ்வரர் திருக்கோயில்**

திருவண்ணாமலையிலிருந்து சுமார் 60 கி.மீ. தொலைவில் உள்ளது. இங்குள்ள கமண்டல நதி ஜமதக்னி முனிவரால் உருவாக்கப்பட்டது. இந்நதிக்கரையில் உள்ளது இக்கோயில். தசரத சக்ரவர்த்தி, பிள்ளை வரம் வேண்டி இந்நதிக்கரையில் 'புத்திர காமேஷ்டி

யாகம்' செய்ததாக வரலாறு. அதனால் இத்தலத்து இறைவனுக்கு ஸ்ரீ புத்திர காமேஷ்டீஸ்வரர் என்று பெயர் உண்டாயிற்று.

இறைவி: ஸ்ரீ பெரிய நாயகி தசரத சக்ரவர்த்திக்கும் சந்நிதி உண்டு. ஆனி பௌர்ணமியில் 'புத்திர காமேஷ்டி யாகம்' நடைபெறுகிறது. புத்திரப்பேறு வேண்டுவோர்கள் கலந்து கொள்கின்றனர்.

## செங்கல்பட்டு, காஞ்சிபுரம், திருவள்ளூர், சென்னை மாவட்டக் கோயில்கள்

### சிறுவாபுரி ஸ்ரீ பாலசுப்ரமணிய சுவாமி கோயில்

சென்னை-நெல்லூர் சாலையில், பொன்னேரிக்கு மேற்கே 6 கி.மீ. தொலைவில் உள்ளது இத்தலம்.

இராமருடைய புதல்வர்கள் லவன்-குசன் என்பவர்கள் இராமரோடு போர்புரிந்து ஜெயித்த தலம் சிறுவாபுரி என்பது இத்தல வரலாறு. இச்சிறுவர்கள் இருவரும் அம்பெடுத்துச் செலுத்தி வெற்றி பெற்றதால் 'சிறுவர் அம்பேடு' (சின்னம்பேடு) என இத்தலத்தின் பெயர் வழங்கலாயிற்று.

*சிறுவராகி யிருவரந்த கரி பதாதி கொடு பொருஞ்சொல்*
*சிலையி ராமனுடனே திர்ந்து சமராடித்*
*செயமதான நகர மர்ந்த அளகை போல வளமிகுந்த*
*சிறுவை மேவி வரமிகுந்த பெருமாளே*

(சிறுவரான லவ, குசர் என்னும் ராமரின் புதல்வர்கள் இருவரும் அந்த யானைப்படை, காலாட்படை இவைகளைக்கொண்டு, போரிடையே சொல்லும் சொற்களுடன், வில் ஏந்திய ராமருடன் எதிர்த்துப் போர் செய்து, வெற்றிகொண்ட நகரமான சிறுவை, குபேரனது அளகாபுரி போல வளப்பம் மிக்கதான சிறுவாபுரியில் வீற்றிருந்து வரங்களை நிரம்பத்தரும் பெருமாளே! என்று சிறுவாபுரித் திருப்புகழில் அருணகிரிநாதர் இந்நிகழ்ச்சியை வர்ணிக்கிறார்).

இறைவன்: ஸ்ரீ பாலசுப்ரமணியர். ஒரு திருமுகம், நான்கு திருக்கரங்களுடன் காட்சி தருகிறார்.

திருக்கரங்களில் ஜப மாலையும், கமண்டலமும் கொண்டு, பிரமசாஸ்தா கோலத்தில் அருள்பாலிக்கின்றார்.

உற்சவர்: மயில்மீது அமர்ந்து வலது காலைப் பாம்பின் தலைமீது வைத்தும், இடது காலை மடித்தும் அமர்ந்தவாறு, தேவியர் இருவருடன் காட்சி தருகிறார்.

வள்ளி மணவாளப் பெருமான் சந்நிதி, சிறுவாபுரி முருகன் அபிஷேகக் குழுவினரால் உருவாக்கப்பட்டது. இச்சந்நிதியில் "வள்ளி கல்யாணசுந்தரா" பஞ்சலோகப் படிமத்தையும் பிரதிஷ்டை செய்துள்ளனர். வள்ளி, முருகப் பெருமான் கரம் பற்றி ஆன்மாக்களுக்கு ஆனந்தம் அளிக்கும் அழகுக் காட்சியுடன் விளங்குகிறது.

இங்குள்ள மயில், நந்தி, விநாயகர், சுவாமி, அம்மன் அனைத்தும் பச்சைக் கல்லால் ஆனவை.

**கோயம்பேடு (கோசை நகர்) ஸ்ரீ குறுங்காலீஸ்வரர் கோயில்**

கோயம்பேடு மத்திய பேருந்து நிலையம் பகுதியில் இக்கோயில் அமைந்துள்ளது.

இராமரின் புதல்வர்களான குச, லவர் பூஜித்த ஸ்ரீ குறுங்காலீஸ்வரர், சிறிய இலிங்க மூர்த்தமாக, அறம் வளர்த்த நாயகியுடன் அருள்பாலிக்கிறார். இங்குள்ள முருகப் பெருமானை *"கோசை நகர் வாழவரும் ஈசடியார் நேசர் சருவேச முருகா அமரர் பெருமாளே"* என்று அருணகிரிநாதர் பாடியுள்ளார்.

**கோயம்பேடு ஸ்ரீ வைகுந்தபெருமாள் கோயில்**

கோயம்பேடு மத்திய பேருந்து நிலையம் பகுதியில், குறுங்காலீஸ்வரர் கோயில் அருகில் இக்கோயில் அமைந்துள்ளது. மூலவர்: ஸ்ரீவைகுந்தவாசர், தாயார்: கனகவல்லி. இராமரின் புத்திரர்களான லவ, குசன் வழிபட்டதாக வரலாறு. இங்கு லவ, குசனின் சிலா வடிவங்களுடன், வால்மீகி முனிவரின் மூர்த்தமும் உள்ளது.

சித்தாலப்பாக்கத்தில் ஸ்ரீஅபயஹஸ்த ராமர் கோயில் உள்ளது.

**ஸ்ரீ கோதண்டராமர் கோயில், ஊனமாஞ்சேரி**

வண்டலூரிலிருந்து இக்கோயிலுக்குச் செல்லலாம். இராமர், சீதை, இலக்ஷ்மணர், ஆஞ்சநேயர், சம்பந்தர் முதலியோர் அருள் பாலிக்கின்றனர்.

**ஸ்ரீ கோதண்டராமர் கோயில், செங்கல்பட்டு**

செங்கல்பட்டு நகரின் மையப் பகுதியில் இக்கோயில் அமைந்துள்ளது. இக்கோயில், செங்கல்பட்டு கோட்டையின் உள்ளிருந்து கி.பி. 1885ஆம் ஆண்டில் இப்போதுள்ள இடத்திற்கு முழுமையாக இடப்பெயர்ச்சி செய்யப்பட்டதாகும். கோதண்டராமர் ஆலயத்தில் வீர ஆஞ்சநேயர் சந்நிதி உள்ளது. வில்வம், புன்னை தல விருட்சங்கள்.

**ஸ்ரீ தேவநாத பெருமாள் கோயில், செட்டிபுண்ணியம், செங்கல்பட்டு**

தாம்பரம் - செங்கல்பட்டு மார்க்கத்தில், சிங்கபெருமாள் கோயிலிலிருந்து மேற்கே 2 கி.மீ. தொலைவில் உள்ளது. ஸ்ரீ தேவநாதன், ஹயக்ரீவர், சீதா லக்ஷ்மணர், அநுமன், வில்லுடன் இராமர் முதலியோர் காட்சி தருகின்றனர்.

**வடமதுரை ஸ்ரீ ஆதிலக்ஷ்மி சமேத ஆதிகேசவ பெருமாள் கோயில்:**

பிரசித்திபெற்ற பெரியபாளையம் அம்மன் கோயிலுக்கு அருகில் உள்ளது. மூலவர்: ஸ்ரீ ஆதிகேசவ பெருமாள், ராஜேந்திர சோழ மன்னனால் கட்டப்பட்டது. மன்னன் வடநாட்டு வெற்றியைக் கொண்டாடும் விதமாக இத்தலத்தில் "வடிவழகிய ராமரைப்" பிரதிஷ்டை செய்தான். இராமருடன், சீதை, லக்ஷ்மணன், அநுமன் முதலியோர் உள்ளனர்.

**ஸ்ரீகரிகிருஷ்ண பெருமாள் கோயில், பொன்னேரி**

சென்னையிலிருந்து 25 கி.மீ. தொலைவில் கல்கத்தா மார்க்கத்தில், ஆரணி ஆற்றங்கரையில் அமைந்துள்ளது பொன்னேரி என்னும் தலம். இங்குள்ள ஸ்ரீகரிகிருஷ்ணன் கோயிலில் தனிச் சந்நிதியில் இராமரின் சந்நிதி உள்ளது. இங்கு இலக்ஷ்மணன் வில், அம்பு இல்லாமல் அஞ்சலிக்கும் கரங்களுடன் இருப்பது சிறப்பு.

**காஞ்சிபுரம் ஸ்ரீ இராமநாதேஸ்வரர் திருக்கோயில்**

இக்கோயில் ஏகாம்பரநாதர் கோயிலுக்கு அருகில் உள்ளது. இராமர் இராவணனைக் கொன்ற பாவம் தீர, காஞ்சியில் சிவலிங்கம் நிறுவிப் பூஜை செய்த கோயில். சிவலிங்கம் இராமநாதேஸ்வரர் என்றழைக்கப்படுகிறது.

**திருநீர்மலை**

சென்னை- தாம்பரம் நெடுஞ்சாலையில் உள்ள பல்லாவரத்தில் இருந்து 5 கி.மீ. தொலைவில் உள்ள மலையிலும், அடிவாரத்திலும்

உள்ளது அருள்மிகு நீர்வண்ண பெருமாள் & அருள்மிகு ரங்கநாதர் திருக்கோயில். மலையடிவாரத்தில் நின்ற திருக்கோலத்திலும், மலையின்மேல் இருந்தான், கிடந்தான், நடந்தான் ஆகிய மூன்று திருக்கோலத்திலும் எழுந்தருளியுள்ளார்.

*"நின்றான் இருந்தான் கிடந்தான் நடந்தாற்கிடம் மாமலையாவது நீர்மலையே"*

என்று திருமங்கை ஆழ்வார் பாடியுள்ளார். பூதத்தாழ்வாரும் மங்களாசாசனம் செய்துள்ளார்.

மலையின்மேல் ஸ்ரீரங்கநாதர் சயனக் கோலத்தில் (கிடந்தான்) தென்திசை நோக்கி காட்சியளிக்கிறார். பக்கத்தில் ஸ்ரீரங்கநாயகித் தாயார் சந்நிதி உள்ளது. பிரகாரத்தில் பிரகலாதனுக்கு காட்சி தந்த ஸ்ரீ நரசிம்மர் (இருந்தான்) இங்கு சாந்த மூர்த்தியாக, அமர்ந்த கோலத்திலும், அருகில் திரிவிக்கிரமன் (நடந்தான்) சந்நிதியும் உள்ளது.

ஒருசமயம் வால்மீகி மகரிஷி ஸ்ரீரங்கம் போகும் வழியில் மலையின் மீதுள்ள மூன்று மூர்த்திகளையும் வழிபட்டு, கீழே இறங்கி கிழக்கு முகமாக நின்றுகொண்டு ஸ்ரீராமபிரானைக் குறித்து தியானம் செய்யும்பொழுது, ஸ்ரீரங்கநாதன் ராமபிரானாகவும், லக்ஷ்மி தேவி சீதாப் பிராட்டியாகவும், ஆதிசேஷன் இலக்ஷ்மணராகவும், சங்கு சக்கரங்கள் பரத சத்ருக்னராகவும், விஷ்வக்சேனர் சுக்கிரீவனாகவும், கருடன் அநுமனாகவும் காட்சி தந்து மறைந்ததாக வரலாறு. மகரிஷியின் பிரார்த்தனையையேற்று, எம்பெருமாள் மலையடிவாரத்தில் நீர்வண்ணப் பெருமானாகக் (நின்றான்) காட்சி தந்ததாக ஐதீகம். தாயார்: அணிமா மலர் மங்கை.

மலையடிவாரத்தில் சக்ரவர்த்தித் திருமகனுக்குத் தனிக் கோயில் உள்ளது. 'மணிகர்ணிகா' என்ற புஷ்கரணியும், நீராழி மண்டபமும் உள்ளது.

**குரங்கணில் முட்டம் ஸ்ரீ வாலீஸ்வரர் கோயில்**

காஞ்சிபுரம்-உத்திரமேரூர் வழியில் உள்ள தொண்டை நாட்டுத் தலம். வாலி குரங்கு வடிவிலும், இந்திரன் அணில் வடிவிலும். எமன் முட்டம்(காகம்) வடிவிலும் வழிபட்ட தலம், சம்பந்தரால் பாடல் பெற்றது.

**பொன்விளைந்த களத்தூர்:**

செங்கல்பட்டிலிருந்து 13 கி.மீ. தொலைவில் உள்ளது. பொன்விளைந்த களத்தூரிலிருந்து 4 கி.மீ. தொலைவில் உள்ளது 'பொன்பதிர்கூடம்'. இத்தலத்தை தேவராஜ மகரிஷி 800 ஆண்டுகளுக்கு முன் 'சதுர்புஜ கோதண்டராமரை' பிரதிஷ்டை செய்து ஆராதித்து வந்தார். மூலவர் ஒரே பீடத்தில் வலது புறத்தில் சீதா தேவியுடனும், இடதுபுறம் இலட்சுமணருடனும், நான்கு திருக்கரங்களுடன் காட்சி தருகிறார். ஆஞ்சநேயரும் சுவாமிக்கருகில் நின்றவாறு உள்ளார்.

இக்கோயிலின் பிராசீனப் பெருமாள் ஸ்ரீலட்சுமி நரசிம்மர், ஆழ்வார்கள், வால்மீகி ரிஷி முதலியோர் சந்நிதிகள் உள்ளன. இக்கோயிலில் தனிச் சந்நிதியில் ஸ்ரீதர்ப்பசயன சேதுராமர் அருள்பாலிக்கின்றார். கம்பர் மற்றும் துளசிதாசர் தங்களது இராமாயணத்தில் இந்த அதிசய இராமரைக் குறிப்பிட்டுள்ளார்கள். ஸ்ரீலட்சுமி நரசிம்மர் ஆலயத்திற்கு அருகில் ஸ்ரீ பட்டாபிராமர் கோயில் உள்ளது.

**மதுராந்தகம் ஏரி காத்த இராமர்**

இராவணனை வதம் செய்து, அயோத்திக்குத் திரும்புகையில் இத்தலத்தில் இறங்கியதாக வரலாறு. சென்னை - திருச்சி நெடுஞ்சாலையில் 80 கி.மீ. தொலைவில் அமைந்துள்ளது. இராமானுஜர் உகந்த திருத்தலம். பெரிய நம்பிகள் ஆவணி மாத சுக்ல பஞ்சமியன்று, இக்கோயிலில் உள்ள மகிழ மரத்தின் அடியில் பஞ்ச ஸம்ஸ்கார முத்திரையை அளித்து, த்வயம் என்ற மந்திரத்தையும் உபதேசித்தார்.

மூலவர்: ஸ்ரீகோதண்ட ராமர், ஏரிகாத்த ராமர்; தாயார்: ஜனகவல்லித் தாயார்.

இங்குள்ள ஏரி மிகப் பெரியது. ஆங்கிலேயர் காலத்தில் ஒருமுறை வெள்ளப்பெருக்கு ஏற்பட்டது. அவர் இராமரை வேண்ட, அவர் கனவில் ராமரும், லட்சுமணரும் வில் அம்புகளுடன் தோன்றி ஏரியைக் காவல் காத்ததாக வரலாறு. அது முதல் 'ஏரி காத்த ராமர்' என்ற பெயர் வழங்கலாயிற்று.

**திருப்புட்குழி ஸ்ரீவிஜயராகவப் பெருமாள் கோயில்:**

காஞ்சிபுரத்திலிருந்து வடமேற்காக 12 கி.மீ தொலைவில் உள்ள திவ்ய க்ஷேத்திரம். திருமங்கையாழ்வாரால் மங்களாசாசனம் செய்யப்பெற்றது.

தாயார்: மரகதவல்லித் தாயார். சீதையை இராவணன் சிறையெடுத்துச் சென்றபோது, அவனை எதிர்த்துப் போரிட்ட ஜடாயு, அவனால் வெட்டப்பட்டு இவ்விடத்தில் வீழ்ந்து, பின்பு சீதையைத் தேடி இவ்வழியில் வந்த இராமனிடம் விவரம் தெரிவித்துவிட்டு உயிர் நீத்தார். ஸ்ரீராமன் ஜடாயுவிற்கு மோட்சம் அளித்து, அந்திமச் சடங்குகளைச் செய்தார். இத்தலத்திற்கு திரு + புள் + குழி என்று பெயருண்டாயிற்று. கோயிலுக்கு எதிரில் ஜடாயுவுக்கு சந்நிதியும், மூலவர் தமது தொடையின் மீது ஜடாயுவை வைத்துக்கொண்டு, சம்ஸ்காரம் செய்யும் நிலையில் எழுந்தருளி இருக்கிறார். அந்த தாபத்தைத் தாங்க முடியாத தேவிகள் இடம் மாறி எழுந்தருளியிருக்கின்றனர். குழந்தைப்பேறு இல்லாதவர்கள் இத்தலத்தில் உள்ள ஜடாயு தீர்த்தத்தில் நீராடி, இரவில் மடியில் வறுத்த பயறு கட்டிக்கொண்டு, சந்நிதியில் படுக்க, மறுநாள் விடிந்தவுடன் அப்பயறு முளைத்திருக்குமாயின் அவர்கட்கு குழந்தைப்பேறு உண்டாகும். தாயார் மகிமையால் வறுத்த பயறு முளைக்கிறது!

**திருவள்ளூர் ஸ்ரீ வீரராகவப் பெருமாள்**

இக்கோயிலில் ஸ்ரீகோதண்டராமர் வில், அம்பு ஏந்தியபடி, வலப்புறத்தில் சீதாப் பிராட்டியுடன், லட்சுமணன், சத்ருக்கனன், வசிஷ்டர், விஸ்வாமித்திரர், ஆஞ்சநேயர், சுக்ரீவன், அங்கதன் முதலியோருடன் அருள்பாலிக்கின்றார்.

ஸ்ரீராம நவமியன்று வீரராகவப் பெருமாள், கோதண்டராமர் சந்நிதிக்குச் சென்று, அவர் திருக்கரங்களில் இருக்கும் வில் மற்றும் அம்புகளை எடுத்துக்கொண்டு வீதியுலா வருவார்.

**திருநின்றவூர் ஏரிகாத்த ராமர்:**

சென்னை - அரக்கோணம் ரயில் பாதையில், திண்ணனூர் ரயில்வே ஸ்டேஷனுக்கு அருகில் ஸ்ரீ என்னைப்பெற்ற தாயார் சமேத ஸ்ரீ பக்தவத்சலப் பெருமாள் திருக்கோயில் உள்ளது.

இவ்வூரிலுள்ள ஏரிக்கு அருகில் ஏரிகாத்த ராமர் கோயில் உள்ளது. இங்கு அநுமன் இரண்டு தோள்களிலும், இராம, லட்சுமணர்களைச் சுமந்தவாறு காட்சி தருவது இக்கோயிலின் தனிச்சிறப்பாகும்.

**எருமை வெட்டிப் பாளையம் ஸ்ரீராமர் கோயில்**

திருவள்ளூர் மாவட்டம், பொன்னேரி வட்டத்தில், காரனோடை அருகில், குசஸ்தலை ஆற்றின் கரையோரம், ஒரு குன்றின் மீது அமைந்துள்ளது கோயில். கார்க்கேய முனிவருக்கு காட்சி தந்த இராமர், சீதையை தன் மடியில் இடதுபுறம் வைத்து அணைத்த கோலத்தில் காட்சி தருகிறார். சாளக்கிராமத்தால் ஆன மூர்த்தங்கள். அருகில் வில்லுடன் இலட்சுமணரும், ஆஞ்சநேயரும் எழுந்தருளி உள்ளனர்.

அருகில் வரமுக்தீஸ்வரர் ஆலயமும், அங்காளபரமேஸ்வரி ஆலயமும் உள்ளன.

**ஸ்ரீ கோதண்டராமர் கோயில், மேற்கு மாம்பலம்**

மாம்பலம் ரயில் நிலையத்தின் அருகில் உள்ளது இக்கோயில். மூலவர்: ஸ்ரீ சீதா, லக்ஷ்மண சமேத ராமர். ராமர் சீதையைத் தன்மடிமீது அமர்த்தியவாறு, வலதுபுறம் லக்ஷ்மணன் குடை பிடிக்க, அனுமன் திருவடிகளைத் தாங்கிய வண்ணமும், பட்டாபிஷேக ராமராகக் காட்சி தருகிறார்.

**ஸ்ரீசுமைதாங்கிராமர் கோயில், தங்கசாலை, சென்னை - 600079.**

200 ஆண்டுகளுக்கு முற்பட்ட கோயில். இது பஜனை மடமாக இருந்து கோயில் கட்டப்பட்டது. இராமர், சீதை, இலக்ஷ்மணர், ஆஞ்சநேயர் முதலியோர் வழிபடப்படுகின்றனர்.

**ஸ்ரீ கோதண்டராமர் கோயில், நந்தம்பாக்கம்**

கிண்டியிலிருந்து பூந்தமல்லி செல்லும் வழியில் நந்தம்பாக்கத்தில் அமைந்துள்ளது இக்கோயில். சுமார் 500 ஆண்டுகள் பழமையானது. இராமர் தெற்கு நோக்கி வரும்போது, இவ்விடத்தில் வசித்து வந்த பிருங்கி முனிவரைத் தரிசித்து அவருடைய ஆஸ்ரமம் உள்ள நந்தவனத்தில் தங்கினார். அது நாளடைவில் நந்தம்பாக்கம் என மாறியதாகக் கூறுவர். இங்கு இராமர் சீதையை மடியில் வைத்தவாறு சேவை சாதிக்கிறார்.

திருவல்லிக்கேணியில் பிரசித்திபெற்ற ஸ்ரீ பார்த்தசாரதிப் பெருமாள் கோயிலில், ஸ்ரீராமருக்குத் தனிச் சந்நிதி உள்ளது.

**குரோம்பேட்டை ஸ்ரீ தனுஷ்கோடி கோதண்டராமர் திருக்கோயில்**

1964 ஆம் ஆண்டு அடித்த புயலில் சிக்கி தனுஷ்கோடி ஸ்ரீ கோதண்டராமர் சந்நிதி மூடப்பட்டது.

ஸ்ரீராமரின் விக்கிரகங்களை சில காலம் இராமநாதபுரத்திலும், திருப்புல்லாணியிலும் வைத்து பாதுகாத்தனர்.

1987 ஆம் ஆண்டு பல்லாவரத்தின் அருகிலுள்ள பம்மலில் கோயில் கட்டினார்கள்.

பிறகு குரோம்பேட்டை நேரு நகரில் வழக்கறிஞர் சம்பத்குமார், அவருடைய புதல்வர் இராமநாராயணன் இருவரும் கோயில் கட்டி, ஸ்ரீரங்கம் ஸ்ரீமத் ஆண்டவனின் ஆசீர்வாதம் பெற்று, இராமரைப் பிரதிஷ்டை செய்து விமரிசையாக கும்பாபிஷேகமும் செய்தனர்.

மடிப்பாக்கம், ராம் நகரிலுள்ள இராமர் கோவில் நினைவுறத் தக்கது.

பொதுவாக, வைணவத்திருத்தலங்களாகிய 108 திவ்ய தேசங்களிலும், இராமர் ஸந்நிதி இல்லாமலிருப்பது அரிதினும் அரிது.

.இவை தவிர ஸ்ரீராம சமாஜம், ஸ்ரீராம மண்டலி போன்ற சபைகளில் ஸ்ரீராமர் பட்டாபிஷேக படம் வைத்து வழிபடுகின்றனர். இங்கு ஸ்ரீராம நவமி சிறப்பாகக் கொண்டாடப்படுகிறது.

********



குரோம்பேட்டை ஸ்ரீ தனுஷ்கோடி கோதண்டராமர்

# 3. இதர மாநிலங்களில் உள்ள அருள்மிகு ராமர் திருத்தலங்கள்

## தெலங்கானா மாநிலம்

### பத்ராசலம் ஸ்ரீ சீதா ராமச்சந்திர சுவாமி திருக்கோயில்:

இக்கோயில் கம்பம் மாவட்டத்தில் கோதாவரி ஆற்றின் கரையில், தண்டகாரண்ய வனப் பகுதியில், சுமார் 160அடி உயரத்தில் உள்ளது. ராமர் 'வைகுண்ட ராமர்' என அழைக்கப்படுகிறார். மூலவர்: ஸ்ரீ வைகுண்ட ராமர், நான்கு கரங்களுடன், வலது மேல் கரத்தில் சங்கு, இடது மேல் கரத்தில் சக்கரம், வலது கீழ் கரத்தில் அம்பு, இடது கீழ் கரத்தில் வில் ஏந்தியபடி சீதா பிராட்டியை இடதுபுறமாக மடியில் அமர்த்தி, அணைத்த திருக்கோலத்தில் அருள்பாலிக்கின்றார். லக்ஷ்மணர் வில் அம்பு ஏந்தியபடியும், அனுமன், கருடன் மூவரும் நின்றவாறும் உள்ளனர். லக்ஷ்மி தாயாருக்குத் தனி சந்நிதி உள்ளது.

கோயிலுக்கு நான்கு புறமும் வாசல்கள் உள்ளன. கோயிலுக்குள் நுழையும் முன்பு அனுமன் மண்டபமும், கொடிமரத்தின் மீது அஷ்டமுக சுதர்சன சக்கரம் உள்ளது. பிரகாரத்தில் கோவிந்தராஜ சுவாமி கோயில் உள்ளது.

இங்கு நடைபெறும் ஸ்ரீசீதா - ராமர் திருக்கல்யாணத்தைத் துவக்கி வைத்தவர் பக்த ராமதாஸ். திருக்கல்யாணத்தில் அட்சதை தூவுவதை 'தலம்பிராலு' என்று சொல்லுவர். தலம்பிராலுவுக்கு அரசாங்கம் சார்பில் முத்துக்களை வழங்கும் பழக்கத்தை, கோல்கொண்டா முத்துக்களை வழங்கி ஏற்படுத்தி வைத்தவர் தானிஷா. ஆந்திரா, தெலங்கானா முதல்வர்களால், அரசு சார்பில் முத்துக்களை வழங்கும் சம்பிரதாயம் இன்றும் கடைப்பிடிக்கப்படுகிறது.

கோதாவரிக் கரையில் யோக நரசிம்மர், ஸ்ரீராமர், அநுமனுக்குத் தனிக் கோயில்கள் உள்ளன.

கோபண்ணா (ராமதாசர்) திருப்பணி செய்த தலம். தாசில்தாராகப் பணி செய்தபோது, தான் வசூலித்த அரசாங்க வரிப்பணம் முழுவதையும், கோயில் திருப்பணிக்கே செலவிட்டார். முஸ்லிம் அரசர் தானிஷா, கோபண்ணாவுக்கு 12 ஆண்டுகள் சிறைத்தண்டனை விதித்தார். கோல்கொண்டா மலைக் குகைச் சிறையில் அடைக்கப்பட்டார். கோபண்ணா

சிறையில் உள் சுவர்களில் ராமர், சீதை, லக்ஷ்மணன் முதலியோரின் உருவங்களை வரைந்து வழிபட்டு வந்தார்.

ஒருநாள் இரவு இரண்டு வாலிபர்கள் தானிஷாவைச் சந்தித்து, "கோபண்ணா செலவழித்த பணத்தை வட்டியோடு கொண்டு வந்திருக்கிறோம். பெற்றுக்கொள்ளுங்கள்", என்று சொல்லி, பொற்காசுகள் நிறைந்த மூட்டையைத் தருகிறார்கள். உடனே தானிஷா விழித்தெழுந்து பார்க்க, மூட்டை மட்டும் இருக்க, கொண்டு வந்தவர்களைக் காணவில்லை! வந்த இருவர் உருவங்களும், ராம, லக்ஷ்மணர் உருவத்துடன் ஒத்துப்போவதை உணர்ந்து, உடனே கோயிலுக்குச் சென்று, மூலவர் முன்பு மன்னிப்புக் கேட்டுக்கொண்டு, கோபண்ணாவை விடுதலை செய்தார். விடுதலையான கோபண்ணா 'ராமதாஸ்' என்ற பெயரில், ராமர் மீது கீர்த்தனைகள் இயற்றிப் பாடிய வண்ணம் இறைவனை அடைந்தார்.

பத்ராசலத்திற்கு 33 கி.மீ. தொலைவில் ராம லக்ஷமணர் தங்கியிருந்த பர்ணசாலை உள்ளது.



பத்ராசலம் ராம லக்ஷமணர்

**கீசரகட்டா ஸ்ரீ ராமலிங்கேஸ்வர சுவாமி கோயில்:**

தெலங்கானா மாநிலம் ரங்காரெட்டி மாவட்டத்தில், ஹைதராபாத்திலிருந்து 35 கி.மீ. தொலைவில் மலைமேல் அமைந்துள்ளது. இராமர் இலங்கையிலிருந்து திரும்பும்போது, இங்கு சிவலிங்கத்தை ஸ்தாபித்து வழிபட்டதாக வரலாறு.

**ஆந்திரா:**

கிழக்கு திருமலை திருப்பதி இராமர் வழிபட்ட தலம். திருப்பதியில் ராமானுஜரால் பிரதிஷ்டை செய்யப்பட்ட இராமர் கோயில் உள்ளது.

ஒண்டிமிட்டா ஸ்ரீகோதண்டராமர் கோயில்: கடப்பா மாவட்டத்தில் உள்ளது. இந்த புண்ணிய தலத்தில் பம்மேரா பொத்தண்ணா என்பவர் 'ஆந்திர பாகவதம்' இயற்றியுள்ளார்.

**இராமகிரி:**

சித்தூர் மாவட்டம், சத்தியவேடு வட்டத்தில், ஆரணி நதிக்கரையில் அமைந்துள்ளது. இராமர், இராவணனைக் கொன்ற பாவத்தால் உண்டான பிரமஹத்தி தோஷ நிவாரணமாக, இத்தலத்தில் ஒரு சிவலிங்கத்தைப் பிரதிஷ்டை செய்து வழிபட்டதால் காரிக்கரை என்ற ஊர் ராமகிரி என்றழைக்கப்படுகிறது. வாலீஸ்வரர், காலபைரவர், காளிகா தேவியுடன் அருள்பாலிக்கும் கோயில். நந்தி இருக்கும் இடத்தில் அனுமன் உள்ளார். அருகிலுள்ள மலையின்மீது ஸ்ரீ பாலசுப்ரமணிய சுவாமி கோயில் உள்ளது.

காகிநாடா ராமர் கோயில், தாட்பத்ரி, த்ராக்ஷாராமா, நிடதவோல், விஜயவாடா முதலிய இடங்களில் ராமருக்கு கோயில் உள்ளது.

**கேரளா:**

இம்மாநிலத்தில் திருச்சூருக்கு 22 கி.மீ. தொலைவில் உள்ள திருப்ரையார் க்ஷேத்திரத்தில் ஸ்ரீ ராமருக்கும், திருச்சூரிலிருந்து



நாலம்பலம்

40 கி.மீ. தொலைவில் ஆலுவாய் நகருக்கு 20 கி.மீ. வடக்கே திருமூழிக்களம் என்ற இடத்தில் இலக்குவனுக்கும், திருச்சூரிலிருந்து கொடுங்கல்லூர் வழியில் சுமார் 23 கி.மீ. தொலைவில் உள்ள இரிஞ்ஞாலக்குடாவில், கூடல்மாணிக்கம் என்ற இடத்தில் பரதனுக்கும், அங்கிருந்து 7 கி.மீ. தெற்கே பாயம்மல் என்ற இடத்தில் சத்ருக்னனுக்கும் கோயில்கள் உள்ளன. இந்த நான்கு கோயில்களும் ஒருசேர "நாலம்பலம்" என்று அழைக்கப்படுகின்றன. கருடன் சந்நிதி கிடையாது. திருமங்கை ஆழ்வார் மங்களாசாசனம் செய்துள்ளார். திருப்ரையார் கோயில் கருவறையில் மூலவர் சங்கு, சக்கரம், அக்ஷமாலை ஆகியவற்றோடு கோதண்டமும் ஏந்தியவாறு, ஸ்ரீதேவி, பூதேவி சகிதம் காட்சியளிக்கிறார்.

**ஸ்ரீ ராமசுவாமி கோயில் தலசேரி:**

கண்ணூர் மாவட்டம் தலசேரியில் உள்ளது இக்கோயில். மிக அழகான கோயில். இதை திருவங்காடு ராமசுவாமி கோயில், பிரஸ் பகோடா என்ற பெயரிலும் அழைப்பர். இங்குள்ள ஆஞ்சநேயருக்கு பழம், பால், சர்க்கரை, ஏலக்காய் சேர்ந்த அவல் நைவேத்தியமாகப் படைக்கப்படுகிறது.

**காச்சாம்குறிச்சி :**

கொல்லங்கோட்டிலிருந்து 4 கி.மீ. ராமச்சந்திர மூர்த்தி கோயில் உள்ளது.

**வில்வாத்ரி மலை:**

திருச்சூரிலிருந்து 45 கி.மீ. தொலைவில் ராமர் சீதை, லக்ஷ்மணர், ராம தீர்த்தம் உள்ளது.

**கர்நாடக மாநிலம்:**

ஸ்ரீகோதண்டராமர் கோயில், ஹம்பி: கோயில் வளாகத்தில் ராமர், லக்ஷ்மணர், சீதை முதலியோருக்குத் தனித் தனிக் கோயில்கள் உள்ளன.

ஸ்ரீராகவேந்திரர் கோயில், மந்திராலயம், ஹரேம்களூர், எடத்தூர், கூடலி, சிஞ்சன்சட்டி (கஞ்சன்கட்டே), மங்களூர் முதலிய இடங்களில் இராமர் கோவில்கள் உள்ளன.

**ஒரிசா:**

ஸ்ரீராம் மந்திர், கார்வேல் நகர், புவனேஸ்வர், ஸ்ரீரகுநாதர் கோயில், ஒடகரன் கஞ்சம் மாவட்டத்திலும் உள்ளது. கவிசாம்ராட் உபேந்திர பஞ்ஜா என்பவர் இக்கோயிலில் பல ஆண்டுகள் தங்கி புலமை பெற்றார்.

கோனாரக் சூரியனார் கோயில் அருகில் ஸ்ரீராமருக்குக் கோயில் உள்ளது. ராமநவமி உற்சவ காலங்களில் ஜகந்நாதர் கோயிலில் மூர்த்திகள் ராமர், சீதா, லக்ஷ்மணர் அலங்காரத்தில் அருள்பாலிக்கின்றனர்.

ராமசரிதமானஸை பாராயணம் செய்து வருகிறார்கள் ஒரியா மக்கள்.

ஸ்ரீரகுநாதர் கோயில், ஜம்மு, காஷ்மீரில் உள்ளது.

**மகாராஷ்டிரா:**

**பஞ்சவடி:** தண்டகாரண்ய மலைத்தொடரில் கோதாவரி நதிக் கரையில் அமைந்துள்ளது. ஐந்து ஆலமரங்கள் அருகருகாக வளர்ந்திருப்பதால் இப்பெயர் உண்டாயிற்று. இலக்ஷமணன் சூர்ப்பனகையின் மூக்கை அரிந்த இடம் நாஸிகா - நாசிக். நாசிக்கில் உள்ள த்ரியம்பகேசம், ஜோதிர்லிங்கத் தலங்களில் ஒன்று. கோதாவரியின் உற்பத்தி ஸ்தானம் இதுவும் கோதாவரியின் மற்றோர் கரையில் அமைந்துள்ளது.

பஞ்சவடியில் ராமர் கட்டம், சீதா கட்டம், இலக்ஷ்மணன் கட்டம் என்று மூன்று ஸ்நான கட்டங்கள் அமைந்துள்ளன.

நதிக்கரையில் கர்ப்பூரேஸ்வரர் ஆலயம் உள்ளது. சித்திரகூடம் இராமர் 11 ஆண்டுகள் வாழ்ந்த இடம். சித்ர-அழகிய; கூடம்-மலை. அலகாபாத்திலிருந்து 132 கி.மீ. தொலைவில் உள்ளது.

**பார்க்க வேண்டிய இடங்கள்:**

1. சதி அனுசூயா ஆஸ்ரமம்

2. ராம்காட் - மந்தாகினி நதிக்கரையில் அமைந்துள்ளது. இந்த இடத்தில் இராமர் துளசிதாசருக்குக் காட்சி தந்ததாக வரலாறு. ஒருமுறை கும்பமேளா சமயத்தில் திறக்கப்படுகிறது. இந்நதிக்கரையில் உள்ள மற்றுமொரு ஆலயம் கபாலேஸ்வரர் ஆலயமாகும். பிரம்மாவின் தலையைக் கொய்த இடம் எனப்படுகிறது..

கோதாவரி நதிக்கரையில் உள்ள மூன்றாவது தலம் காலாராம், கோராராம் என்ற இரு ஆலயங்கள் ஆகும். கோராராம் ஆலயத்தில் இராமர், சீதை, இலக்ஷமணர், அநுமன் ஆகியோர் விக்ரக மூர்த்திகள் வெள்ளைச் சலவைக் கல்லினாலும், காலாராம் ஆலயத்தில் கறுப்புக் கல்லினாலும் ஆனவைகள்.

**காலாராம் கோயில்:**

பஞ்சவதி மண்டலத்தின் மையப்பகுதியில் உள்ள நாசிக்கில் அமைந்துள்ளது. இங்கு இராமர் கறுப்பு நிறத்தில் இருப்பதால் "காலா ராம் கறுப்பு ராமர்" என்று அழைக்கப்படுகிறார்.

காலாராம் ஆலயம் சுண்ணாம்பு, வெல்லம், பாலேடு ஆகியவற்றால் ஆனது. இங்குள்ள இராமர் குகையில் இராம, இலக்ஷ்மணர்களுக்குத்தான் விக்கிரகங்கள் உள்ளன. சீதையை இராவணன் கவர்ந்து சென்றதால் இங்கு சீதைக்கு விக்கிரகம் இல்லை! கல்யாண் ராம்டேக் மலைமேல் ராமர் கோயில் உள்ளது. சதாரா மாவட்டத்தில் குரத்சாய் என்ற குன்றின்மேல் சீதைக்கு ஒரு கோயில் உள்ளது.

மத்தியப் பிரதேசம் பேத்வா நதிக்கரையில் ஆர்சா உஜ்ஜயினி, சாஞ்சி, கஜுராஹோ, ஜபல்பூர் குஜராத், ராஜ்கோட் முதலிய இடங்களில் இராமருக்கு கோயில் உள்ளது. பீஹார் மாங்கீர் அருகில் ராமர், சீதை கோயில் உள்ளது. ஸ்ரீ ராம் தீர்த் கோயில், அம்ரிட்சர் பஞ்சாபில் உள்ளது.

மிதிலாபுரியில் ராமர், சீதை கோயில் உள்ளது. ராமர் வில்லை முறித்து திருமணம் செய்துகொண்ட இடம். ஜானகி, ராமர், தசரதர் கோயில்கள் உத்தர பிரதேசம் அயோத்தி, சித்ரகூடம், சிம்லா, சீதாபூர் முதலிய இடங்களில் உள்ளன.

****



பொன்பதிர்கூடம் ஸ்ரீ சதுர்புஜ ராமர்

**இராமாயணத் திருத்தலங்கள்:**

1. **அயோத்தி:** ஸ்ரீ ராமரின் அவதாரத் தலம். சரயு நதிக்கரையில் உள்ளது. கோயில் கதவு தங்கத்தால் ஆனது. அம்மாஜி மந்த்ரா- சரயு நதியின் வடகரையில், குப்தகட்டாவிலிருந்து 4 கி.மீ. தொலைவில், ராமர் தமது அவதாரம் முடிந்து நதியில் இறங்கிய இடத்தில் உள்ளது. ஏழு முக்தி தரும் நகரங்களில் ஒன்று. மூலவர்: ஸ்ரீராமர், சக்ரவர்த்தித் திருமகன், ரகுநாயகன். வீற்றிருந்த கோலம். தாயார்: சீதா பிராட்டி
2. **பக்ஸார்:** கௌதமர் ஆஸ்ரமப் பகுதி, அகலிகைக்கு இங்கு சாப விமோசனம் கிடைத்தது.
3. **ஸோனாப்பூர்:** ஜனகர் ஏர் உழும்போது சீதையைக் கண்டெடுத்த இடம். சீதா மாஹி-பீஹார் மாநிலத்தில் உள்ளது. மிதிலா தேசம் பழைய பெயர், சீதை அவதாரத் தலம்.
4. **மிதிலை:** சீதைக்குத் திருமணம் நடந்த இடம்.
5. **பரத குண்டம்:** நந்தி கிராமம். ஸ்ரீ ராமர் பாதுகையை பரதன் வழிபட்ட இடம்.
6. **சித்திரகூடம்:** ஸ்ரீராமரும், பரதரும் சந்தித்த இடம்; கங்கையைக் கடக்க குகன் உதவிய இடம், அலகாபாத் அருகில் உள்ளது.
7. **நாசிக் (பஞ்சவடி):** இராவணனால் சீதை அபகரிக்கப்பட்ட இடம்.
8. **பஞ்சவடி:** பிரசித்தமான காலாராமர் கோயில் உள்ளது.
9. **கரவாடி:** ஆந்திராவில் உள்ளது. கரன் என்ற அரக்கன் கொல்லப்பட்ட இடம்.
10. **தொட்குருகாட்:** ராவணனுக்கும், ஜடாயுவுக்கும் சண்டை நடந்த இடம்.
11. **கிஷ்கிந்தை:** ரிச்யமுக பர்வதம், பெல்லாரிக்கு மேற்கே துங்கபத்ரா நதிக்கரையில் உள்ளது.
12. **பத்ராசலம்:** தண்டகாரண்யத்தில் ஸ்ரீராமர் எழுந்தருளிய இடம். அந்தப் பாறையில் தெரியும் பாதச் சுவடுகள் ஸ்ரீராமருடையது என்பது ஐதீகம்,
13. **பூதப்பாண்டி:** ஸ்ரீராமர் ராவண சம்ஹாரத்திற்குப் பிறகு, அயோத்தி திரும்பியபோது தங்கிய இத்தலம் கன்னியாகுமரி மாவட்டத்தில் உள்ளது.
14. **இராமேஸ்வரம்:** சேது இலங்கைக்கு அணை கட்டிய இடம்.
15. **திருப்புல்லாணி:** அணை கட்டுவதற்கு உதவ வருணனை அழைத்தது.

**குறிப்பு:** மேற்குறிப்பிட்ட இராமரது தனிக்கோயில்கள், இராமர் தொடர்புடைய ஸ்தலங்களைத் தவிர ஏராளமான இராமர் ஸந்நிதிகள் பல ஊர்களில், பல கோயில்களில் உண்டு. அவைகளையெல்லாம் பட்டியலிட்டு மாளாது.

******

# 4. பன்னிரு திருமுறைகளில் இராமாயணம்

## தேவாரத்தில் இராவணன்

மலைமகளாகிய பார்வதி தேவியும், சிவபெருமானும் கயிலை மலையில் வீற்றிருந்தபோது, பெருமாட்டி கலங்குமாறு, தென்னிலங்கையின் அதிபதி இராவணன் கயிலை மலையைப் பெயர்த்தெடுக்கும்போது அவனது வலிமையையும், தலையையும், தோளையும் கலங்கும்படி தனது கால் விரலின் நகத்தால் செய்த ஈசன், பின்னர் அவ்வரக்கன் பக்தியால் எழுப்பிய இசையில் மகிழ்ந்து அருள் புரிந்தார். எடுத்த மலையினாலேயே நெரிப்பட்டு நிற்றலை எண்ணி அழுதமையால், இராவணன் (இராவணம் - அழுகை) என்ற பெயருடன், சந்திரகாசம் எனப்படும் பெரிய வாளும் ஒருசேரக் கொடுத்தார் பரமன்.



இராவணன் கயிலை மலையை எடுத்தல்



# திருஞானசம்பந்தர் தேவாரம்
## முதல் திருமுறை



திருஞானசம்பந்தப் பெருமான் தனது தேவாரங்களில், இராவணனுடைய செயல்களை, ஒரு சில பதிகங்கள் தவிர, அனைத்துப் பதிகங்களிலும் எட்டாவது பாடலாகப் பாடியுள்ளார். அவைகள் தொகுத்துத் தரப்பட்டுள்ளன.

இந்நிகழ்ச்சியைத் திருஇடும்பாவனம் தேவாரத்தில் விரிவாகக் குறிப்பிட்டுள்ளார்.

*தேர்ஆர்தரு திகழ்வாள் எயிற்று அரக்கன் சிவமலையை*
*ஓராது எடுத்து ஆர்த்தான் முடி ஒருபதுஅவை நெரித்து*
*கூர்ஆர்தரு கொலைவாளொடு குணநாமமும் கொடுத்த*
*ஏர்ஆர்தரும் இறைவர்க்கு இடம் இடும்பாவனம் இதுவே*

சீகாழிக்குப் பன்னிரண்டு பெயர்கள் உள்ளன. ஒவ்வொரு பெயரிலும் பாடியுள்ளவை கீழே தரப்பட்டுள்ளன:

1. **திருப்பிரமபுரம் :**

*வியர் இலங்குவரை உந்திய தோள்களை வீரம் விளைவித்த*
*உயர் இலங்கை அரையன் வலிசெற்று* 1-8

*தென்றில் அரக்கனைக் குன்றிற் சண்பைமன் அன்று நெரித்தவா* 90-977

*தசமுக னெரிதர வூன்று சண்பையான்*
*தசமுக னெரிதர வூன்று சண்பையான்*
*தசமுக னெரிதர வூன்று சண்பையான்*
*தசமுக னெரிதர வூன்று சண்பையான்* 127-1267

2. **வேணுபுரம்:**

*மலையான் மகள் அஞ்சவ்வரை எடுத்த அவ்வலி யரக்கன் தலை*
*தோளவை நெரியச் சரண் உகிர் வைத்தவன்* 9-93

* ஒவ்வொரு பாடலிலும் உள்ள எண்கள், முதல் எண் பதிகத்தையும், இரண்டாவது எண் பாடலையும் குறிக்கும்.

3. புகலி:

*புகழிலார் வரையால் அன்று அரக்கனைச் செற்ற கழலான்* 30-323
*வில்லிய நுண்ணிடையாள் உமையாள் விருப்பன் அவன் நண்ணும்*
*நல்லிடம் என்றறியா நலியும் விறல் அரக்கன்*
*பல்லொடு தோள்நெரிய விரலூன்றிப் பாடலுமே கைவாள்*
*ஒல்லை அருள்புரிந்தான் உறையும் புகலியதே.* 104-1129

4. வெங்குரு :

*பாங்கிலா அரக்கன் கயிலை அன்று எடுப்பப் பலதலை முடியொடு தோளவை நெரிய ஓங்கிய விரலால் ஊன்றி அன்று அவற்கே ஒளிதிகழ் வாளது கொடுத்து .* 75-816

5. தோணிபுரம்
6. பூந்தராய்
7. சிரபுரம்
8. புறவம் :

*விண்தான் அதிர வியனார் கயிலை வேரோடு எடுத்தான்றன்*
*திண்தோள் உடலும் முடியும் நெரியச் சிறிதே ஊன்றிய*
*புண்தான் ஒழிய அருள்செய் பெருமான்* 74-805

*பரக்கும் தொல்சீர்த் தேவர்கள் சேனைப் பௌவத்தைத்*
*துரக்கும் செந்தீப் போல்அமர் செய்யும் தொழில் மேவும்*
*அரக்கன் திண்டோள் அழிவித்தான்* 97-1054

9. சண்பை

*இருளைப் புரையு நிறத்தில் அரக்கன் தனைஈடு*
*அழிவித்து அருளைச் செய்யும் அம்மான்* 66-718

10. சீர்காழி

*எடுத்த அரக்கன் நெரிய விரலூன்றிக் கடுத்து முரிய அடர்த்தார்*
*காழியார் எடுத்த பாடற்கு இரங்கும் அவர் போலாம்* 24-257

*அரக்கன் வலிஒல்க அடர்த்து வரைக்கும் மகளோடு*
*மகிழ்ந்தான்* 34-367

*இரவில் திரிவோர்கட்கு இறைதோள் இணைபத்தும்*
*நிரவிக் கரவாளை நேர்ந்தான் இடம் போலும்* 81-878

இலங்கை மன்னன் தன்னை இடர்கண்டு
அருள் செய்த சலங்கொள் சென்னி மன்னா 102-1108

**11. கொச்சைவயம்**

**12. கழுமலம்**

கடலென நிறநெடு முடியவன் அடுதிறல்
தெறஅடி சரண்என அடல்நிறை படை அருளிய
புகழ் அரவு அரையினன் 19-202

புயம் பலஉடைய தென்னிலங்கையர் வேந்தன்
பொருவரை எடுத்தவன் பொன்முடி திண்தோள்
பயம்பல படஅடர்த்து அருளிய பெருமான் 79-860

செம்பைச்சேர் இஞ்சிச்சூழ் செறிந்திலங்கு பைம்பொழில்
சேரேவாரா வாரீசத் திரையெறி நகரிறைவன்
இம்பர்க்கே தம்செய்திட்டு இருந்தரன் பயின்ற வெற்பு
ஏரார்பூநேர் ஓர்பாதத்து எழில்விரல் அவண் நிறுவிட்டு
அம்பொற்பூண் வென்றித்தோள் அழுந்து வந்தனம் செய்தாற்கு
ஆரார் கூர்வாள் வாணாளன்று அருள்புரிபவன் 126-1366

அடல்வந்த வானவரை அழித்துலகு தெழித்துழலும்
அரக்கர் கோமான் மிடல் வந்த இருபது தோள் நெரியவிரல்
பணிகொண்டோன் 129-1390

**திருவீழிமிழலை**

அரன்உறை தருகயிலையை நிலைகுலைவது செய்த தசமுகனது
கரம் இருபது நெரிதர விரல் நிறுவிய கழல் அடி உடையவன்
20-213

உளையா வலிஒல்க அரக்கன் வளையா
விரல் ஊன்றிய மைந்தன் 35-378

மயங்குமாயம் வல்லராகி வானினொடு நீரும்
இயங்குவோருக்கு இறைவனாய இராவணன்
தோள் நெரித்த புயங்கராக மாநடத்தன் 53-576

எடுத்தான் தருக்கினை இழித்தான் விரலூன்றிக்
கொடுத்தான் வாள் 82-889

*அரக்கன் ஆண்மையை நெருக்கினான்* 91-988
*அரக்க னெரிதர இரக்கம் எயிதினீர்* 92-999

*ஒருக்கிய உணர்வினொடு ஒளிநெறி செலும்*
*அவர் அரக்கனன் மணிமுடி ஒருபதும் இருபது*
*கரக்கன நெரிதர மலரடி விரல்கொடு நெருக்கினன்* 124-1344

**திருமுதுகுன்றம் :**

*கதிரொளிய நெடுமுடி பத்துடைய கடல்*
*இலங்கையர்கோன் கண்ணும் வாயும்*
*பிதிரொளிய கனல் பிறங்கப் பெருங்கயிலை*
*மலையை நிலை பெயர்த்த ஞான்று*
*மதிலளகைக்கு இறைமுரல மலரடி யொன்று*
*ஊன்றி பாட ஆங்கே முதிரொளிய சுடர்நெடுவாள்*
*முன்னீந்தான் வாய்ந்த பதி முதுகுன்றமே* 131-1412
*பத்துத் தலையோனைக் கத்த விரலூன்றும் அத்தன்* 93-1010

*தென்னிலங்கை யரையன் வரைபற்றி எடுத்தான்முடி*
*திண்தோள் விரலால் நெரிவித்து இசை கேட்டு*
*அன்று அருள்செய்த மின் இலங்கு சடையான்*
*மடமாதோடு மேவும் இடம்* 20-19 திருப்புகலூர்

*அடல் இலங்கை அரையன் வலி செற்று*
*அருள் அம்மான் அமர் கோயில்* 3-30 திருவலிதாயம்

*இலங்கையர் வேந்து எழில் வாய்த்த*
*திண்தோள் இற்று அலற அவ்விரற் ஒற்றி*
4-41 திருப்புகலியும் திருவீழிமிழலையும்

*பூண்தங்கு மார்பின் இலங்கை வேந்தன்*
*பொன் நெடும் தோள் வரையால் அடர்த்து*
6-61 திருமருகலும் திருச்செங்காட்டங்குடியும்

*லங்கை இராவணன் வெற்பெடுக்க எழில் விரல்*
*ஊன்றி இசைவிரும்பி நலங்கொளச் சேர்ந்த நள்ளாறு*
7-72 திருநள்ளாறும் திரு ஆலவாயும்

*இவிறல் ஆர் அரக்கன் வண்டமர் பூமுடி செற்றுகந்த மைந்தர்*
8-83 திருஆவூர்ப் பசுபதீச்சரம்

*இராவணனை அளறுபட அடர்த்தான்* 10-104 திருவண்ணாமலை

*செதுவாய்மைகள் கருதிவ்வரை எடுத்த திறல் அரக்கன் கதுவாய்கள்*
*பத்து அலறிஇடக் கண்டான் உறை கோயில்* 12-126 &

*சிரமாயின கதறச்செறி கழல்சேர் திருவடியின்*
*விரலால் அடர்வித்தான் இடம் விரிநீர்வியலூரே* 13-137 திருவியலூர்

*அறையார் கடல் இலங்கைக்கு இறை அணிசேர் கயிலாயம்*
*அறையார முன் எடுத்தான் இருபது தோள் இற ஊன்றி*
15-159 திருநெய்த்தானம்

*இலங்கைமனன் முடிதோள்இற எழில்ஆர்திரு விரலால் விலங்கல்*
*விடை ஆர்த்தான்* 16-170 திருப்புள்ளமங்கை

*தேர்ஆர்தரு திகழ்வாள் எயிற்று அரக்கன் சிவமலையை*
*ஓராது எடுத்து ஆர்த்தான் முடி ஒருபதுஅவை*
*நெரித்துக் கூர்தரு கொலைவாளொடு குணநாமமும் கொடுத்த*
*ஏர்ஆர்தரும் இறைவர்க்கு இடம் இடும்பாவனம் இதுவே*
17-181 திருஇடும்பாவனம்

*அசைஉறு தவமுயல் வினில்அயன் அருளினில்*
*வருவலி கொடு சிவன் இசை கயிலையை*
*எழுதரு வகை இருபது கரம் அவை நிறுவிய நிசிசரன் முடிஉடை*
*தரஒரு விரல்பணி கொளும் அவன் உறைபதி*
21-224 திருச்சிவபுரம்

*சனம் வெருவுறவரு தசமுகன் ஒருபது முடியொடும்*
*இருபது கனமருவிய புய நெறிவகை கழலடியில்*
*ஓர் விரல் நிறுவினன்* 22-235 திருமறைக்காடு

*எறிஆர் கடல்சூழ் இலங்கைக் கோன்தனை*
*முறிஆர் தடக்கை அடர்த்த மூர்த்தி* 23-246 திருக்கோலக்கா

*திருப்புத்தூர் இருக்க வல்ல இறைவர் அவர்போலும் அரக்கன் ஒல்க*
*விரலால் அடர்த்தாரே* 26-279 திருப்புத்தூர்

*திருப்புன்கூர்த் தலைவர் வல்ல அரக்கன் தருக்கினை மலையதனால்*
*அடர்த்து மகிழ்ந்தாரே* 27-290 திருப்புன்கூர்

*எண்ணாது அரக்கன் எடுக்க ஊன்றிய அண்ணல்*
28-301 திருச்சோற்றுத்துறை

அரக்கன் ஆண்மை அழிய வரைதன்னால்
நெருக்க ஊன்றும் விரலான் 29-312 திருநறையூர்ச் சித்தீச்சரம்

மையார் நிறமேனி அரக்கர் தம்கோனை
உய்யா வகையால் அடர்த்து இன்னருள் செய்த
கொய்யார் மலர் சூடி 31-334 திருக்குரங்கணில் முட்டம்

ஆவா அரக்கன்றனை ஆற்றல் அழித்த
ஏவார் சிலையான் 32-345 திருவிடைமருதூர்

கொடித்தேர் இலங்கைக் குலக்கோன் வரைஆர
அடர்த்துஆர் அருள் 33-356 திருஅன்பில் ஆலந்துறை

வரை ஒன்றது எடுத்த அரக்கன் சிரம்
அங்க் நெரித்தவர் 36-389 திருவையாறு

இலகும் முடிபத்து உடையானை அலல் கண்டு
அருள் செய்த எம் அண்ணல் 37-400 திருப்பனையூர்

வரையால் அரக்கன் வலிசெற்ற வரங்கொள் ..
பரமேட்டி 38-411 திருமயிலாடுதுறை

அருவரை ஒல்க எடுத்த அரக்கன் நாடெழில் தோள்கள் ஆழத்து
அழுந்த வெருவுற ஊன்றிய பெம்மான் 39-423 திருவேட்களம்

உயர்வரை ஒல்க எடுத்த அரக்கன் ஒளிர் கடகக்
கை அடர்த்து 40-433 திருவாழ்கொளிபுத்தூர்

விடைத்த வல்லரக்கன் வெற்பினை எடுக்க மெல்லிய
திருவிரல் ஊன்றி அடர்த்தவன் 41-444 திருப்பாம்புரம்

பொன்னங் கானல் வெண்திரை சூழ்ந்த பொருகடல் வேலி
இலங்கை மன்னன் ஒல்க மால்வரை ஊன்றி மாமுரண் ஆகமும்
தோளும் முன்னவை வாட்டி பின்னருள் செய்த
மூவிலை வேலுடை மூர்த்தி 42-455 திருப்பேணு பெருந்துறை

வாள்அமர் வீர நினைந்த இராவணன்
மாமலையின் கீழ்த் தோள்அமர் வன்தலை
குன்ற தொல்விரல் ஊன்று துணைவர் 43-466 திருக்கற்குடி



5

ஏவலத்தால் விசயற்கு அருள்செய்து
இராவணனை ஈடு அழித்து — 44-477 திருப்பாச்சிலாச்சிராமம்

கவிழமலை தரளக் கடகக் கையால் எடுத்தான் தோள் பவழ நுனை
விரலால் பைய ஊன்றிப் பரிந்தாரும் — 45-489 திருவாலங்காடு

கல்லார் வரைஅரக்கன் தடற்தோள் கவின்வாட ஒல்லை அடர்த்து
அவனுக்கு அருள்செய்து — 46-500 திருவதிகை வீரட்டானம்

மலைஎடுத்த வாள்அரக்கன் அஞ்ச ஒருவிரலால்
நிலைஎடுத்த கொள்கையானே — 47-511 &

கரம் இருபது முடி ஒருபதும் உடையவன்
உரநெரி தரவரை அடர்வு செய்தவன் — 125-1355 திருச்சிரபுரம்

மாவடைந்த தேர்அரக்கன் வலி தொலைவித்தவன்றன் நாவடைந்த
பாடல் கேட்டு நயந்தருள் செய்ததென்னே — 48-522 திருச்சேய்ஞலூர்

நீர் ஒடுங்கும் செஞ்டையாய் நின்னுடைய பொன்மலையை
வேரொடும் பீழ்ந்து ஏந்தலுற்ற வேந்தன் இராவணனைத் தேரொடும்
போய் வீழ்ந்தலறத் திருவிரலால் அடர்த்த வார் ஒடுங்கும்
கொங்கைபங்கா வலிவல மேயவனே — 50-544 திருவலிவலம்

இலங்கை மன்னு வாள் அவுணர் கோனை எழில் விரலால் துலங்க
ஊன்றி வைத்துகந்தாய் — 51-555 திருச்சோபுரம்

குன்றின் உச்சிமேல் விளங்கும் கொடிமதில் சூழ் இலங்கைஅன்றி நின்ற
அரக்கர்கோனை அருவரைக்கீழ் அடர்த்தாய் — 52-566 திருநெடுங்களம்

என்றான் இம்மலை என்ற அரக்கனை
வென்றார் போலும் விரலினால் — 54-587 திருவோத்தூர்

அரசு அளிக்கும் அரக்கன் அவன்றனை உரை கெடுத்தவன் ஒல்கிட
வரமிகுத்த எம்மாற்பேற்று அடிகள் — 55-597 திருமாற்பேறு

அரக்கன் ஆண்மை அடரப்பட்டான் இறை
நெருக்கினானை நினைமினே — 57-620 திருவேற்காடு

புனல் இலங்கையர் கோன் முடிபத்திறச்
சினவல் ஆண்மை செகுத்தவன் — 58-630 திருக்கரவீரம்

கல்சூழ் அரக்கன் கதறச் செய்தான் 59-641 திருத்தூங்கானை மாடம்

தோடுடையான் குழையுடையான் அரக்கன்றன்
தோளடர்த்த பீடுடையான் 61-663 திருச்செங்காட்டங்குடி

அந்தரத்தில் தேர் ஊரும் அரக்கன் மலை அன்று எடுப்பச் சுந்தரத்தன்
திருவிரலால் ஊன்ற உடல் நெரித்து மந்திரத்தை மறைபாட வாள்
அவனுக்கு ஈந்தானும் 62-674 திருக்கோளிலி

மாடவீதி மன்னிலங்கை மன்னனை மாண்பழித்துக் கூடவென்றி
வாள்கொடுத்தான் 64-697 திருப்பூவணம்

தேர்அரக்கன் மால்வரையைத் தெற்றி எடுக்க அவன் தார்அரக்கும்
திண்முடிகள் ஊன்றிய சங்கரன்
65-708 காவிரிப் பூம்பட்டினத்துப் பல்லவனீச்சரம்

மஞ்சோங்கு உயரம் உடையான் மலையை
மாறாய் எடுத்தான் தோள் அஞ்சோடு அஞ்சும்
ஆறு நான்கும் அடர ஊன்றினார் 67-729 திருப்பழனம்

எடுத்தான் திரள்தோள் முடிகள் பத்தும் இடிய விரல் வைத்தார்
கொடுத்தார் படைகள் 68-739 திருக்கயிலாயம்

மறந்தான் கருதி வலியை நினைந்து மாறாய்
எடுத்தான் தோள் நிறந்தான் முரிய
நெரிய ஊன்றி அருள் செய்தார் 69-750 திருவண்ணாமலை

பரக்கும் பெருமை இலங்கை என்னும் பதியிற் பொலிவாய
அரக்கர்க்கு இறைவன் முடியும் தோளும் அறிஆர் விரல் தன்னால்
நெருக்கி அடர்த்து நிமலா போற்றி என்று நின்றேத்த
இரக்கம் புரிந்தார் உமையாளோடும் ஈங்கோய் மலையாரே
70-761 ஈங்கோய்மலை

கரைஆர் கடல்சூழ் இலங்கை மன்னன் கயிலை மலை தன்னை
வரைஆர் தோளால் எடுக்க முடிகள் நெரித்து
மனம் ஒன்றி உரைஆர் கீதம் பாட நல்ல உலப்பில்
அருள் செய்தார் 71-772 திருநறையூர்ச் சித்தீச்சரம்

வரைஆர் திரள்தோள் மதவாள் அரக்கன் எடுப்ப
மலைசெரும் விரைஆர் பாத நுதியால் ஊன்ற நெரிந்து

சிரம் பத்தும் உரைஆர் கீதம் பாடக் கேட்டு. அங்கு
ஒளிவாள் கொடுத்தாரும் 72-783 திருக்குடந்தைக் காரோணம்

வேருலாம் ஆழ்கடல் வருதிரை இலங்கை வேந்தன் தடக்கைகள்
அடர்த்தவன் 76-827 திருஇலம்பையங்கோட்டூர்

பச்சமும் வலியும் கருதிய அரக்கன் பருவரை எடுத்த திண்தோள்களை
அடர்வித்து அச்சமும் அருளும் கொடுத்த எம் அடிகள்
77-838 திருஅச்சிறுபாக்கம்

தலைஇலங்கு அவிர்ஒளி நெடுமுடி அரக்கன் தடக்கைகள்
அடர்த்ததோர் தன்மையை உடையர் 78-850 திரு இடைச்சுரம்

கூர்வாள் அரக்கன்றன் வலிவைக் குறைவித்து 80-871 கோயில்

வலங்கொள் புகழ்பேணி வரையால் உயர் திண்தோள் இலங்கைக்கு
அடர்த்து அங்கு அருள் செய்வான் 84-911 திருநாகைக்காரோணம்

பெண்ணார் திருமேனிப் பெருமான் பிறைமல்கு
கண்ணார் நுதலின் கயிலை கருத்தினால்
எண்ணாது எடுத்தானை இறையே விரலூன்றி
நண்ணார் புரம் எய்தான் நல்ல நகரானே 85-922 திருநல்லம்

கடல்சூழ் இலங்கைக் கோன் நாமம் இறுத்தானை 86-933 திருநல்லூர்
அரக்கன் திறல் அழித்தான் 88-955 திருஆப்பனூர்

ஆவா என அரக்கன் அலற அடர்த்திட்டுத் தேவா என அருளார்
89-965 திருஎருக்கத்தம்புலியூர்

அரக்கனார் வலி நெருக்கன் 94-1021 திரு ஆலவாய்

எடுத்தான் புயந் தன்னை அடுத்தார் 95-1032 திருவிடைமருதூர்

தூர்த்தனைச் செற்ற தீர்த்தன் 96-1043 திரு அன்னியூர்

மலைமல்கு தோளன் வலிகெட ஊன்றி 98-1065 திருச்சிராப்பள்ளி

இலங்கை முட்டிய கோனை மிறை செய்த நாதன்
99-1076 திருக்குற்றாலம்

மைத்தகுமேனி வாளரக்கன்றன் மகுடங்கள் பத்தின
திண்தோள் இருபதும் செற்றான் 100-1087 திருப்பரங்குன்றம்

*பெருக்கு எண்ணாத பேதையரக்கன் வரைக்கீழால்*
*நெருக்குண்ணாத்தன் நீள்கழல்நெஞ்சில் நினைந்தேத்த*
*முருக்குண்ணாதோர் மொய்கதிர்வாள்தேர் முன்னீந்த*
101-1098 திருக்கண்ணார் கோயில்

*ஆதல் செய்தான் அரக்கர் தம் கோனை அருவரையின் நோதல்*
*செய்தான் நொடிவரையின்கண் விரலூன்றிப் பேர்தல் செய்தான்*
103-1118 திருக்கழுக்குன்றம்

*மல்கிய நுண்ணிடையாள் உமைநங்கை மறுக*
*அன்று கையால் தொல்லை மலை எடுத்த அரக்கன்*
*தலை தோள் நெரித்தான்* 108-1170 திருப்பாதாளீச்சரம்

*கார் அரக்கன் முடி தோள் இறுத்தவன்* 109-1181 திருச்சிரபுரம்

*தருக்கின அரக்கன தாளும் தோளும் நெரித்தவன்* 110-1192&

*செருவுஅடை யிலவல செயல் செயத் திறலொடும் அருவரையினில்*
*ஒருபது முடி நெரிதர இருவகை விரல் நிறியவர்*
122-1322 திருவிடைமருதூர்

*நோதல்செய்து அரக்கனை நோக்கு அழியச்*
*சாதல் செய்தவன் அடி சரணம் எனலும்*
*ஆதரவு அருள் செய்த அடிகள்* 111-1203 திருக்கடைமுடி

*எழில்மலை எடுத்தவல் லிராவணன்றன்*
*முழுவலி அடக்கிய முதல்வன்* 12-1214 திருச்சிவபுரம்

*இகழ்ந்து அருவரையினை எடுக்கலுற்று ஆங்கு அகழ்ந்த*
*வல்லரக்கனை அடர்த்த பாதம்* 112- 1224 திருவல்லம்

*தீதிலா மலைஎடுத்த அவ்வரக்கன் நீதியால்*
*வேத கீதங்கள் பாட* 114-1234 திருமாற்பேறு

*தடவரை அரக்கனைத் தலைநெரித்தோன் படஅரவு*
*ஆட்டிய படர் சடையன்* 115-1245 திருஇரமனதீச்சரம்

*செருவில் அரக்கனைச் சீரில் அடர்த்தருள் செய்தவரே*
116-1255 பொது

*விடைத்தவல் லரக்கன்நல் வெற்பினை எடுத்தலும்*
*அடத்தலத் தால்இறை ஊன்றிமற்று அவனது*
*முடித்தலை தோளவை நெரிதர முறைமுறை*
*அடர்த்தவன் வளநகர் அந்தண் ஐயாறே* 120-1300 திருவையாறு

*இரவணன் இருபது கரம்எழில் மலைதனில்*
*இரவண நினைதர அவன்முடி பொடிசெய்து*
*இரவணம் அமர்பெயர் அருளின னகநெதி*
*இரவண நிகர்வலி வலமுறை இறையே* 123-1333 திருவலிவலம்

*அஞ்சாதே கயிலாய மலையெடுத்த அரக்கர்கோன்*
*தலைகள் பத்தும் மஞ்சாடு தோள்நெரிய*
*அடர்த்தவனுக்கு அருள்புரிந்த மைந்தர்* 130-1401 திருவையாறு

*ஏணிலா அரக்கன்றன் நீள்முடி பத்தும் இறுத்தவன்*
133-1433 திருக்கச்சி ஏகம்பம்

*வளைக்கும் எயிற்றின் அரக்கன் வரைக்கீழ்*
*இளைக்கும் படிதான் இருந்தேழை*
*அன்னம் திளைக்கும்* 134-1444 திருப்பறியலூர் வீரட்டம்

*தருக்கின் மிக்க தசக்கிரிவன்றனை நெருக்கினார்*
*விரல் ஒன்றினால் பருக்கினார்* 135-1455 திருப்பராய்த்துறை

*பாவண மாவலறத் தலை பத்துடையவ் வரக்கனவ் வலியொர்*
*கவ்வை செய்தருள்புரி தலைவர்* 136-1466 திருத்தருமபுரம்

*** முதல் திருமுறை முற்றிற்று ***





# திருஞானசம்பந்தர் தேவாரம்

## இரண்டாம் திருமுறை



எரித்த மயிர் வாளரக்கன் வெற்பெடுக்கத் தோளொடுதாள் நெரித்தருளும் சிவமூர்த்தி 176-433 &

அரசன் இலங்கையர் கோனை அன்றும் அடர்த்திலர் போலும் 201-703 &

அரக்கன் விறல் அழித்தருளி 210-795 &

வல்லரக்கன் திண்டோள் ஒக்க இருபது முடிகள் ஒருபதும் ஈடு அழித்துகந்த எம்மான் 210-807 திருப்பிரமபுரம்

ஏவும்படை வேந்தன் இராவணனை ஆவென்றலற அடர்த்தான் 153-182 &

இரைமண்டிச் சங்கேறும் கடல்சூழ் தென்னிலங்கையர் கோன் விரைமண்டு முடி நெரிய விரல் வைத்தீர் 217-884 திருவேணுபுரம்

பரந்தோங்கு பல்புகழ் சேர் அரக்கர் கோனை வரைக்கீழ் இட்டு உரந் தோன்றும் பாடல் கேட்டு உகவை யளித்தீர் 190-586 &

தொலைவிலாத அரக்கன் னுரத்தைத் தொலைவித்தவன் தலையும் தோளும் நெரித்த சதுரர் 258-1328 திருப்புகலி

அரக்கன் ஆற்றல் அழித்து அருள் ஆக்கிய ஆக்கமே 137-7 பூந்தராய்

இலங்கு பூண்வரை மார்புடை இராவணன் எழில்கொள்வெற்பு எடுத்தன்று கலங்கச் செய்தலும் கண்டுதம் கழலடி நெரியவைத்து அருள்செய்தார் 238-1110 சிரபுரம்

குன்றானைக் குன்றெடுத்தான் புய நாலைந்தும் வென்றானை 147-118

அரக்கனை யன்றடர்த் துகந்தாய் 185-531

அரக்கன் முடிதோள் நெரிய அடர்த்தான் 195-640

வல்லரக்கன் வரைபேர்க்க வந்தவன் தோள்முடி கல்லரக் கிவ்விரல் வாட்டினான் 211-818

கார்கொள் மேனியல் அரக்கன் தன்கடுந் திறலினைக் கருதி
ஏர்கொள் மங்கையும் அஞ்ச எழில்மலை எடுத்தவன் நெரியச்
சீர்கொள் பாதத்தொர் விரலால் செறுத்த 232-1045
வெஞ்சிவனுறை கோயில் 233-1055

மைமிகுந்த மேனிவாள் அரக்கனை நெரித்தவன்
முழுதிலங்கும் பெரும் பாருள் வாழும் முரண்
இலங்கைக்கோன் அழுது இரங்கச் சிரம் உரமொடுங்கல்
அடர்த்து ஆங்கவன் தொழுது இரங்கத் துயர் தீர்த்துகந்தார்
249-1230 சீகாழி

மழைமுகில் போலுமேனி அடல்வாள் அரக்கன்
முடியோடு தோள் நெரியப் பிழைகெட
மாமலர்ப் பொன்னடி வைத்த பேயோடு உடனாடி 219-904 &
பொருகடல் இலங்கை வென்றி வேந்தனை
ஒல்க ஊன்றிய விரலினர் 225-969 கொச்சைவயம்

ஆர்த்து வந்த அரக்கனை அன்று அடர்த்தீர் சொலீர்
138-19 திருவலஞ்சுழி

வித்தகப்படை வல்ல அரக்கன் விறற்றலை
பத்திரட்டிக் கர நெரித்திட்டதும் பாதமே 139-29 திருத்தெளிச்சேரி

தக்கில் வந்த தசக்கிரிவன்றலை பத்திறத்
திக்கில் வந்தலறவ் வடர்த்தீர் 140-40 திருவான்மியூர்

ஈரம் ஏதும் இலனாகி எழுந்த இராவணன் வீரம் ஏதும்
இலனாக விளைத்த விலங்கலான் 141-51 திருஅநேகதங்காவதம்

உரைசெய் தொல்வழி செய்தறியா இலங்கைக்குமன் வரைசெய்
தோளடர்த்து மதி சூடிய மைந்தனார் 142-63 திருவையாறு

மாட நீடுகொடி மன்னிய தென்னிலங்கைக்குமன்
வாடி ஊடவரையால் அடர்த்து அன்று அருள் செய்தவர்
143-74 திருவாஞ்சியம்

தெற்றலாகிய தென்னிலங்கைக் கிறைவன் மலை
பற்றினான் முடி பத்தொடு தோள்கள் நெரியவே செற்ற தேவன்
144-85 திருச்சிக்கல்

இரக்கமில் குணத்தொடு உலகெங்குநலி வெம்போர்
அரக்கன் முடியத்தலை புயத்தொடு மடங்கத்
துரக்க விரலிற் சிறிது வைத்தவர் 168-346 திருவையாறு

கடுத்த வல்லரக்கன்முன் நெருக்கிவரை தன்னை எடுத்தவன்
முடித்தலைகள் பத்துமிகு தோளும் அடர்த்தவர் 169-357 திருநள்ளாறு

அரக்கனை அடர்த்தருளும் அப்பன் இடம் 170-368 திருப்பழூர்

வரைஆர்த்து எடுத்த அவ்வரக்கன் வலிஒல்க நிரையார் விரலால்
நெரித்திட்டவன் 171-379 தென்குரங்காடுதுறை

அரக்கன் உரந் தீர்த்தருளாக்கிய வாறே 172-389 திருஇரும்பூளை

இலங்கையுடையான் அடரப் பட்டிடர் எய்த அலங்கல் விரல் ஊன்றி
அருள் செய்தவாறே 173-400 திருமறைக்காடு

இருக்கு நீள்வரை பற்றி யடர்த்தன்று எடுத்த
அரக்கன் ஆக நெரித்தருள் செய்தவன் 174-411 &

பண்டு அரக்கனையும் தடவரையால் தடவரைத்
தோள் ஊன்றினான் 177-444 திருச்சாய்க்காடு

காற்றூர் வரையன்று எடுத்தான் முடிதோள் நெரித்தான்
175-422 திருச்க்ஷேத்திரக் கோவை

கன்னெடிய குன்றெடுத்தான் தோள் அடரக் காலூன்றி
இன்னருளால் ஆட்கொண்ட எம்பெருமான்
178-455 திருஆக்கூர் - தான்தோன்றிமாடம்

**திருப்புள்ளிருக்கு வேளூர் - வைத்தீஸ்வரன் கோயில்.**
**சம்பாதி, சடாயு வழிபட்டது:**

தள்ளாய சம்பாதி சடாயுயென்பார் தாமிருவர் புள்ளானார்க்கு
அரையன் இடம் 179-459

மெய்சொல்லா இராவணனை மேலோடி ஈடழித்துப் பொய் சொல்லாது
உயிர் போனான் 179-460

ஆதித்தன் மகன்என்ன அகல்ஞாலத் தவரோடும் போதித்த சடாயு
என்பான் 179-467

விடைத்து வரும் இலங்கைக்கோன் மலங்கச் செற்று இராமற்
காப்புடைத்தவனைப் பொருதழித்தான்
தாளால் அரக்கன்தோள் சாய்த்த தலைமகன் 180-477 &

குன்று எடுத்த நிசாசரன்
திரள்தோள் இருபது தானெரிதர அன்றடர்த்து உகந்தாய்
186-542 திருஆமாத்தூர்

போதுலவு கொன்றை புனைந்தான் திருமுடிமேல்
மாதுமையாள் அஞ்ச மலையெடுத்த வாளரக்கன் நீதியினால்
ஏத்த நிகழ்வித்து நின்றாடும் 181-488 திருக்கைச்சினம்

பத்துத் தலையோனைப் பாதத் தொரு விரலால்
வைத்து மலையடர்த்து வாளொடு நாள் கொடுத்தான்
182- 498 திரு நாலூர் மயானம்

பண்மொய்த்த இன்மொழியாள் பயமெய்த மலையெடுத்த
184-520 &
உண்மத்தன் உரநெரித்தன்னு அருள்செய்தான்

வளையார் முன்கை மலையாள் வெருவ வரையூன்றி
197-662 திருவெண்காடு
முளையார் மதியம் சூடி

நின்றடுத்துயர் மால்வரைத்திரள் தோளினால் எடுத்தான்றன் நீள்முடி
187-553 திருக்களர்
அன்றடர்த்துகந்தாய்

கழலால் அரக்கனை மிண்டெலாந் தவிர்த்து என்னுகந்திட்ட
188-564 கோட்டாறு
வெற்றிமையே

மேவியந் நிலையாயரக்கன் தோளடர்த்தவன் பாடல் கேட்டருள் ஏவிய
189-575 புறவார் பனங்காட்டூர்
பெருமான்

திரையார்ந்த மாகடல்சூழ் தென்னிலங்கைக் கோமானை
வரையார்ந்த தோளடர விரலால் ஊன்று மாண்பினீர்
191-597 திருத்தலைச்சங்காடு

திறலரக்கன் தலை பத்தும் திண்டோளும் நெரித்தீர்
192-608 திருவிடைமருதூர்

காதமரும் வெண்குறையீர் கறுத்த அரக்கன் மலையெடுப்ப மாதமரு
மென்மொழியாள் மறுகும் வண்ணம் கண்டுகந்தீர்
193-619 திருநல்லூர்

இலங்கைக்கோன் தங்காதன் மாமுடியும் தாளும் அடர்த்தீர்
194-630 குடவாயில்

தேசுகுன்றாத் தெண்ணீர் இலங்கைக் கோமானைக் கூச அடர்த்துக்
கூர்வாள் கொடுப்பார் 196-651 திருப்பாசூர்

உமையஞ்ச வலிய திரள்தோள் வண்கண் அரக்கர் கோன்றன்னை
மெலிய வரைக்கீழ் அடர்த்தார் 198-673 திருமீயச்சூர்

இத்தேர் ஏக இம்மலை பேர்ப்பன் என்றேந்தும் பத்தோர்
வாயான் வரைக்கீழ் அலறப் பாதந்தான் வைத்தார்
அருள்செய் வரதன் 199-684 அரிசிற்கரைப்புத்தூர்

வாசம் கமழும் இலங்கை வாழ்வேந்தை நாசம் செய்த
நங்கள் பெருமான் 200-694 திருமுதுகுன்றம்

இராவணன் மேலது நீறு 202-716 திருஆலவாய்

கருவரை காலில் அடர்த்த கண்ணுதலான் 204-739 கடம்பூர்

பெருந்திறல் வாளரக்கன்னைப் பேரிடர் செய்துகந்தாரும்
205-749 திருப்பாண்டிக்கொடுமுடி

ஏந்து திணி திண்டோள் இராவணனை மால்வரைக்கீழ் அடரவூன்றிச்
சாந்தமென நீறணிந்த சைவர் 207-772 திருக்குறும்பலா

மன்னீர் இலங்கையர்தம் கோமான் வலி தொலைய
விரலால் ஊன்றி 208-783 திருநணா

அகத்தியான் பள்ளியான் இறுத்ததுவும் அரக்கன்றன்
தோள்கள் இருபதே 211-829 அகத்தியான் பள்ளி

செற்றஅரக்கன் அலறத் திகழ் சேவடிமேல் விரலாற்
கற்குன்றடர்த்த பெருமான் 216-873 திருக்கடவூர்மயானம்

தருவுயர்ந்த வெற்பு எடுத்த அத்தசமுக னெரிந்து வெருவ வூன்றிய
திருவிரல் நெகிழ்த்துவாள் பணித்தான் 218-894 திருத்தேவூர்

வலமிகு வாளன் வேலன் வளைவாள் எயிற்று மதியா அரக்கன்
வலியோடு உலமிகு தோள்கள் ஒல்க விரலால் அடர்த்த பெருமான்
220-915 திருநனிபள்ளி

ஏழ்கடல் சூழ் இலங்கை அரையன்ற னோடும் இடரான வந்து நலியா
221-926 பொது

அருவரை சூழ் இலங்கை அரையன்றன் வீரம் அழியத் தடக்கை
முடிகள் திருவிரல் வைத்துகந்த சிவன் 222-937 திருநாரையூர்

இலங்கை அரையன் உடலொடு தோளனைத்து முடிபத்து இறுத்தும்
இசைகேட்டு இரங்கி ஒரு வாள் நடலைகள் தீர்த்து நல்கி நமையா
வல்ல நறையூரின் நம்பன் 223-948 திருநறையூர்ச்சித்தீச்சரம்

வரைவந்து எடுத்த வலிவாள் அரக்கன் முடிபத்தும் இற்று நெரிய
உரைவந்த பொன்னின் உருவந்த மேனி
224-959 தென்திருமுல்லைவாயில்

செழுந்தண் மால்வரை யெடுத்த செருவலி இராவணன் அலற
அழுந்த வூன்றிய விரலான் போற்றி என்பார்க்கல்லது அருளான்
226-980 திருநெல்வாயில்அரத்துறை

மேற்சென்று மலையை எடுத்தலும் மலைமகள் நடுங்க நக்குத் தன்
விரலால் ஊன்றலும் நடுநடுத் தரக்கன் பக்க வாயும் விட்டலறப்
பரிந்தவன் 227-991 திருமறைக்காடு

சாம வேதமோர் கீதம் ஓதியத் தசமுகன் பரவும் நாமதேயமது
உடையார் 228-1002 திருப்புகலூர் வர்த்தமானீச்சரம்

எண்ணிலா விறல் அரக்கன் எழில்திகழ் மால்வரை எடுக்கக்
கண்ணெலாம் பொடிந்தலறக் கால்விரல் ஊன்றிய
கருத்தர் 229-1013 திருத்தெங்கூர்

ஏழு மூன்றுமொர் தலைகள் உடையவன் இடர்பட அடர்த்து
230-1024 திருவாழ்கொளிபுத்தூர்

வண்ண மால்வரை தன்னை மறித்திடலுற்ற வல்லரக்கன்
கண்ணும் தோளு நல்வாயு நெரிதரக் கால் விரல் ஊன்றிப்
பண்ணின் பாடல் கைந்நரம்பால் பாடிய பாடலைக் கேட்டு
அண்ணலாய் அருள் செய்த அடிகளுக்கிடம் அரசிலியே
231-1034 திருஅரசிலி

கடற்படை யுடைய அக்கடல் இலங்கை மன்னனை அடற்பட
அடுக்கலில் அடர்த்த அண்ணல் 234-1066 திருத்துருத்தி

வெற்றிகொள் தசமுகன் விறல்கெட இருந்ததோர் குற்றமில்
வரையினான் 235-1077 திருக்கோடிக்கா

வரைத்தலம் எடுத்தவன் முடித்தலம் முரத்தொடும் நெரித்தவன்
237-1099 திருவாரூர்

பவ்வம் ஆர்கடல் இலங்கையர் கோன்றனைப் பருவரைக்
கீழ்ஊன்றி எவ்வம் தீர அன்று இமையவர்க்கு அருள் செய்த
இறையவன் 239-1121 அம்பர் மாகாளம்

மடுத்த வாளரக் கன்னவன் மலைதன்மேல் மதியிலா
மையில்ஓடி எடுத்தலும் முடிதோள்கர நெரிந்துஇற
இறையவன் விரல் ஊன்றக் கடுத்து வாயொடு
கையெடுத்து அலறிட 240-1132 திருக்கடிக்குளம்

மலை நிலாவிய மைந்தனம் மலையினை எடுத்தலும் அரக்கன்றன்
தலையெலா நெரித்து அலறிட ஊன்றினான் 241-1143 கீழ்வேளூர்

குயிலினேர் மொழிக் கொடியிடை வெருவுறக்
குலவரைப் பரப்பாய கயிலையைப் பிடித்து
எடுத்தவன் கதிர்முடி தோளிருபது மூன்றி
மயிலினேரன சாயலோடு அமர்ந்தவன் 242-1154 திருவலஞ்சுழி

தென்னிலங்கையர் குலபதி மலை நலிந்தெடுத்தவன்
முடி திண்டோள் தன்னிலங் கெடவடர்த்து
அவர்க்கருள் செய்த தலைவனார் 243-1165 திருக்கேதீச்சரம்

இடங்கொள் மாகடல் இலங்கையர் கோன்றனை
இகல் அழிதர ஊன்று திடங்கொள் மால்வரையான்

244-1175 திருவிற்குடி வீரட்டம்

ஒளிகொள் வாளெயிற்று அரக்கன் அவ்வுயர்வரை
யெடுத்தலும் உமையஞ்சிச் சுளிய ஊன்றலும்
சோர்ந்திட வாளொடு நாள் அவற்கு அருள் செய்த

245-1186 கோட்டூர்

நிந்தியா எடுத்து ஆர்த்த வல்லரக்கனை நெரித்திடு விரலானை

246-1197 திருமாந்துறை

அரவமுந்நீர் அணி இலங்கைக் கோனையரு வரைதனால் வெருவ
ஊன்றி விரலால் அடர்த்தார்க்கு இடம்: 209-1241 திருக்கேதாரம்

உய்ய வேண்டில் எழுபோத நெஞ்சே உயர் இலங்கைக்கோன்
கைகள் ஒல்கக் கருவரை யெடுத்தானை ஓர் விரலினால் செய்கை
தோன்றச் சிதைத்தருள வல்ல சிவன் 251-1252 திருப்புகலூர்

பத்திரட்டி திரள்தோள் உடையான் முடிபத்திர அத்திரட்டி விரலால்
அடர்த்தார்க்கு இடம்: 252-1263 திருநாகைக்காரோணம்

அவ்வரக்கன் முடி எட்டு மற்றும் இருபத்திரண்டும் இற ஊன்றினான்
253-1275 இரும்பை மாகாளம்

கடுத்து வந்த கனல்மேனி யினான் கருவரை தனை எடுத்தவன்றன்
முடிதோர் அடர்த்தார்க்கு இடம் 254-1285 திலதைப்பதி

இலங்கை வேந்தன் சிரம்பத்தி ரட்டியெழில் தோள்களும் மலங்கி
வீழும் மலையால் அடர்த்தான் 255-1296 திருநாகேச்சுரம்

ஆர்க்கும் வாயான் அரக்கன் உரத்தை நெரித்தவ்வுடல் மூர்க்கன்
முக்கீச்சரத்தடிகள் 255-1307 முக்கீச்சரம்

வீக்கம் எழும் இலங்கைக்கு இறை விலங்கல்லிடை
ஊக்கம் ஒழிந்து அலற அவ்விரல் இறை ஊன்றினான்

257-1318 திருப்பாதிரிப்புலியூர்

*** இரண்டாம் திருமுறை முற்றிற்று ***



# திருஞான சம்பந்தர் தேவாரம்
## மூன்றாம் திருமுறை



அன்றரக்கனைச் செற்றவன்னடி யும்முடியவை காண்கிலார்
295- 397

இமையவர் அஞ்சி யோட எதிர்வாரவர் தம்மையின்றி
அமைதரு வல்லரக்கன் அடர்த்து மலை அன்றெடுப்பக்
குமையது செய்து பாடக் கொற்ற வாளொடு நாள்
கொடுத்திட்டு உமையொடு இருந்த பிரான் 314-601 &

அறம் அழிவுபெற உலகு தெறுபுயவன் விறல் அழிய நிறுவி
விரல் மா மறையின் ஒலி முறைமுரல் செய் பிறையெயிறன்
உற அருளும் இறைவன் 325-721 &

பண்புசேர் இலங்கைக்கு நாதனன்
முடிகள் பத்தையும் கெட நெரித்தவன் 368-1186 திருப்பிரமபுரம்

காசைசேர் குழலாள் கயல்ஏர்தடங் கண்ணிகாம்பன தோள்
கதிர்மென்முலைத் தேசுசேர் மலைமாது அமருந்திரு
மார்பகலத்து ஈசன்மேவும் இருங்கயிலை யெடுத்தானை
அன்றடர்த்தான் 260-19 &

கழல்விரல் ஒன்றினால் அரக்கன் ஆற்றல்
அழுத்தவனுக்கருள் பெருக்கு நின்ற எம் பிஞ்சகனே 263-52 &

மாசின அரக்கனை வரையின் வாட்டிய காய்சின
வெயில்களைக் கறுத்த கண்டனார் 271-139 திருப்பூந்தராய்

அரக்கனார் அருவரை எடுத்தவன் அலறிட
நெருக்கினார் விரலினால் நீடியாழ் பாடவே
கருக்குவாள் அருள்செய்தான் 282-259 &

இலங்கை அரக்கர் தமக்கு இறையே இடந்து கயிலை எடுக்க
இறையே புலன்கள் கெட உடன் பாடினனே பொறிகள்
கெடஉடன் பாடினனேஇலங்கிய மேனி இராவணனே எய்து
பெயரும் இராவணனே 371-1221 &

அரக்கனை வரையால் ஆற்றல் அன்று அழித்த அழகனார்
376-1275 திருக்கழுமலம்

*எடுத்த வல்லரக் கன்முடி தோளிற அடர்த்து*
*உகந்தருள் செய்தவர் அத்தன்* 301-462 &

*நேணவராவிழ யாசைழியே வேகதளேரிய ளாயுழிகா*
*காழியுளாயரி ளேதகவே யேழிசை யாழவி ராவணனே*

(ஈசனே! அன்பின் மிக்க அடியவர்கள் தேவரீருடைய திருவடியின்கண் இருந்து ஆசை முதலான குற்றங்களைத் துறந்து விளங்குகின்றனர். வேகமாக ஓடுகின்ற மான் தோலின் மீது வீற்றிருக்கும் பெருமானே! எம்பால் போந்து காத்தருள்வீராக, காழிப்பதியில் வீற்றிருக்கும் நாதனே! மிக இழிந்ததாகவும், குற்றத்தின் வயத்தாகவும் செய்த இராவணனுடைய ஏழிசையும் ஏற்று அருள் புரிந்த பரமனே! எமக்கு அருள் புரிவீராக-திருமாலை மாற்றுப் பதிகம்).

375-1264 சீகாழி

*அனமென்னடை யாளொடும் அதிர்கடல் இலங்கைமன்னை*
*இனமார்தரு தோளடர்த்து இருந்தனை* 261-30 &
*கல்நெடு மால்வரைக் கீழ்அரக்கன் னிடர்கண் டானும்* 265-74 &

*வரைக்குல மகட்கொரு மறுக்கம் வருவித்த மதியில் வலியுடை*
*அரக்கனது உரப்பர சிரத்துற அடர்த்தருள் புரிந்த அழகன்*

333-810 திருச்சண்பை நகர்

*தென்திசை இலங்கையரையன் திசைகள் வீரம் விளைவித்து*
*வென்றிசை புயங்களை அடர்த்தருளும் வித்தகன்* 339-875 &
*வள்ளல் இருந்த மலையதனை வலம் செய்தல் வாய்மையென*
*உள்ளங் கொள்ளாது கொதித்தெழுந் தன்று எடுத்தோன் உரநெரிய*
*மெள்ள விரல் வைத்து என்னுள்ளம் கொண்டார்*

358-1075 திருத்தோணிபுரம்

*வசிதரும் உருவொடு மலர்தலை உலகினை வலிசெயும் நிசிசரன்*
*உடலொடு நெடுமுடி யொருபது நெரிவுற ஓசிதர ஒருவிரல் நிறுவினர்*

342-908 திருப்புறவம்

*அடலெயிற்று அரக்கனார் நெருக்கி மாமலையெடுத்து ஆர்த்த*
*வாய்கள் உடல்கெடத் திருவிரல் ஊன்றினார்*

347-963 திருக்கொச்சைவயம்

*ஏருடை மணிமுடி இராவணனை ஆரிடர்*
*படவரை அடர்த்தவனே* 262-41 திருவாவடுதுறை

அரக்கனைச் செற்ற ஆதியை உள்கச் செல்ல உந்துக

264-63 திருக்கொள்ளம்பூதூர்

அடியிரண் டோருடம் பைந்நான்கிரு பதுதோள் தசமுடியுடை வேந்தனை மூர்க்கழித்த முதல் மூர்த்தி

266-85 திருக்கடவூர் வீரட்டம்

எடுத்தவன் மாமலைக் கீழ இராவணன் வீழ்தர விடுத்தருள் செய்திசை கேட்டவர்

267-96 திருவீழிமிழலை

உலகமுட் குந்திறல் உடையரக் கன்வலி விலகு பூதக்கணம் வெருட்டும் வேடத்தினது

283-270 திருந்துதேவன்குடி

வாளினான் வேலினான் மால்வரை யெடுத்ததிண் தோளினான் நெடுமுடி தொலையவே ஊன்றிய தாளினான்

284-281 திருக்கானப்பேர்

வரைதனால் அரிதிலா வல்லரக்கன் வலிவாட்டிய சதிரினார்

285-292 திருச்சக்கரப்பள்ளி

கரத்தினால் கயிலையை எடுத்தகார் அரக்கன்
சிரத்தினை ஊன்றலும் சிவனடி சரண்எனா
இரத்தினாற் கைந்நரம்பு எடுத்திசை பாடலும்
வரத்தினான் மருவிடம் மாமழபாடியே

286-303 திருமழபாடி

மலைதனால் வல்லரக் கன்வலி வாட்டினான்

287-314 மேலைத் திருக்காட்டுப்பள்ளி

சரிவிலா வல்லரக் கன்தடம் தோள்தலை நெரிவிலார் அவ்வடர்த்தார்

283-325 அரதைப்பெரும்பாழி

சிரமொரு பதும்உடைச் செருவலி யரக்கனைக் கரம்இரு பதும் இறக் கனவரை யடர்த்தவன்

289-336 திருமயேந்திரப்பள்ளி

தடவரை எடுத்தவன் தருக்கிறத் தோள்அடர் படவிரல் ஊன்றியே பரிந்தவற்கு அருள் செய்தான்

290-346 திருவேடகம்

**திருஉசாத்தானம் இராமர் ஈசனிடம் உபதேசம் பெற்ற தலம்**

*நீரிடைத் துயின்றவன் தம்பிநீள் சாம்புவான்*
*போருடைச் சுக்கிரீவன் தொழ* 291-350

*மடவரல் பங்கினன் மலைதனை மதியாது*
*சடசட எடுத்தவன் தலைபத்து நெரிதர அடர்தர ஊன்றி யங்கே*
*அவற்கு அருள் செய்தான்* 291-355

*காரினார் அமர்தரும் கயிலைநன் மலையினை ஏரினார்*
*முடியிரா வணன்எடுத் தான்இற வாரினார்* 292-366 திருமுதுகுன்றம்

*மாலொடும் பொருதிறள் வாளரக் கன்னெரிந்து*
*ஓவிடும் படிவிரல் ஒன்று வைத்தான்* 293-377 தென்குடித்திட்டை

*கத்திட அரக்கனைக் கால்விரல் ஊன்றிய அத்தன்*
294-386 திருக்காளத்தி

*கொடி வரைபெற மாவரைத்தலத் தால்அரக்கனை*
*வலியை வாட்டிய மாண்பதே* 296-407 திருக்கண்டியூர் வீரட்டம்

*மேலெனக்கு எதிர் இல்லையென்ற அரக்கனார்மிகை செற்ற*
297-418 &

*தூர்த்தன் வீரம் தீர்த்த கோவை ஆத்தமாக ஏத்தினோமே*
298-429 பொது திருப்பதிகம்

*இலங்கை அரசைத் துலங்க ஊன்றும் நலங்கொள் கம்பன்*
299-440 திருக்கச்சியேகம்பம்

*தடவரையைத் தன்தாளினால் ஆழ்ந்த அரக்கன்*
*ஒல்க அன்று அடர்த்த அண்ணல்* 300-451 திருச்சிற்றேமம்

*இலங்கை மன்னனை ஈரைந்து இரட்டிதோள் துலங்க ஊன்றிய*
*தூமழு வாளினார்* 302-473 திருக்கழிப்பாலை

*இலங்கை மன்னன் இருபது தோளிறக் கலங்கக் கால்வீர*
*லாற்கடைக் கண்டவன்* 303-484 திருவாரூர்

*அரக்கன் தான்கிரி யேற்றவன் தன்முடிச் செருக்கி னைத்தவிர்த்தாய்*
305-505 &

*தூர்த்தன் வீரம் தொலைத்தருள் ஆலவாய் ஆத்தனே அஞ்சல்*
*என்றருள் செய்* 309-546 &

இலங்கை
கறையிலங்கு கண்டனே கருத்திலாக் கருங்கடல் துறையிலங்கை 310- 587 திருஆலவாய்
மன்னனைத் தோளடர ஊன்றினாய்

தென்னி லங்கையர் மன்னன் செழுவரை தன்னில் அங்கு அடர்த்தருள்
306-516 திருமழபாடி
செய்தவன்

இலங்கை மன்னன் எடுத்த அடுக்கன்மேல் தலங்கொள் கால்விரல்
சங்கரன் ஊன்றலும் மலங்கி வாய்மொழி செய்தவன்
307-527 பொது நமச்சிவாயத் திருப்பதிகம்

இலங்கை வேந்தன் இருபது தோளிற விலங்கலில் அடர்த்தான்
308-535 திருத்தண்டலை நீள்நெறி

தெற்றியாற் செற்றரக்கன் உடலைச் செழு மால்வரைக்கீழ்
315-612 திருவொற்றியூர்
ஒற்றியான்

பேரெழில் தோளரக்கன் வலி செற்றதும் 316-624 திருச்சாத்தமங்கை

நெடுமுடி பத்துடைய நிகழ்வாளரக் கன்னுடலைப் படுமிடர்
கண்டயர்ப் பருமால் வரைக் கீழடர்த்தான் 317-634 திருக்குடமூக்கு

இலங்கையர் மன்னனாகி எழில்பெற்ற இராவணனைக் கலங்கவோர்
கால்விரலாற் கதிர்பொன்முடி பத்துஅலற நலங்கெழு சிந்தையனாய்
அருள் பெற்ற 318-645 திருவக்கரை

கரம்இரு பத்தினாலும் கடுவன்சின மாய்எடுத்த சிரம்ஒரு பத்தும்உடை
அரக்கன் வலிசெற்றுகந்தான் 319 - 656 திருவெண்துறை

செற்றரக்கன் வலியைத் திருமெல் விரலால் அடர்த்து முற்றும்
வெண்ணீறணிந்த திருமேனியன் 320-667 திருப்பனந்தாள்

எரியார்வேல் கடல்தானை இலங்கைக்கோன் றனைவீழ முரியார்ந்த
தடந்தோள்கள் அடர்த்துகந்த முதலாளர் 322-688 திருப்பெருவேளூர்

ஏழ்கடல் சூழ் தென்னிலங்கைக் கோமானை எழில்வரை
வாய்த் தாழ்விரலால் ஊன்றியதோர் தன்மையினார்
323-699 திருக்கச்சி நெறிக்காரைக்காடு

இறைபயிலும் இராவணன்றன் தலைபத்தும் இருபதுதோள் திறலழிய அடர்த்தாரும் 324-710 திருவேட்டக்குடி

மருப்பிடை நெருப்பெழு தருக்கொடு செருச்செய்த பருத்த களிறின் பொருப்பிடை விருப்புற இருக்கையை ஒருக்குடன் அரக்கன் உணராது ஒருத்தியை வெருக்குற வெருட்டலும் நெருக்கென நிருத்தவிரலால் கருத்தில ஒருத்தனை எருத்துஇற நெரித்த கயிலாய மலையே

326-733 திருக்கயிலாயம்

எரியனைய கரிமயிர் இராவணனை ஈடழிய எழில்கொள் விரலால் பெரியவரை யூன்றியருள் செய்தசிவன் மேவுமலை

327-744 திருக்காளத்தி

இலங்கைநகர் மன்னன்முடி ஒருபதினொடு இருபதுதோள் நெரிய விரலால் விலங்கலில் அடர்த்தருள் புரிந்தவர்

328-755 மயிலாடுதுறை

கையிருப தோடுமெய் கலங்கிட விலங்கலையெடுத்த கடியோன் ஐயிரு சிரங்களை யொருங்குடன் நெரித்த அழகன்

329-766 திருவைகாவூர்

சாயவிரல் ஊன்றிய இராவணன் தன்மைகெட நின்ற பெருமான்

330-778 திருமாகறல்

நேசமிகு தோள்வலவன் ஆகியிறை வன்மலையை நீக்கியிடலும் நீசன்விறல் வாட்டிவரை யுற்றது உணராத நிரம்பாமதியினான்

331-788 திருப்பட்டீச்சரம்

ஓதமலிகின்ற தெனிலங்கையரையன் மலிபுயங்கள் நெரியப் பாதமலிகின்ற விரல் ஒன்றினால் அடர்த்த பரமன்

332-799 திருத்தேவூர்

முடித்தலைகள் பத்துடை முருட்டுரு அரக்கனை நெருக்கி விரலால் அடித்தலமுன் வைத்து அலமரக் கருணை வைத்தவன்

334-821 திருவேதவனம்

எண்ணமது இன்றிஎழிலார் கைலை மாமலை
எடுத்த திறலார் திண்ணிய அரக்கனை
நெரித்தருள் புரிந்த சிவலோகன் 335-831 திருமாணிகுழி

உரக்கர நெருப்பு எழ நெருக்கி வரை பற்றிய
வொருத்தன் முடிதோள் அரக்கனை அடர்த்தவன்
இசைக்கினிது நல்கியருள் அங்கணன்

336-842 திருவேதிகுடி

வரைத்தல நெருக்கிய முருட்டுருள் நிறத்தவன
வாய்கள் அலற வீரற்றலை யுகிர்சிறுது வைத்த பெருமான்

337-853 திருக்கோகரணம்

ஆனவலியின் தசமுகன் தலை அரங்கஅணி ஆழி விரலால்
ஊன்அமர் உயர்ந்த குருதிப் புனலில் வீழ்தர உணர்ந்த பரன்

338-864 திருவீழிமிழலை

ஒருவரையு மேல்வலி கொடேன்என எழுந்த விறலோன்
இப்பெருவரையின் மேலொர் பெருமானும் உளனோ என வெகுண்ட
கருவரையும் ஆழ்கடலும் அன்னதிறல் கைகள் உடையோனை
அருவரையில் ஊன்றியடர்த்தான்

340-886 அவளிவனல்லூர்

ஏறுபுகழ் பெற்றதெனி லங்கையவர் கோனையரு வரையில்
சீரியவனுக் கருளும் எங்கள் சிவலோகன்

341-897 திருநல்லூர்

பாதமொர் விரலுற மலையடர் பலதலை
நெரிதரப் பூதமொடு அடியவர் புனைகழல் தொழுதெழு புகழினர்

343-919 திருவீழிமிழலை

கட்டுர மதுகொடு கயிலைநன் மலைமலி கரமுடை நிட்டுரன்
உடலொடு நெடுமுடி ஒருபது நெரி செய்தார்

344-930 திருச்சேறை

தன்னியல் தசமுகன் நெரிய

345-941 திருநள்ளாறு

தெண்கடல் புடையணி நெடுமதில் இலங்கையர் தலைவனைப்
பண்பட வரைதனில் அடர்செய்த பைங்கழல் வடிவினர்

346-952 திருவிளமர்

நீண்டு இலங்கு அவிர்ஒளி நெடுமுடி அரக்கன் இந்நீள் வரையைக்
கீண்டி இடந்திடுவன் என்று எழுந்தவன் ஆள்வினை கீழ்ப்படுத்தார்

348-974 திருத்துருத்தியும் திருவேள்விக்குடியும்

நீலமாமணி நிறத் தரக்கனை இருபது கரத்தொடு ஒல்க வாலினாற்
கட்டிய வாலியார்

349-984 வடகுரங்காடுதுறை

முந்திமா விலங்கல் அன்று எடுத்தவன் முடிகள் தோள்
நெரிதரவே உந்திமா மலரடி ஒருவிரல் உகிர்நுதியால் அடர்த்தார்
350-995 திருநெல்வேலி

பொழில் இலங்கைக் குரிசிலைக் குலவரைக் கீழ்உற அடர்த்தவர்
351-1006 திரு அம்பர்மாகாளம்

தூர்த்தனைத் தொலைவு செய்தீரே 353-1027 திருஇன்னம்பர்

நெருக்கிய பொழிலணி நெல்வெண்ணெய் மேவிய
அரக்கனை அசைவு செய்தீரே 354-1038 திருநெல்வெண்ணெய்

தசமுகன் உரநெரித்தீர் 355-1049 திருச்சிறுகுடி

இலங்கைமன் இடர் கெடுத்தீர் 356-1060 திருவீழிமிழலை

பத்து முடியடர்த்தீர் 357-1068 திருமுதுகுன்றம்

குன்றினால் அன்று அரக்கன் தடந்தோள் அடர்த்தார் & தேவியை
வவ்விய தென்னிலங்கை அரையன் திறல் வாட்டி ஏவியல்
வெஞ்சிலை யண்ணல் 359-1086, 1089 திருஇராமேச்சுரம்

தண்டுஅணை தோள் இருபத்தினொடும் தலைபத்து
உடையானை ஒண்டுஅணை மாது உமைதான்நடுங்க
ஒருகால் விரல் ஊன்றி மிண்டது தீர்த்தருள்
செய்யவல்ல விகிர்தர் 361-1108 திருவலம்புரம்

தேரர வல்குல்அம் பேதையஞ்சத் திருந்து வரைபேர்த்தான்
ஆரரவம் பட வைத்த பாதம் உடையான்
363-1130 திருக்கலிக்காமூர்

வெஞ்சின வாளரக்கன் வரையை விரலால் எடுத்தான் தோள் அஞ்சும்
ஒரு ஆறுஇரு நான்கும் ஒன்றும் அடர்த்தார் அழகாய நஞ்சிருள்
கண்டத்து நாதர் 364-1141 திருவலஞ்சுழி

கூசம் இலாது அரக்கன் வரையைக் குலுங்க எடுத்தான் தோள்
நாசமதாகி இறஅடர்த்த விரலான் 365-1152 திருநாரையூர்

ஆற்ற வாள் அரக்கற்கும் அருளினாய் 366-1163 &

தோள்கள் பத்தொடு பத்து மயக்கியே தொக்க
தேவர் செருக்கை மயக்கியே
வாளரக்கன் நிலத்துக் களித்துமே
வந்த மால்வரை கண்டு களித்துமே

நீள்பொருப்பை எடுத்த உன்மத்தனே 373-1242 &
நின்விரலால் தலையான் மதமத்தனே

இராவணன் திண்தோள் இருபது நெரிதர ஊன்றி ஆவணங் கொண்ட சடைமுடி யண்ணல் 378-1297திருஆலவாய்

தடவரை அரக்கனைத் தலைநெரித்தார்
367-1174 திருக்கயிலாயமும், திருவானைக்காவும், திருமயேந்திரமும், திருவாரூரும்

இரக்கம் இல்தொழில் அரக்கனாருடன் நெருக்கினான்
369-1197 திருவீழிமிழலை

பண்டரக்கன் எடுத்த பலத்தையே பாய்ந்தரக்கன் எடுத்த பலத்தையே
கொண்டரக்கிய துங்கால் விரலையே 372-1231 திருக்கச்சியேகம்பம்

தானவக்குலம் விளக்கியே தாரகைச் செலவு இளக்கியே
வான டர்த்த கயிலாயமே வந்துமேவு கயிலாயமே
தானெ டுத்த வல் லரக்கனே தடமுடித் திரள ரக்கனே
மேனடைச் செல விருப்பனே மிழலை நற்பதி விருப்பனே 374-1253 &

கடுத்தவாள் அரக்கன் கைலையன் றெடுத்த காமுரஞ்
சிரநெரிந்து அலற அடுத்ததோர் விரலால்
அஞ்செழுத்து உரைக்க அருளினன் 377-1286 திருவீழிமிழலை

ஒலிசெய்த குழலின் முழவமது இயம்ப ஓசையால் ஆடல்அறாத
கலிசெய்த பூதம் கையினால் இடவே காலினால் பாய்தலும் அரக்கன்
வலிகொள்வர் 379-1308 திருப்பந்தணைநல்லூர்

தலையொரு பத்தும் தடக்கையது இரட்டி தானுடை அரக்கன்ஒண்
கயிலை அலைவது செய்த அவன் திறல் கெடுத்த ஆதியார்
380-1317 திருஓமாம்புலியூர்

எடுத்தவன் தருக்கை இழித்தவர் விரலால் ஏத்திட ஆத்தமாம் பேறு
தொடுத்தவர் 381-1327 திருக்கோணமலை

தக்கிருந்தீர் அன்று தாளால் அரக்கனை உக்கிருந்து ஒல்க உயர்வரை
கீழிட்டு நக்கிருந்தீர் 383-1344 திருநல்லூர்ப்பெருமணம்

எண்ணாத அரக்கன் உரத்தை நெரித்துப் பண்மார் தருபாடல்
உகந்தவற் பற்றாம் - திருவிடைவாய்

*** மூன்றாம் திருமுறை முற்றிற்று ***



# திருநாவுக்கரசர் தேவாரம்

## நான்காம் திருமுறை



ஆர்த்தான் அரக்கன்றனை மால்வரைக்கீழ் அடர்த்திட்டருள்
செய்த அது கருதாய் 1-10 &

நரம்பெழு கைகள் பிடித்து நங்கை நடுங்க மலையை
உரங்களெல்லாம் கொண்டு
ஒன்பதும் ஒன்றும் அலற வரங்கள் கொடுத்தருள் செய்வான்
2-20 &

பூண்டதோர் அரக்கனைப் பொருவில் மால்வரைத் தூண்டு
தோளவைபட அடர்த்த தாளினார் 10-103 &

தடக்கையால் எடுத்து வைத்துத் தடவரை குலுங்க ஆர்த்துக்
கிடக்கையால் இடர்கள் ஓங்கக் கிளர்மணி முடிகள் சாய
முடக்கினார் திருவிரலால் முருகமர் கோதை பாகத்து அடக்கினார்
28-258 &

தீர்த்தமா மலையை நோக்கிச் செருவலி அரக்கன் சென்று
பேர்த்தலும் பேதை அஞ்சப் பெருவிரல் தேனை யூன்றிச்
சீர்த்த மாமுடிகள் பத்தும் சிதறு வித்தவனையன்று
ஆர்த்தவாய் அலறவிட்டார் அதிகை வீரட்டனாரே 28-277 &

மைஞ்ஞலம் அனைய கண்ணாள் பங்கன் மாமலையை யோடி
மெய்ஞ்ஞரம்பு உதிரம் பில்க விசைதணிந்து அரக்கன் வீழ்ந்து
கைஞ்ஞரம்பு எழுவிக் கொண்டு காதலால் இனிது சொன்ன
கிஞ்ஞரம் கேட்டுகந்தார் கெடில வீரட்டனாரே
28-283 திருவதிகை வீரட்டானம்

கையஞ்சு நான்குடையானைக் கால்விரலால் அடர்த்தானும்
4-41 &

மறுத்தானொர் வல்லரக்கன் ஈரைந்து முடியினொடு
தோளும் தாளும் இறுத்தானை 5-51 &

மஞ்சாடு குன்றடர வூன்றி மணிவிரலால் துஞ்சாப் போர் வாளரக்கன்
தோள் நெரியக் கண்குருதிச் செஞ்சாந்து அணிவித்து
19-197 திருவாரூர்

*அடர்ப்பரிய இராவணனை அருவரைக்கீழ் அடர்த்தவனே*

6-61 திருக்கழிப்பாலை

*சுனைமல்கு கயிலாயம் எடுத்தானைத் தடுத்தானை*

7-71 திருக்கச்சியேகம்பம்

*கருவரைசூழ் கடலிலங்கைக் கோமானைக் கருத்தழியத் திருவிரலால்*
*உதைகரணம் செய்துகந்த சிவமூர்த்தி*

13-132 திருவையாறு

*கடுகிய தேர்செலாது கயிலாய மீது கருதேல் உன்வீரம் ஒழி நீ*
*முடுகுவதன்று தன்மம் எனநின்று பாகன் மொழிவானை நன்று முனியா*
*விடுவிடு வென்று சென்று விரைவுற் றரக்கன் வரையுற் றெடுக்க முடிதோள்*
*நெடுநெடு இற்றுவீழ விரலுற்ற பாத நினைவுற்றது என்றன் மனமே*

14-144 பொது - தச புராணத் திருப்பதிகம்

*அந்திச் செவ்வான் படியானை அரக்கன் ஆற்றல் அழித்தானை*

15-155 பொது - பாவநாசத் திருப்பதிகம்

*கறுத்தார் மணிகண்டம் கால்விரல் ஊன்றி இறுத்தார் இலங்கையர்*
*கோன் முடி பத்தும் அறுத்தார்*

16-165 திருப்புகலூர்

*பொருள் மன்னனைப் பற்றிப் புட்பகம் கொண்ட மருள் மன்னனை*
*எற்றி வாளுடன் ஈந்து கருள் மன்னு கண்டம் கறுக்க நஞ்சுண்ட*
*அருள் மன்னர்*

7-176 திருவாரூர் அரநெறி

*பத்துக்கொலாம் அவர் காயப்பட்டான் தலை*

18-186 பொது - விடம் தீர்த்த திருப்பதிகம்

*மதியிலா அரக்கன் ஓடி மாமலை எடுக்க நோக்கி நெதியன்தோள்*
*நெரிய ஊன்றி*

22-228 கோயில்

*சங்கங்கள் பாட ஆடும் சங்கரன் மலை யெடுத்தான் அங்கங்கள்*
*உதிர்ந்து சோர அலறிட அடர்த்து நின்றும்*

29-293 திருச்செம்பொன்பள்ளி

*மாலினாள் அணங்கை அஞ்ச மதில் இலங்கைக்கு மன்னன்*
*வேலினான் வெகுண்டு எடுக்கக் காண்டலும் வேத நாவன்*
*நூலினான் நோக்கி நக்கு நொடிப்ப தோர் அளவில் வீழக்*
*காலினால் ஊன்றி யிட்டார் கழிப்பாலைச் சேர்ப்பனாரே*

30-303 திருக்கழிப்பாலை

*வந்திருபதுகள் தோளால் எடுத்தவன் வலியை வாட்டிக்*
*கற்திருவங்கள் கேட்டார்*

31-313 திருக்கடவூர் வீரட்டம்

மூர்த்திதன் மலையின் மீது போகாதா முனிந்து நோக்கிப்
பார்த்துத்தான் பூமி மேலாற் பாய்ந்துடன் மலையைப் பற்றி
ஆர்த்திட்டான் முடிகள் பத்தும் அடர்த்து நல் அரிவை அஞ்சத்
தேத்தெத்தா என்னக் கேட்டார் திருப்பயற் றூரனாரே

32-323 திருப்பயற்றூர்

திருமறைக்காடு

துணிவுடை அரக்கன் ஓடி எடுத்தலும் தோகை அஞ்ச மணமுடிப் பத்து இறுத்தார் 33-333

34-ம் பதிகத்தில் உள்ள இத்தலத்து பத்து பாடல்களிலும் இராவணனைப் பற்றிப் பாடியுள்ளார்.

1. தேரையு மேல்கடாவித் திண்ணமாகத் தெழித்து நோக்கி
ஆரையு மேலுணரா ஆண்மையான் மிக்கான் றன்னைப்
பாரையும் விண்ணும் அஞ்சப் பரந்த தோள் முடியடர்த்துக்
காரிகை அஞ்சல் என்பார் கலிமறைக் காடனாரே 334

2. முக்கிமுன் வெகுண்டு எடுத்த முடியுடை யரக்கர் கோனை
நக்கிருந்து ஊன்றி 335

3. மிகப்பெருத்து உலாவ மிக்கான் நக்கொரு தேர் கடாவி
அகப்படுத் தென்று தானும் ஆணுமையான் மிக்க ரக்கன்
உகைத்தெடுத் தான் மலையை ஊன்றலும் அவனையாங்கே
நகைப் படுத் தருளினான் 336

4. அந்தரத் தேர் கடாவி யாரிவன் என்று சொல்லி
உந்தினான் மாமலையை ஊன்றலும் ஒள்அரக்கன்
பந்தமாம் தலைகள் பத்தும் வாய்கள் விட்டலறி வீழச்
சிந்தனை செய்துவிட்டார் 337

5. தடுக்கவும் தாங்க வொண்ணாத் தன்வலி யுடைய னாகிக்
கடுக்கவோர் தேர் கடாவிக் கையிரு பதுகளாலும்
எடுப்பன் நான் என்ன பண்டம் என்றெடுத்தானை ஏங்க
அடுக்கவே வல்லன் ஊராம் 338

6. நாள்முடிக் கின்ற சீரான் நடுங்கியே மீது போகான்
கோள்விடித் தார்த்த கையான் கொடியன் மாவலியன் என்று
நீள்முடிச் சடையர் சேரு நீள்வரை எடுக்க லுற்றான்
தோள்முடி நெரிய வைத்தார் 339

7. பத்துவாய் இரட்டிக் கைகள் உடையவன் மா வலியன் என்று
பொத்திவாய் தீமை செய்த பொருவலி அரக்கர் கோனைக்
கத்திவாய் கதற அன்று கால் விரல் ஊன்றி யிட்டார் 340

8. பக்கமே விட்ட கையான் பாங்கிலா மதிய னாகிப்
புக்கனன் மாமலைக் கீழ்ப் போதுமாறு அறிய மாட்டான்!
மிக்கமா மதிகன் கெட்டு வீரமும் இழந்தவாறே
நக்கன பூதம் எல்லாம் 341

9. நாணஞ்சு கையன் ஆகி நன்முடி பத்தி னோடு
பாணஞ்சு முன் னிழந்து பாங்கிலா மதியனாகி
நீணஞ்சு தானு ணரா நின்றெடுத் தானை அன்று
ஏணஞ்சு கைகள் செய்தார் 342

10. தென்கையான் தேர் கடாவிச் சென்றெடுத் தான் மலையை
முன்கைமா நரம்பு வெட்டி முன்னிருக்கு இசைகள் பாட
அங்கைவான் அருளி னானூர் அணிமறைக் காடு தானே 343

மலையுடன் விரவி நின்று மதியிலா அரக்க னூக்கத் தலையுடல்
அடர்த்து மீண்டே தலைவனாய் அருள்கள் நல்க
35-353 திருவிடைமருதூர்

குடையுடை அரக்கன் சென்று குளிர்கயி லாய வெற்பின்
இடைமிட வரலை அஞ்ச எடுத்தலும் இறைவன் நோக்கி
விடையுடை விகிர்தன் தானும் விரலினால் ஊன்றி மீண்டும்
படைகொடை அடிகள 363-திருப்பழனம்

அரக்கனுக்கு அருளும் வைத்தார் ஐயன் ஐயாரனாரே 38-383 &
அறிவிலா அரக்கன் ஓடி அருவரை எடுக்க லுற்று
முறுகினான் முறுகக் கண்டு மூதறி வாளன் நோக்கி
நிறுவினான் சிறுவி ரலால் நெரிந்துபோய் நிலத்தில்வீழ
அறிவினால் அருள்கள் செய்தான் 39-393 &
மலையலால் இருக்கை யில்லை மதித்திடா அரக்கன் தன்னைத்
தலையலால் நெரித்ததில்லை 40-403 திருவையாறு

கற்றுவந்து அரக்கன் ஓடிக் கயிலாய மலையெ டுக்கச் செற்றுகந்
தருளிச் செய்தார் 41-413 திருச்சோற்றுத்துறை

அண்டத்தைக் கழிய நீண்ட அடலரக் கன்றன் ஆண்மை
கண்டொத்துக் கால்விரலால் ஊன்றி மீண்டு அருளிச் செய்த
42-423 திருத்துருத்தி

தென்னவன் மலையெ டுக்கச் சேயிழை நடுக்கம் கண்டு
மன்னவன் விரலால் ஊன்ற மணிமுடி நெரிய வாயால்
கன்னலின் கீதம் பாடக் கேட்டவர் காஞ்சி தன்னுள்
இன்னவர்க்கு அருளிச் செய்தார் 43-433 திருக்கச்சிமேற்றளி

புட்பகத்தேர் உடையானை அடர ஊன்றி ஒறுத்துகந்து
அருள்கள் செய்தார் 45-453 திருவொற்றியூர்

**திருக்கயிலாயம்**

47-ம் பதிகத்தில் உள்ள இத்தலத்து பத்து பாடல்களிலும் இராவணனைப் பற்றிப் பாடியுள்ளார்

1. கனகமா வயிரம் உந்து மாமணிக் கயிலை கண்டும்
உனகனாய் அரக்கன் ஓடி எடுத்தலும் உமையாள் அஞ்ச
அனகனாய் நின்ற ஈசன் ஊன்றலும் அலறி வீழ்ந்தான் 456

2. கதித்தவன் கண் சிவந்து கயிலை நன்மலையை யோடி
அதிர்த்தவன் எடுத் திடல்லும் அரிவைதான் அஞ்ச ஈசன்
நெதித்தவன் ஊன்றியிட்ட நிலையழிந்து அலறி வீழ்ந்தான் 457

3 கறுத்தவன் கண்சிவந்து கயிலைநன் மலையைக் கையால்
மறித்தலும் மங்கை யஞ்ச வானவர் இறைவன் நக்கு
நெறித்தொரு விரலால் ஊன்ற நெடுவரை போல வீழ்ந்தான் 458

4. கடுத்தவன் கண் சிவந்து கயிலை நன்மலையை யோடி
எடுத்தவன் மங்கை யஞ்ச இறையவன் இறையே நக்கு
நொடுப்பள விரலால் ஊன்ற நோவதும் அலறி யிட்டான் 459

5 கன்றித்தன் கண் சிவந்து கயிலை நன்மலையை யோடி
வென்றித்தன் கைக்த லத்தால் எடுத்தலும் வெருவ மங்கை
நன்றுத்தான் நக்கு நாதன் ஊன்றலும் நகழ வீழ்ந்தான் 460

6 களித்தவன் கண் சிவந்து கயிலை நன்மலையை யோடி
நெளித்தவன் எடுத்திடல்லும் நேரிழை அஞ்ச நோக்கி
வெளித்தவன் ஊன்றியிட்ட வெற்பினால் அலறி வீழ்ந்தான் 461

7. கருத்தனாய்க் கண் சிவந்து கயிலை நன்மலையைக் கையால்
எருத்தனாய் எடுத்தவாறே ஏந்திழை யஞ்ச ஈசன்
திருத்த னாய் நின்றதேவன் திருவிரல் ஊன்ற வீழ்ந்தான் 462

8. கடியவன் கண் சிவந்து கயிலை நன்மலையை யோடி
வடிவுடை மங்கை யஞ்ச எடுத்தலும் மருவ நோக்கிச்
செடிபடத் திருவிரல் லால் ஊன்றலும் சிதைந்து வீழ்ந்தான் 463

9. கரியத்தான் கண் சிவந்து கயிலை நன்மலையைப் பற்றி
இரியத்தான் எடுத்தி டல்லும் ஏந்திழை அஞ்ச ஈசன்
நெரியத்தான் ஊன்றா முன்ன நிற்கிலாது அலறி வீழ்ந்தான் 464

10. கற்றனன் கயிலை தன்னைக் காண்டலும் அரக்கன் ஓடிச்
செற்றனன் எடுத்த வாறே சேயிழை யஞ்ச ஈசன் உற்றிறை
யூன்றா முன்னம் உணர்வழி வகையால் வீழ்ந்தான் 465

திண்டிறல் அரக்கனோடிச் சீகயிலாயம் தன்னை
எண்டிறல் இலனுமாகி எடுத்தலும் ஏழை அஞ்ச
விண்டிறல் நெரியவூன்றி முகக் கடுத்து அலறி வீழப்
பண்டிறல் கேட்டுகந்த பரமர் ஆப்பாடியாரே

475 திருவாப்பாடி

எடுத்தனன் எழிற் கயிலை இலங்கையர் மன்னன் றன்னை
அடுத்தொரு விரலால் ஊன்ற அலறிப்போய் அவனும் வீழ்ந்து
விடுத்தனன் கை நரம்பால் வேத கீதங்கள் பாடக்
கொடுத்தனர் கொற்ற வாணாள் குறுக்கை வீரட்டனாரே

485 திருக்குறுக்கை வீரட்டம்

அரக்கன் திண்டோள் அருவரை நெரிய ஒன்றும் குழகனே

497 திருக்கோடிக்கா

தடக்கைநால் ஐந்துக்கொண்டு தடவரை தன்னைப்பற்றி
எடுத்தவன் பேர்க ஓடி இருந்தன பூதம் எல்லாம்
முடித்தலை பத்தும் தோளும் முறிதர இறையே ஊன்றி
அடர்த்தருள் செய்ததென்னே ஆரூர் மூலட்டனீரே 507திருவாரூர்

அருவரை தாங்கி னானும் அருமறை யாதியானும்
இருவரும் அறிய மாட்டா ஈசனார் இலங்கை வேந்தன்

527 திருப்புகலூர்

வாளெயிறு இலங்க நக்கு வளர் கயிலாயம் தன்னை
ஆள்வலி கருதிச் சென்ற அரக்கனை அரைக்கீழ் அன்று
தோளொடு பத்து வாயும் தொலைந்துடன் அழுந்த ஊன்றி
ஆண்மையும் வலியும் தீர்ப்பார் அவர் வலம் புரவனாரே

537 திருவலம்புரம்

கூத்தராய்ப் பாடியாடிக் கொடுவலி அரக்கன் றன்னை
ஆர்த்தவாய் அலறுவிப்பார் 547 &

மலைக்கு நேராயரக்கன் சென்றுற மங்கை யஞ்சத்
தலைக்கு மேற் கைகளாலே தாங்கினான் வலியைமாள
உலப்பிலா விரலால் ஊன்றி ஒறுத்தவற்கு அருள்கள் செய்து
557 திருவாவடுதுறை

அடல்விடை யூர்தியாகி அரக்கன் தோள் அடர ஊன்றிக்
கடலிடை நஞ்சம் உண்ட கறையணி கண்டனார்
567 திருப்பருப்பதம்

**திருஅவளிவள் நல்லூர்:**

இப்பதிகத்தில் உள்ள பத்து பாடல்களிலும் இராவணனுடைய செயல் குறித்துப் பாடியுள்ளார்.

1. தோற்றினான் எயிறுகவ்வித் தொழிலுடை யரக்கன் றன்னைத்
   தேற்றுவான் சென்று சொல்லச் சிக்கெனத் தவிரும் என்று
   வீற்றினை யுடைய னாகி வெடுவெடுத்து எழுந்த வன்றன்
   ஆற்றலை அழிக்க வல்லார் 568

2. வெம்பினார் அரக்கர் எல்லா மிகச் சழக்கு ஆயிற் றென்று
   செம்பினால் எடுத்த கோயில் சிக்கெனச் சிதையும் என்ன
   நம்பினார் என்று சொல்லி நன்மையால் மிக்கு நோக்கி
   அம்பினால் அழிய எய்தார் 569

3. கீழ்ப்படக் கருத லாமோ கீர்த்திமை யுள்ளதாகில்
   தோட்பெரு வலியினாலே தொலைப்ப னான மலையையென்று
   வேட்பட வைத்து வாறே விதிர்விதிர்த்து அரக்கன் வீழ்ந்து
   ஆட்படக் கருதிப் புக்கார் 570

4. நிலைவலம் வல்லன் அல்லன் நேர்மையை நினைய மாட்டான்
   சிலை வலம் கொண்ட செல்வன் சீரிய கயிலை தன்னைத்
   தலைவலம் கருதுப் புக்குத் தாக்கினான் றன்னை யன்று 571

5. தவ்வலி யொன்ற னாகித் தனதொரு பெருமை யாலே
   மெய்வ்வலி யுடையன் என்று மிகப்பெருந் தேரை யூர்ந்து
   செவ்வலி கூர்விழியாற் சிரம் பத்தால் எடுக்குற்றானை
   அவ்வலி தீர்க்க வல்லார் 572

6. நன்மைதான் அறிய மாட்டான் நடுவிலா அரக்கர் கோமான்
வன்மையே கருதிச் சென்று வலிதனைச் செலுத்த லூற்றுக்
கன்மையால் மலையை யோடிக் கருதித்தான் எடுத்து வாயால்
அம்மையோ என்ன வைத்தார் 573

7. கதம்படப் போது வார்கள் போதுமக் கருத்தி னாலே
சிதம்பட நின்ற நீர்கள் சிக்கெனத் தவிரும் என்று
மதம்படு மனத்தனாகி வன்மையால் மிக்கு நோக்க
அதம்பழத் துருவு செய்தார் 574

8. நாடுமிக் குழிதர் கின்ற நடுவிலா அரக்கர் கோனை
ஓடுமிக் கென்று சொல்லி ஊன்றினான் உகிரி னாலே
பாடிமிக் குய்வன் என்று பணியநற் றிறங்கள் காட்டி
ஆடுமிக் கரவம் பூண்டார் 575

9. சேனந்தான் இலா வரக்கன் செழுவரை எடுக்க வூன்றி
ஆனந்த அருள்கள் செய்தார் 576

10. ஊக்கினான் மலையை யோடி உணர்விலா அரக்கன் றன்னைத்
தாக்கினான் விரலினாலே தலைபத்தும் தகர வூன்றி
நோக்கினான் அஞ்சத் தன்னை நோன்பிற வூன்று சொல்லி
ஆக்கினார் அமுதமாக 577

பொருகடல் இலங்கை மன்னன் உடல்கெடப் பொருத்தி நல்ல
கருகிய கண்டத் தானை 587 திருப்பெருவேளூர்

**திருஇராமேச்சுரம் பதிகம் 61, அனைத்துப் பாடல்களும் இராவணன் செயல்கள் குறித்தவை:**

1. பாசமும் கழிக்க கில்லா அரக்கரைப் படுத்துத் தக்க வாசமிக்க
மலர்கள் கொண்டு மதியினால் மால் செய் கோயில் 588

2. முற்றின நாள்கள் என்று முடிப்பதே கார ணமாய்
ஒற்றவன் போர்க ளாலே உணர்விலா அரக்கர் தம்மைச்
செற்ற மால் செய்த கோயில் 589

3. கடலிடை மலைகள் தம்மால் அடைத்து மால் தரும முற்றி
திடலிடைச் செய்த கோயில் 590

4. குன்றுபோல் தோளு டைய குணமிலா அரக்கர் தம்மைக்
கொன்றுபோர் ஆழி யம்மால் வேட்கையார் செய்தகோயில் 591

5. வீரமிக் கெயிறு காட்டி விண்ணுற நீண்ட அரக்கன்
கூரமிக் கவனைச் சென்று கொன்றுடன் கடற் படுத்துத்
தீரமிக்கான் 592

6. ஆர்வல நம்மின் மிக்கார் என்றஅவ் வரக்கர் கூடிப்
போர்வலம் செய்து மிக்குப் பொருதவர் தம்மை வீட்டித்
தேர்வலம் செற்றமால் 593

7. வாக்கினால் இன்பு உரைத்து வாழ்கிலார் தம்மை எல்லாம்
போக்கி னார் புடைத்த வர்கள் உயிர்தனை உண்டு
மால்தான் தேக்கு நீர் செய்த கோயில் 594

8. பலவுநாள் தீமை செய்து பார்தன் மேல் குழுமி வந்து
கொலைவிலார் கொடிய ராய அரக்கரைக் கொன்று வீழ்த்த
சிலையினான் செய்த கோயில் 595

9. கோடிமா தவங்கள் செய்து குன்றினார் தம்மை யெல்லாம்
வீடவே சக்க ரத்தால் எரிந்துபின் அன்பு கொண்டு
தேடி மால் செய்த கோயில் 596

10. வன்கண்ணர் வாள ரக்கர் வாழ்வினை ஒன்ற றியார்
புன் கண்ணர் ஆகி நின்று போர்கள் செய்தாரை மாட்டிச்
செங்கண்மால் செய்த கோயில் 597

11. வரைகள்ஒத்தே யுயர்ந்த மணிமுடி அரக்கர் கோனை
விரையமுற் றறவொடுக்கி மீண்டு மால் செய்த கோயில்
598 திருஇராமேச்சுரம்

எடுப்பன்என்று இலங்கைக் கோன்வந்து எடுத்தலும் இருபது
தோள் அடர்த்தனே 608 திருஆலவாய்

உரத்தினால் வரையை யூக்க ஒருவிரல் நுதியி னாலே
அரக்கனை நெரித்த 618 திருஅண்ணாமலை

தருக்கின அரக்கன் தேரூர் சாரதி தடைநி லாது
பொருப்பினை யெடுத்த தோளும் பொன்முடி பத்தும் புண்ணாய்
நெரிப்புண்டங்கு அலறி மீண்டு நினைந்தடி பரவத் தம்வாள்
விருப்பொடும் கொடுப்பர் 628 திருவீழிமிழலை

புயங்கள்ஐஞ் ஞான்கும் பத்தும் ஆயகொண்டு அரக்கன் ஓடிச்
சிவன்திரு மலையைப் போக்கத் திருமலர்க் குழலி யஞ்ச
வியன்பெற எய்தி வீழ விரல் சிறிது ஊன்றி மீண்டே
சயம்பெற நாமம் ஈந்தார் 638 திருச்சாய்க்காடு

வன்மையால் மலையெடுத்தான் வலியினைத்
தொலைவித்தாங்கே நன்மையால் அளிப்பர் போலும்
648 திருநாகேச்சுரம்

விரைதரு கருமென் கூந்தல் விளங்கிழை வேல்ஒண் கண்ணாள்
வெருவர இலங்கைக் கோமான் விலங்கலை எடுத்த ஞான்று
பருவரை யனைய தோளும் முடிகளும் பாறி வீழத்
திருவிரல் ஊன்றினானே 658 திருக்கொண்டீச்சரம்

மத்தனாய் மலை யெடுத்த அரக்கனைக் கரத்தோடு ஒல்க
ஒத்தினார் திரு விரலால் ஊன்றியிட்டு அருள்வர் போலும்
668 திருவாலங்காடு

விரிகடல் இலங்கைக் கோனை விரிகயி லாயத்தின் கீழ்
இருபது தோளும் பத்துச் சிரங்களும் நெரிய ஊன்றிப்
பரவிய பாடல் கேட்டுப் படைகொடுத்து அருளிச் செய்தார்
678 திருக்கோவலூர் வீரட்டம்

பத்துமோர் இரட்டி தோளான் பாரித்து மலையெடுக்க
பத்துமோர் இரட்டி தோள்கள் படருடம்பு அடரவூன்றிப்
பத்துவாய் கீதம் பாடப் பரிந்தவற்கு அருள்கொடுத்தார்
687 திருநனிபள்ளி

கருமலி கடல்சூழ் நாகைக் காரோணர் கமலபாதத்து
ஒருவிரல் நுதிக்கு நில்லாது ஒண்திறல் அரக்கனுக்கான்
696 திருநாகைக்காரோணம்

ஆர்த்தெழும் இலங்கைக்கோனை அருவரை அடர்ப்பர் போலும்
706 திருஇன்னம்பர்

ஒருவரு நிகரிலாத ஒண்திறல் அரக்கன் ஓடிப்
பெருவரை எடுத்த திண்டோள் பிறங்கிய முடிகள் இற்று
மருவிஎம் பெருமான் என்ன மலரடி மெள்ள வாங்கித்
திருவருள் செய்தார் 715 திருச்சேறை

*உரவனைத் திரண்ட திண்டோள் அரக்கனை ஊன்றி மூன்றூர்*
*நிரவனை நிமிர்ந்த சோதி* 725 &

*பெருவிரல் இறை தான் ஊன்றப் பிறைஎயிறு இலங்க அங்காந்*
*தருவரை யனைய தோளான் அரக்கன் அன்று அலறி வீழ்ந்தான்*
735 &

*உய்ந்தகால் உதயத்து உம்பர் உமையவள் நடுக்கம் தீர*
*வைத்தகால் அரக்க னோதன் வான்முடி தனக்கு நேர்ந்தான்* 753 &

*வெட்டன உடையனாகி வீரத்தால் மலை யெடுத்த*
*துட்டனைத் துட்டுத் தீர்த்துச் சுவைவிபடக் கீதங் கேட்ட அட்டமா மூர்த்தி*
763 &

*உயர் இலங்கைக் கிழவன் இருபது தோளும் ஒரு விரலால் இறுத்த*
*அழகன்* 811 பொது

*தருக்கு மிகுத்துத்தன் தோள்வலி உன்னித் தடவரையை*
*வரைக்கை களால் எடுத்து ஆர்ப்ப மலைமகள் கோன்சிரித்து*
*அரக்கன் மணிமுடி பத்தும் அணிதில்லை அம்பலவன்*
*நெருக்கி மிதித்த விரல் கண்ட கண்கொண்டு காண்பதென்னே*
779 கோயில்

*கரையார் கடல்சூழ் இலங்கையர் கோன்றன் முடி சிதறத்*
*தொலையா மலரடி ஊன்றலும் உள்ளம் விதிர்விதிர்த்துத்*
*தலையாய்க் கிடந் துயர்ந்தான்* 799 திருக்கழுமலம்

*இலங்கைக்கு இறைவன் இருபது தோளும் முடிநெரியக்*
*கலங்க விரலினால் ஊன்றி அவனைக் கருத்தழித்த*
*துலங்கல் மழுவினன்* 821 திருச்சோற்றுத்துறை

*தருக்கின வாளரக் கன்முடி பத்திறப் பாதந்தன்னால்*
*ஒருக்கினவாறு அடியேனைப் பிறப்பறுத்து ஆளவல்லான்*
832 திருஒற்றியூர்

*அடுத்திருந்தாய் அரக்கன் முடி வாயொடு தோள் நெரியக்*
*கெடுத்திருந்தாய்* 842 திருப்பழனம்

*மங்கை நடுக்குறவே மொய்க்கை அரக்கனை ஊன்றினன்*
852 திருப்பூந்துருத்தி

*வருத்தனை வாளரக்கன்முடி தோளொடு பத்திறுத்த பொருத்தனை*
872 திருவேதிகுடி

இலங்கைக்கு இறை தன்னை இருபது தோள் அறுத்தும் இட்டார் 882 &

வலியான் தலைபத்தும் வாய்விட்டு அலற வரை அடர்த்து
902 திருவையாறு

வரையெடுத்த அரக்கன் உடல் நெரித்தாய் 922 திருப்பாதிரிப்புலியூர்

கறுக்கொண்டு அரக்கன் கயிலையைப் பற்றிய கையுமெய்யும்
நெறுக்கென்று இறச்செற்ற சேவடியார் 932 திருவீழிமிழலை

பொறித்தேர் அரக்கன் பொருப்பெடுப்பு உற்றவன் பொன்முடித் தோள்
இறத்தாள் ஒருவிரல் ஊன்றிட்டு அலற இரங்கி ஒள்வாள் குறித்தே
கொடுத்தாய் 942 திருச்சத்திமுற்றம்

புகவு மதில்சூழ் இலங்கையர் காவலனைக் கல்லார் முடியொடு
தோள் இறக்கச் செற்ற கழலடியான் 953 திருநல்லூர்

ஒண்கயிலை நெருக்கிய வாளரக்கன் தலை பத்து நெரித்தவன்
975 திருஇன்னம்பர்

மற்பொலி தோளான் இராவணன்றன் வலி வாட்டுவித்த
பொற்கழலான் 985 &

இருபது தோள் அங்குலம் வைத்தவன் செங்குருதிப் புனலோட
அஞ்ஞான்று அங்குலி வைத்தான் 992 திருவாரூர்

கருந்தடங் கண்ணியும் தானும் கடல் நாகைக் காரோணத்தான்
இருந்த திருமலை என்றிறைஞ் சாதன்று எடுக்கலுற்றான்
பெருந்தலை பத்தும் இருபது தோளும் பிதிர்ந்தலற
இருந்தரு ளிச்செய்ததே மற்றுச் செய்திலன் எம்இறையே
1001 திருநாகைக்காரோணம்

மலை ஆர்த்தெடுத்த கூன் திகழ் வாளரக்கன் முடி பத்தும் குலைந்து
வீழ ஊன்றிய சேவடியான் 1025 திருக்கடவூர் வீரட்டம்

கடவுந் திகிரி கடவாது ஒழியக் கயிலையுற்றான்
படவுந் திருவிரல் ஒன்று வைத்தாய் 1030 திருத்தூங்கானை மாடம்

மத்தத்து அரக்கன் இருபது தோளும் முடியுமெல்லாம்
பத்துற்று உறநெரித்தாய் 1038 &

மேல் இலங்கு தவந்தான் எடுக்கத் தலைபத்து இறுத்தனை
1049 பொது

*** நான்காம் திருமுறை முற்றிற்று ***



# திருநாவுக்கரசர் தேவாரம்

## ஐந்தாம் திருமுறை



ஓங்கு மால்வரை யேந்தலுற் றான்சிரம்
வீங்கி விம்முற வூன்றிய தாளினான் 21 கோயில்

மலையொப்பானை மணிமுடி யூன்றிய அலையொப்பானை
31 திருநெல்வாயில் அரத்துறை

அரக்கனை அலறவ்விரல் ஊன்றிய திருத்தனை 41 திரு அண்ணாமலை
வஞ்ச ரக்கன் காமும் சிரத்தொடும்
அஞ்சும் அஞ்சுமோர் ஆறு நான்கும் இறப்
பஞ்சின் மெல்விரலால் அடர்த்து ஆயிழை 83 திருஅன்னியூர்
குறைகாட் டான்விட்ட தேர்குத்த மாமலை
இறைக்காட்டி எடுத்தான் தலை ஈரைந்தும்
அறைக்காட் டான்இறை யூன்றலும் வாய்விட்டான் 92 &
அரக்கனை விரலால் இடர்த்திட்ட நீர் இரக்கம் ஒன்றிலீர்
103 திருமறைக்காடு

கடுக்கண் டன்கயி லாய மலைதனை எடுக்கல்
உற்ற இராவணன் ஈடற
வடுக்கண் இன்றி வெகுண்டவன் 113 திருமீயச்சூர் இளங்கோயில்
மழலை யேற்று அணாளன் திருமலை
கழல ஆர்த்தெடுத் தான் முடி தோளிறக்
கழல்கொள் காலில் திருவிரல் ஊன்றலும்
மிழலை யானடி வாழ்கென விட்டதே 124 &
ஒருத்தன் ஓங்கலைத் தாங்கலுற் றான்உரம் வருத்தினாய்
134 திருவீழிமிழலை

முற்றிலா மதி சூடும் முதல்வனார் ஒற்றினார் அலையால் அரக்கன் முடி
எற்றினார் 145 திருவிடைமருதூர்

மதத்த வாளரக் கன்மணிப் புட்பகம் சிதைக்கவே திருமாமலைக் கீழ்ப்புக்குப்
பதைத்தங் கார்த்தெடுத்தான் பத்து நீண்முடி பிதக்க ஊன்றிய
பேரெயில் ஆளரே 162 திருப்பேரெயில்

இலையி னார்கொன்றை சூடிய ஈசனார் மலையினால் அரக்கன் திறல்
வாட்டினார் 173 திருவெண்ணி

183 திருக்கடம்பந்துறை

காலால் ஊன்றுகந்தான்
வரைக்கண் நாலஞ்சு தோளுடையான் தலை அரைக்க ஊன்றி அருள்
194 &
செய்த ஈசனார்
பரப்பு நீரிலங்கைக் கிறைவன் அவன் உரத்தினால் அடுக்கல் எடுக்கல்லுற
இரக்கம் இன்றி இறை விரலால் தலை அரக்கினான்
சனியும் வெள்ளியும் திங்களும் ஞாயிறும் முனிவனாய் முடி
பத்துடையான்றனைக் கனிய ஊன்றிய காரணம் என்கொலோ

214 திருஇன்னம்பர்

அன்று தானரக்கன் கயிலாயத்தைச் சென்று தானெடுக்க உமை அஞ்சலும்
நன்றுதான் நக்கு நல்விரலால் ஊன்றிப்பின் கொண்டு கீதங் கேட்டான்

224 திருக்குடமூக்கு

எளியனா மொழியா இலங் கைக்கிறை களியினாற் கயிலாயம்
எடுத்தவன் நெறிய வூன்ற வல்லான் 234 திருநின்றியூர்

வரையி னாலுயர் தோளுடை மன்னனை வரைய னார் வலி
செற்றவர் 244 திருவொற்றியூர்

இலங்கைக்கோன் நெறிய ஊன்றி யிட்டார் விரல் ஒன்றினால்

255 திருப்பாசூர்

நலங்கொள் பாகனை நன்று முனிந்திடா லிலங்கல் கோத்தெடுத்
தானது மிக்கிட
இலங்கை மன்னன் இருபது தோளினை மலங்க ஊன்றி வைத்தார்

264 திருவன்னியூர்

அரக்கின் மேனியன் அந்தளிர் மேனியன்
அரக்கின் சேவடி யாளஞ்ச அஞ்சும் என்று
அரக்கன் ஈரைந்து வாயும் அவறவே
அரக்கி னான் அடி யாலும் ஐயாறனே 274 &
எடுத்த வாளரக் கனதிறல் வண்ணமும்
இடர்க்கள் போற்பெரி தாகிய வண்ணமும்
கடுத்த கைந்நரம் பால்இசை வண்ணமும்
அடுத்த வண்ணமும் ஆவர் ஐயாறரே 284 திருவையாறு
மிக்க வாளரக்கன் வலி நீட்டினான் 294 திருவாவடுதுறை
அரக்கன் ஆற்றல் அழித்த அழகன் 305 திருப்பராய்த்துறை
ஓத மாகடல் சூழிலங் கைக்கிறை கீதம் கின்னரம் பாடக் கெழுவினான்.
பாதம் வாங்கிப் பரிந்தருள் செய்தங்கோர் ஆதி

315 திருவானைக்கா

துடித்த தோள்வலி வாளரக் கந்தனைப்
பிடித்த கைஞ்ஞெரித்து உற்றன கண்ணெல்லாம்
பொடிக்க வூன்றிய 325 திருப்பூந்துருத்தி

வாழ்ந்த வன்வலி வாளரக் கன்றனை
ஆழ்ந்து போய் அலறல் விரல் ஊன்றினான்
336 திருச்சோற்றுத்துறை

வலிந்த தோள்வலி வாளரக் கன்றனை நெருங்க நீள்வரை யூன்று
346 திருநெய்த்தானம்

பொங்கு மாகடல் சூழிலங் கைக்கிறை அங்கமான இறுத்தருள்
செய்தவன் 356 திருப்பழனம்

இலங்கைக்கோன் நெரிய வூன்றியிட்டார்
366 திருச்செம்பொன்பள்ளி

அடுத்து வந்த இலங்கையர் மன்னனை எடுத்த தோள்கள் இறநெரித்
தானையார் 377 திருக்கடவூர் வீரட்டம்

பருத்த தோளும் முடியும் பொடிபட இருத்தினான் அவன்
இன்னிசை கேட்டதும் வரத்தினான் 396 திருமயிலாடுதுறை

பொன்செய் மாமுடி வாளரக் கந்தலை
அஞ்சும் நான்கும் ஒன்றும் இறுத்தவன் 405 திருக்கழிப்பாலை

தருக்கிச் சென்று தடவரை பற்றலும்
நெருக்கி யூன்ற நினைந்து சிவனையே
அரக்கன் பாட அருளும் எம்மான் 415 திருப்பைஞ்ஞீலி

சேடனார் உறையும் செழு மாமலை ஓடி ஆங்கெடுத்தான் முடி பத்திற
வாட வூன்று மலரடி வாங்கிய வேடனார் 425 திருவேட்களம்

மல்லை மல்கிய தோளரக் கன்வலி ஒல்லையில் ஒழித்தான்
435 திருநல்லம்

விடலையாய் விலங்கல் எடுத்தான் அடரவோர் விரல் ஊன்றிய
446 திருஆமாத்தூர்

கட்டம் பேசிய காராக் கன்றனைத் துட்டடக்கிய ... அட்டமூர்த்தி
456 திருத்தோணிபுரம்

மத்தனாய் மதியாது மலைதனை எத்தினான் தோள்முடி பத்திற
ஒத்தினான் விரலால் ஒருங்கு ஏத்தலும் பொத்தினான்
466 திருப்புகலூர்

மங்க லக்குடி யான்கயி லைம்மலை
அங்க லைத்தெடுக் குற்ற அரக்கர்கோன்
தன்க ரத்தொடு தாள்தலை தோள் தகர்ந்து
அங்க லைத்தழுது உய்ந்தனன் தானன்றே 739 திருமங்கலக்குடி

நிறங்கொள் மால்வரை ஊன்றி எடுத்தலும்
நறுங்குழல் மடவாள் நடுக்கு எய்திட
மறங்கொள் வாளரக்கன் வலி வாட்டினான் 749 திருஎறும்பியூர்

இரக்கம் இன்றி மலையெடுத் தான்முடி
உரத்தை ஒல்க அடர்த்தான் 759 திருக்குரக்குக்கா

வன்னி கொன்றை எருக்கணிந் தான்மலை உன்னியே சென்று
எடுத்தவன் ஒண்திறல் தன்னை வீழத் தனிவிரல் வைத்தவன்
768 திருக்கானூர்

பொருந்து நீண்மலை யைப்பிடித்து ஏந்தினான்
வருந்த ஊன்றி மலரடி வாங்கினான் 778 திருச்சேறை

வரங்களால் வரையை எடுத் தான்றனை அரங்க
வூன்றி அருள் செய்த அப்பன் 785 திருக்கோடிகா

அரக்கனார் தலை பத்தும் அழிதர
நெருக்கி மாமலர்ப் பாதம் நிறுவிய பொருப்பனார்
794 திருப்புள்ளிருக்கு வேளூர்

இலங்கை வேந்தன் இருபது தோளிற்று மலங்க மாமலை மேல்விரல்
வைத்தவன் 804 திருஅன்பில் ஆலந்துறை

நெருக்கி அம்முடி நின்றிசை வானவர் இருக்கொடும்
பணிந்து ஏத்த இருந்தவன் 809 திருப்பாண்டிக் கொடுமுடி

பாரமாக மலையெடுத் தான்றனைச் சீரமாகத்
திருவிரல் ஊன்றினான் 819 திருவான்மியூர்

கடல்கழிதழி நாகைக் காரோணன்றன் வடவரை எடுத்து ஆர்த்த
அரக்கனை அடர ஊன்றிய பாதம் 829 திருநாகைக் காரோணம்

எண்ணிலா அரக்கன் மலை யேந்திட எண்ணி நீண்முடி பத்தும்
இறுத்தவன் 839 மேலைத் திருக்காட்டுப்பள்ளி

இரக்க முன்னறி யாதுஎழு தூதுவர் பரக்க ழித்தவர் பற்றுதன்
முன்னமே அரக்கனுக்கு அருள் செய்த வாட்போக்கியார்

853 திருவாட்போக்கி

கடுத்த மேனி யரக்கன் கயிலையே
எடுத்த வன்னெடு நீள்முடி பத்திறப் .
படுத்த மணஞ் சேரி யருள்எனக்
கொடுத்த னன்கொற்ற வாளொடு நாமமே 863 திருமணஞ்சேரி

ஆதி மாமலை அன்று எடுத்தான் இற்றுச் சோதி என்றலும்
தொல்லருள் செய்திடும் ஆதியான் 873 திருமருகல்

ஏழு மாமலை யேழ்பொழில் சூழ்கடல்
ஏழு போற்றும் இராவணன் கைந்நரம்பு

ஏழு கேட்டருள் செய்தவன் 880 பொது-தனிக் குறுந்தொகை

அரக்கன் ஈரைந் தலையுமோர் தாளினால் நெருக்கி யூன்றி யிட்டான்

913 பொது - காலபாசத் திருக்குறுந்தொகை

முற்றி னானை இராவணன் நீள்முடி ஒற்றினானை
ஒருவிரலால் உறப் பற்றினானை

934 பொது-தொழற்பாலதே என்னும் திருக்குறுந்தொகை

இலங்கை மன்னனை ஈரைந்து பத்தும் அன்று அலங்க லோடடனே
செல ஊன்றிய நலங்கொள் சேவடி

985 பொது - சித்தத்தொகை திருக்குறுந்தொகை

அரக்கன் கயிலாயத்தைக் கறுத்தானைக் காலினில் விரல்
ஒன்றினால் ஒறுத்தானை 995 பொது - உள்ளத்திருக்குறுந்தொகை

பொற்றை யுற்றெடுத்தான் உடல் புக்கிறக்கு உற்ற
நற்குரையார் கழற் சேவடி

1005 பொது - பாவநாசத் திருக்குறுந்தொகை

அரக்கன் வல்லரட்டு ஆங்கு ஒழித்தார் அருள் பெருக்கச் செய்த பிரான்

1015 பொது - ஆதிபுராணத் திருக்குறுந்தொகை

*** ஐந்தாம் திருமுறை முற்றிற்று ***



# திருநாவுக்கரசர் தேவாரம்
## ஆறாம் திருமுறை



*மலைமறிக்கச் சென்ற இலங்கைக் கோனை மதனழியச்*
*செற்ற சேவடியினான்* 32 &

*அந்தாமரைப் போதலர்ந்தவ்வடி அரக்கனையும்*
*ஆற்றலழித்தவ்வடி* 63 திருஅதிகை வீரட்டம்

*மல்லூர் மணிமலை யின்மே லிருந்து வாளரக்கர் கோன்*
*தலையை மாளச் செற்று* 106 திருப்பந்தணைநல்லூர்

*நகழ மால்வரைக் கீழிட்டரக்கர் கோனை நலனழித்து*
*நன்கருளிச் செய்தான்* 116 திருப்புன்கூரும் திருநீடூரும்

*பொருதலங்கல் நீண்முடியான் போரரக்கன்*
*புட்பகந்தான் பொருப்பின் மீதோடா தாக*
*இருநிலங்கள் நடுக்கெய்த எடுத்திடுதலும்*
*- ஏந்திழையாள் தான்வெருவ இறைவன் நோக்கிக்*
*கரதலங்கள் கதிர்முடியா றஞ்சினோடு*
*கால் விரல் ஊன்று* 126 திருக்கழிப்பாலை

*மலையைக் கையால் உலங்கிளர எடுத்தவன் தோள் முடியும் நோவ*
*ஒருவிரலா லுறவைத்தார் இறைவா என்று புலம்புதலும்*
*அருளொடு போர் வாளும் வைத்தார் புகழ் வைத்தார்*
147 திருநல்லூர்

*இறுத்தானாம் எண்ணான் முடிகள் பத்தும்*
*இசைந்தானாம் இன்னிசைகள் கேட்டானாகும் ..*
158 திருக்கருகாவூர்

*அன்றவ் வரக்கன் அலறி விழ அருவரையைக் காலாலழுத்தினாரும்*
168 &

*சிட்டிலங்கு வல்லரக்கர் கோனை யன்று செழுமுடியுந்*
*தோளஞ்ஞாண் கடரக் காலால் இட்டிரங்கி*
*மற்றவனுக் கீந்தார் வென்றி* 178 திருவிடைமருதூர்

ஓராழித் தேருடைய இலங்கை வேந்தன் உடல் துணித்த
இடர்பாவங் கெடுப்பித்தன்று 184 &

நீருருவக் கடலிலங்கை யரக்கர் கோனை நெறுநெறென
அடர்த்திட்ட நிலையுந் தோன்றும் 189 திருப்பூவணம்

தூர்த்தனைத் தோள்முடி பத்திறுத்தான் தன்னைத்
தொன்னரம்பின் இன்னிசை கேட்டருள் செய்தானை

200 திருஆலவாய்

இறவாமே வரம்பெற்றே னென்று மிக்க
இராவணனை யிருபது தோள் நெரிய வூன்றி
உறவாகி யின்னிசை கேட்டிரங்கி மீண்டே
யுற்றபிணி தவிர்த்தருள வல்லான் தன்னை 210 திருநள்ளாறு

துயரிலங்கை வேந்தன் துளங்க அன்று
சோதி விரலாலுற வைத்தான் 241 திருமறைக்காடு

திருவாரூர்

பண்டொருகால் தசமுகனை அழுவித்தானை 263

தருக்கிமிக வரையெடுத்த அரக்கன் ஆகந் தளரவடி
யெடுத்தவன்றன் பாடல் கேட்டு இரக்க மெழுந்தருளிய
எம்பெருமான் 278

கோளரக்கர் கோன் தலைகள் குறைத்தார் போலும் 289

சீரார் முடி பத்துடையான் தன்னைத் தேசழியத் திருவிரலாற்
சிதைய நூக்கிப் பேரார் பெருமை கொடுத்தான் போலும் 299

அருவரையை யெடுத்தவன்தன் சிரங்கள் பத்தும் ஐந்நான்கு தோளும்
நெரித்தலற அன்று திருவிரலால் அடர்த்தவன் காண் 309

இலங்கையர்கோன் சிரம் நெரித்த இறைவா 319

அன்றரக்கன் ஐந்நான்கு தோளுந் தாளுஞ்
சிரம் நெரித்த சேவடியாய் போற்றி போற்றி 329

ஈசனா யுலகேழும் மலையுமாகி
இராவணனை ஈடழித்திட் டிருந்த நாளோ 349

இகலவனை இராவணனை யிடர்செய் தானை
339 திருவாரூர் அறநெறி

காக்குங் கடலிலங்கைக் கோமான் தன்னைக் கதிர்முடியுங் கண்ணும்
பிதுங்க வூன்றி வீக்கந் தவிர்த்த விரலார் போலும்
309 திருவெண்காடு

அரக்கனையும் ஆற்ற லழித்தார் தாமே 369 திருப்பழனம்

இலங்கையர் கோன் தோளிறுத்தா யென்றேன் நானே 379 &
பேரும் பெரிய இலங்கை வேந்தன் பெரிய முடி பத்திறுத்தாய் நீயே
390 திருவையாறு

இருசுடர் மீதோடா இலங்கைக் கோனை யீடழிய
இருபது தோளிறுத்தான் கண்டாய் 400 திருமழபாடி

மறித்தான் வலிசெற்றாய் நீயே என்றும் 417 &
எண்டோளனே யெம்பெருமா னென்றேத்தா இலங்கைக் கோனை
நெரித்தானை 427 திருநெய்த்தானம்

மறுத்தானை மலைகோத்தங்கு எடுத்தான் தன்னை
மணிமுடியோ டிருபதுதோள் நெரியக் காலால்
யிறுத்தானை யெழுநரம்பி னிசை கேட்டானை
437 திருப்பூந்துருத்தி

கடியிலங்கைக் கோனை யன்று கால்விரலாற் கதிர்முடியுந்
தோளுஞ் செற்ற மெய்யவனே 447 திருச்சோற்றுத்துறை

மருவுற்ற மலர்க்குழலி மடவா ளஞ்ச
மலைதுளங்கத் திசைநடுங்கச் செறுத்து நோக்கி
செருவுற்ற வாளரக்கன் வலிதான் மாளத்
திருவடியின் விரலொன்றால் அலற வூன்றி 457 திருவொற்றியூர்

திருவாவடுதுறை பாடல் 468 & 478

பெருவலியால் மலையெடுத்த அரக்கன் தன்னை நெரித்தானை 468
செறிந்தார் மதிலிலங்கைக் கோமான் தன்னைச்
செறுவரைக் கீழடர்த் தருளி 478

அலைகடல் சூழ் இலங்கை வேந்தன் கொங்கலர்த்த முடி நெரிய
விரலா லூன்றுங் குழகன் காண் 488 திருவலிவலம்

கையாற் கயிலை யெடுத்தான் தன்னைக்
கால் விரலால் தோள்நெரிய வூன்றி னான்காண்
மெய்யின் நரம்பிசையாற் கேட்பித் தாற்கு
மீண்டே யவற்கருள்கள் நல்கினான் காண் 498 திருக்கோகர்ணம்

**திருவீழிமிழலை 508, 519, 540**

அஞ்சாதே வரையெடுத்த அரக்கன் தோள்கள் இறுத்தானை
யெழுநரம்பி னிசைகேட்டானை 508

வலியின் மிக்க தன்கூர்மை கருதி வரையெடுக்க லுற்றான்
தலைகளொடு மலைகளன்ன தாளும் தோளும் பொன்கூருங்

கழலடியோர் விரலாலூன்றிப் பொருப்பதன் கீழ்
நெரித்தருள் செய் புவனநாதர் 519

கயிலாய மலையெடுத்தான் கதறி வீழக் கால்விரலால்
அடர்த்தருளிச் செய்தார் போலும் 540

இறுத்தானை இலங்கையர் கோன் சிரங்கள் பத்தும்
எழுநரம்பின் இன்னிசை கேட்டின்புற்றானை

550 திருப்புள்ளிருக்கு வேளூர்

எண்ணா இலங்கைக்கோன் தன்னைப் போற்றி
இறைவிரலால் வைத்துகந்த ஈசா போற்றி 561 &

சீலத்தான் தென்னிலங்கை மன்னன் போற்றி
சிலையெடுக்க வாயலற வைத்தாய் போற்றி

571திருக்கயிலாயம்

செங்கண்மால் சிலைபிடித்துச் சேனை யோடுஞ்
சேது பந்தனஞ் செய்து சென்று புக்கும்
பொங்குபோர் பலசெய்து புகலால் வென்ற
போரரக்கன் நெடுமுடிகள் பொடியாய்விழ
அங்கொருதன் திருவிரலால் இறையே யூன்றி
யடர்த்தவற்கே அருள்புரிந்த அடிகள் 590 திருவலம்புரம்

தென்னிலங்கை மன்னவர்கோன் சிரங்கள் பத்துந்
திருவிரலா லடர்த்தவனுக் கருள்செய்தார்

600 திருவெண்ணியூர்

அழலாடு மேனியனை அன்று சென்றக் குன்றெடுத்த
அரக்கன் தோள் நெரிய ஊன்றுங் கழலானை

610 திருக்கற்குடி

தசக்கிரிவன் மலையெடுக்க விரலால் ஊன்றி
முனிந்தவன்தன் சிரம்பத்துந் தாளுந் தோளும்
முரணழிந்திட் டருள்கொடுத்த மூர்த்தி 619 திருக்கன்றாப்பூர்

**திருவானைக்கா - 629 & 639**

படியேயுங் கடலிலங்கைக் கோமான் தன்னைப் பருமுடியுந்
திரள்தோளும் அடர்த்துகந்த அடியே 629 &

ஆர்த்தோடி மலையெடுத்த இலங்கை வேந்தன்
ஆண்மையெலாங் கெடுத்தவன்தன் இடரப்போதே தீர்த்தானை
639

**திருக்கச்சியேகம்பம் 649 & 659**

புகலிடத்தை நலிய வந்து பொருகயிலை எடுத்தவன்தன்
முடிதோள் நாலஞ் சிறுத்தான் காண் 649

மின்னிசையும் வெள்ளெயிற்றோன் வெகுண்டு வெற்பை யெடுக்க
அடியடர்ப்ப மீண்டவன்றன் வாயில் இன்னிசை கேட்டு
இலங்கொளி வாளீந்தோன் 659

ஆர்த்தோடி மலையெடுத்த அரக்கன் அஞ்ச
அருவிரலால் அடர்த்தானை 669 திருநாகேச்சரம்

முறிப்பான பேசிமலை யெடுத்தான் தானும்
முதுகிற முன்கைந்நரம்பை யெடுத்துப் பாடப் பறிப்பான்
சிற்றறிவாள் நீட்டினானை
679 திருக்கீழ்வேளூர்

இகழ்ந்தானை இருபதுதோள் நெரிய வூன்றி யெழுநரம்பினிசை பாட
இனிது கேட்டுப் புகழ்ந்தானை
689 திருமுதுகுன்றம்

தடுத்தானைத் தான்முனிந்து தன்தோள் கொட்டித்
தடவரையை இருபதுதோள் தலையினாலும்
எடுத்தானைத் தாள்விரலால் மாள வூன்றி
எழுநரம்பின் இசைபாடல் இனிது கேட்டுக்
கொடுத்தானைப் போரோடுங் கூர்வாள் தன்னை
699 திருப்பள்ளியின் முக்கூடல்

கலிவலி மிக்கோனைக் கால் விரலாற் செற்ற கயிலாய நாதனை
710 பொது - க்ஷேத்திரக்கோவை

கயிலாய மலையெடுத்தான் கரங்க ளோடு சிரங்களுரம்
நெரியக் கால்விரலாற் செற்றோன்
721 பொது - அடைவுத் திருத்தாண்டகம்

தசரதன்றன்மகன் அசைவு தவிர்த்தான் கண்டாய் 731 &
விலங்கலி வல்லரக்கனுட லடர்த்தான் கண்டாய்
732 திருவலஞ்சுழியும் திருக்கொட்டையூர்க் கோடீச்சரமும்

*கயிலாய மலையான் தன்னைக் கழுகினொடு*
*காகுத்தன் கருதி யேத்தும் நம்பனை*
*(காகுத்தன் – இராமபிரான்)*

736 &

*தோளாண்மை கருதிவரை யெடுத்த தூர்த்தன் தோள்வலியுந் தாள்வலியுந்*
*தொலைவித்தாங்கே நாளோடு வாள்கொடுத்த நம்பன்*

742 திருநாரையூர்

*மதிலிலங்கைக் கோன்மலங்க வரைக் கீழிட்டுக் குறிகொண்ட*
*இன்னிசை கேட்டுகந்தார் போலும்*

753 திருக்குடந்தைக் கீழ்க்கோட்டம்

*அலைகடல்சூழ் இலங்கை வேந்தன் சிரம் நெரித்த சேவடி காண்*

763 திருப்புத்தூர்

*இலங்கைத் தலைவன் சிரங்கள் பத்தும்*
*இறுத்தவனுக் கீந்த பெருமை கண்டேன்* 773 திருவாய்மூர்

*வண்கயிலை மாமலையை வந்தி யாத நீலக் கடல்சூழ்*
*இலங்கைக் கோனை நெரிய விரலா லடர்த்தார் தாமே*

783 திருவாலங்காடு

*கைத்தலங்க ளிருபதுடை அரக்கர் கோமான்*
*கயிலைமலை அதுதன்னைக் கருதா தோடி*
*முத்திலங்கு முடிதுளங்க வளைக ளெற்றி*
*முடுகுதலுந் திருவிரலொன் றவன்மேல் வைப்பப்*
*பத்திலங்கு வாயாலும் பாடல் கேட்டுப்*
*பரிந்தவனுக்கு இராவணன் என்றீந்த நாமத் தத்துவனை*

793 திருத்தலையாலங்காடு

*வெற்பெடுத்த இராவணனை விரலாலூன்றி நெரித்தானை*

803 திருமாற்பேறு

*உறைப்புடைய இராவணன் பொன்மலையைக் கையால்*
*ஊக்கஞ்செய் தெடுத்தலுமே உமையா ளஞ்ச*
*நிறைப் பெருந்தோள் இருபதும்பொன் முடிகள் பத்தும்*
*நிலஞ்சேர விரல் வைத்த நிமலர் போலும்*

821 திருச்சாய்க்காடு

*வேந்தன்நெடு முடியுடைய அரக்கர் கோமான்*
*மெல்லியலாள் உமைவெருவரிரைந் திட்டோடிச்*
*சாந்தமென நீறணிந்தான் கயிலை வெற்பைத்*
*தடக்கைகளா லெடுத்திடலும் தாளா லூன்றி*
*ஏந்துதிரள் திண்டோளுந் தலைகள் பத்தும்*

இறுத்தவன்தன் இசைகேட்டு இரக்கங் கொண்ட
பாந்தளணி சடைமுடி பாசூர்மேய பரஞ்சுடர் 831 திருப்பாசூர்

பேரரவப் புட்பகத் தேருடைய வென்றிப் பிறங்கொளிவாள்
அரக்கன் முடியிடியச் செற்ற சீரரவக் கழலானை
841 திருச்செங்காட்டங்குடி

மலைதன்னை மதியாதோடி மலைமகள்தன் மனம் நடுங்க
வானோரஞ்சக் கறுத்தவனாய்க் கயிலாய மெடுத்தோன்
கையுங் கதிர்முடியுங் கண்ணும் பிதுங்கியோடச் செறுத்தவன்
850 திருமுண்டீச்சரம்

தலையாய மலையெடுத்த தகவி லோனைத் தகர்ந்துவிழ
வொரு விரலாற் சாதித்தாண்ட சிலையார்
867 திருச்சிவபுரம்

வார்கெழுவு முலையுமையாள் வெருவ அன்று
மலையெடுத்த வாளரக்கன் தோளுந் தாளும்
ஏர்கெழுவு சிரம்பத்தும் இறுத்து மீண்டே
இன்னிசை கேட்டிருந்தானை இமையோர் கோனை
876 திருஓமாம்புலியூர்

விலங்கல் எடுத்துகந்த வெற்றியானை விறலழித்து
மெய்ந்நரம்பால் கீதங் கேட்டன்றிலங்கு சுடர்வாள்
கொடுத்தார் போலும் 886 திரு இன்னம்பர்
தோழன் விட்ட அடலாழித் தேருடைய இலங்கைக் கோனை
அருவரைக்கீழ் அடர்த்தானை 896 திருக்கஞ்சனூர்
அருந்தவத்தின் பெருவலியா லறிவ தன்றி
அடலரக்கன் தடவரையை யெடுத்தான் திண்டோள்
முரிந்து நெரிந்தழிந்து பாதாள முற்று
முன்கைநரம் பினையெடுத்துக் கீதம்பாட
இருந்தவனை யேழுலகு மாக்கினானை 906 திரு எறும்பியூர்

பயங்கள் பண்ணி இராவணனென் றவனைப்பேர் இயம்பக்
கொண்டார் 949 பொது - தனித் திருத்தாண்டகம்

அன்னத் தேருர்ந்த அரக்கன் தன்னை அலற இடர்த்திட்ட
அடியுங் கண்டேன் 960 பொது-திருவினாத் தாண்டகம்

ஏலக் கருவரைசூழ் கானல் இலங்கை வேந்தன்
கடுந்தேர் மீதோடாமைக் காலாற் செற்ற
பொருவரையாய் உன்னடிக்கே போதுகின்றேன் 980 திருப்புகலூர்

*** ஆறாம் திருமுறை முற்றிற்று ***

# சுந்தரமூர்த்தி நாயனார் அருளிய தேவாரம்

## ஏழாம் திருமுறை

தேரோட வரையெடுத்த அரக்கன் சிரம் பத்து இறுத்தீர்
20 திருப்பரங்குன்றம்

திண்தேர் நெடுவீதி இலங்கையர் கோன் திரள்தோள்
இருபதும் நெரித்தருளி 29 திருநெல்வாயில் அரத்துறை

இறுத்தாய் இலங்கைக் கிறையாயவனைத் தலை பத்தொடு
தோள்பல அற்றுவிழக் கறுத்தாய் 39 திரு அஞ்சைக்களம்

இலங்கையர் கோன் சிரம்பத்தொடு இருபது திண்தோளும்
இற்றலற ஒற்றைவிரல் வெற்பதன்மேல் ஊன்றி ..
162 திருக்கலயநல்லூர்

பிடுக்குண்டென் றோடிஓர் வெற்பெடுத்தாள் வலியை நெரித்தார்
176 திருநாவலூர்

இந்திரனுக்கும் இராவணனுக்கும் அருள் புரிந்தார்
186 மூப்பதும் இல்லை

அரக்கன் முடிகரங்கள் இடர்த்திட்ட எம் ஆதிப்பிரான்
206 திருக்கோளிலி

கடுத்தவன் தேர்கொண்டோடிக் கயிலாயநன் மாமலையை
எடுத்தவன் ஈரைந்துவாய் அரக்கன் முடிபத்தலற
விடுத்தவன் கைநரம்பால் வேதகீதங்கள் பாடலுறப்
படுத்தவன் பால்வெண்ணீற்றன் 225 திருப்பழமண்ணிப் படிக்கரை

அடர்த்தாய் வல்லரக்கன் தலைபத்தொடு தோள் நெரிய..
236 திருக்கழிப்பாலை

பெரிய கண்மூன்றும் உடையானைக் கருதாத அரக்கன்
பெருந்தோள்கள் நாலைந்தும் ஈரைந்து முடியும் உடையானை
391 திருவதிகைத் திருவீரட்டானம்

திரையினார் கடல்சூழ்ந்த தென்னிலங்கைக் கோனைச்
செற்றவனை 414 திருக்கானாட்டு முள்ளூர்

தேசுடைய இலங்கையர்கோன் வரைஎடுக்க அடர்த்துத்
திப்பிய கீதம் பாடத் தேரொடு வாள் கொடுத்தீர்
473 திருநாகைக் காரோணம்

வலிசேர் அரக்கன் தடக்கை ஐஞ்ஞான்கு அடர்த்த மதிசூடி.
486 ஊர்த்தொகை

தேரார் அரக்கன் போய்வீழ்ந்து சிதைய விரலால் ஊன்றினார்
546 திருக்கடவூர் மயானம்

எரியு மாகடல் இலங்கையர் கோனைத் துலங்க மார்வரைக்
கீழ் அடர்த்திட்டுக் குறிக்கோள் பாடலின் இசை கேட்டுக்
கோல வாளொடு நாளது கொடுத்த 268 திருப்புன்கூர்
காளையாகி வரையெடுத் தான்தன் கைகள் இற்றவன்
மொய்தலை எல்லாம் மூளைபோத ஒருவிரல் வைத்த மூர்த்தி
589 திருவாழ்கொளிபுத்தூர்

அரக்கன் ஆற்றலை அழித்தவன் பாட்டுக்கு அன்று இரங்கிய
வென்றியினான் 643 திருக்கோலக்கா
குற்றத் திறல் அரக்கனைச் செறுத்ததும் 685 திருவலிவலம்
இலங்கை வேந்தன் எழில் திகழ் கயிலை
எடுப்ப ஆங்கு இமவான் மகள் அஞ்சத்
துலங்கு நீள்முடி ஒருபதும் தோள்கள்
இருபதும் நெரித்து இன்னிசை கேட்டு
வலங்கை வாளொடு நாமமும் கொடுத்த வள்ளல் 696 திருநள்ளாறு
வந்த வாளரக்கன் வலி தொலைத்து வாழும் நாள் கொடுத்தாய்
வழி முதலே வெந்த வெண்பொடிப் பூசவல்லானே
713 திருவாவடுதுறை
பண்டங்கு இலங்கையர் கோனைப் பருவரைக்கீழ் அடர்த்திட்ட
அண்டன் 747 திருவாரூர்
கதிசூழ் இலங்கைக்கு இறை மலங்கவரை அடர்த்துக் கெதிபேறு
செய்து இருந்தானிடம் 800 திருக்கேதாரம்
நீரூர்தரு நிமலன் திருமலையார்க்கயல் அருகே தேரூர் தரும்
அரக்கன் சிரம் நெரித்தான் 841 திருச்சுழியல்
இரக்கம் இல்லவர் ஐந்தொடு ஐந்தலை தோள் இருபது
தாள் நெரிதர அரக்கனை அடர்த்தார் 890 திருப்பனையூர்
மலைஎடுத்த இராவணனைத் தலைப்பத்தும் நெரியக்
காலால் தொட்டானை 919 கோயில்
பற்றி வரையை எடுத்த அரக்கன் இற்று முரிய
விரலால் அடர்த்தார் 931 திருவொற்றியூர்
மறக்கொள் அரக்கன் வரைதோள் வரையால் இறக்கொள்
வீரற்கோன் இருக்கும் இடமாம் 946 திருநறையூர்ச் சித்தீச்சரம்
ஏழ்பிறப்பும் மங்கத் திருவிரலால் அடர்த்தான் வல் அரக்கனையும்
நங்கட்கு அருளும் பிரான் 992 திருநனிபள்ளி
கருவரை போல்அரக்கன் கயிலைம்மலைக் கீழ்க்கதற
ஒருவிரலால் அடர்த்து இன்னருள் செய்த உமாபதி
643 திருநன்னிலத்துப் பெருங்கோயில்

*** ஏழாம் திருமுறை முற்றிற்று ***

# மாணிக்கவாசகரின் திருவாசகம் திருக்கோவையார்
## எட்டாம் திருமுறை

**திருவாசகம்**

அங்கி அருக்கன் இராவணன் அந்தகன் கூற்றன்
செங்கண் அரிஅயன் இந்திரனும் சந்திரனும்
பங்கமில் தக்கனும் எச்சனும்தம் பரிசழியப்
பொங்கிய சீர்பாடி நாம் பூவல்லி கொய்யாமோ

289 - திருப்பூவல்லி

தேரை நிறுத்தி மலைஎடுத்தான் சிரம்
ஈர்ஐந்தும் இற்றவாறு உந்தீபற
இருபதும் இற்றதென்று உந்தீபற

313 திருவுந்தியார்

ஏர்தரும் ஏழுலகு ஏத்த எவ்வுருவும் தன் உருவாய்
ஆர்கலி சூழ்தென் இலங்கை அழகமர் மண்டோ தரிக்குப்
பேரருள் இன்பம் அளித்த பிரானைச் சீரிய வாயால் குயிலே
தென்பாண்டி நாடனைக் கூவாய்

349 குயிற் பத்து

மதிக்கும் திறலுடைய வல்லரக்கன் தோள் நெரிய
மிதிக்கும் திருவடி

565 குலாப்பத்து

ஆதி அந்நாள் உந்து திரைக் கடலைக் கடந்து
ஓங்கு மதில் இலங்கை அதனில் பந்தனை
மெல்விரலாட் கருளும் பரிசறிவார் எம்பிரா னாவாரே

593 திருவார்த்தை

(இராவணனுடைய மனைவி மண்டோதரி. சிறந்த சிவபக்தை. குயிற் பத்து, திருவார்த்தை ஆகிய இரண்டு பகுதிகளிலும் மண்டோதரிக்கு சிவபிரான் அருளியதைப் பாடியுள்ளார்).

**திருக்கோவையார்**

*அன்று இலங்கையர் கோன் மலைக்கீழ் விழச்செற்ற சிற்றம்பலவர்*

59 இடை வினாதல்

*வந்த வாளரக்கன் புயந்தலை தீரப் புலியூர் அரன் இருக்கும்*
*பொருப்பிற் கயந் தலையானை கடிந்த விருந்தினர்*

383 பரத்தையர் பிரிவு

*** எட்டாம் திருமுறை முற்றிற்று ***



## ஒன்பதாம் திருமுறை

**திருவிசைப்பா திருப்பல்லாண்டு:**

*அடங்க வல்லரக்கன் அருள் திருவரைக்கீழ் அடர்த்த*
*பொன்னம்பலத்தரசே*

திருமாளிகைத் தேவர் அருளிய திருவிசைப்பா-கோயில் 1-19

*தக்கன் .. எச்சன் மிக்க நெஞ்சு அரக்கன் .. மறலிவேள்*
*இவர்மிகை செகுத்தோன்*

சேந்தனார் அருளிய திருவிசைப்பா-திருவீழிமிழலை 55

*இலையார் கதிர்வேல் இலங்கை வேந்தன் இருபது தோளும்இற*
*மலைதான் எடுத்த மற்ற வற்கு வாளொடு நாள் கொடுத்தான்*

கண்டராதித்தர் அருளிய திருவிசைப்பா-கோயில் - 201

*அதித்த அரக்கன் நெரிய விரலால் அடர்த்தாய்*

திருவாலியமுதனார் அருளிய திருவிசைப்பா-கோயில் 3-243

*என்னை வலிவாரார் என்ற இலங்கையர் கோன்*
*மன்னும் முடிகள் நெரித்த மணவாளர்*

புருடோத்தம நம்பி அருளிய திருவிசைப்பா-கோயில் 275

## ஆசிரியர்கள்

1. திருமாளிகைத் தேவர்
2. சேந்தனார்
3. கருவூர்த் தேவர்
4. பூந்துருத்தி காட நம்பி
5 கண்டராதித்தர்
6. வேணாட்டடிகள்
7. திருவாலியமுதனார்
8. புருடோத்தம நம்பி
9. சேதிராயர்

சேந்தனார் - திருப்பல்லாண்டு

*** ஒன்பதாம் திருமுறை முற்றிற்று ***

## பத்தாம் திருமுறை
## திருமூலரின் திருமந்திரம்

*தாங்கி இருபது தோளும் தடவரை*
*ஓங்க எடுத்தவன் ஒப்பில் பெருவலி*
*ஆங்கு நெரித்து அமரா என்று அழைத்தபின்*
*நீங்கா அருள்செய்தான் நின்மலன் தானே*

- இரண்டாம் தந்திரம்
இலிங்க புராணம் - 350

*** பத்தாம் திருமுறை முற்றிற்று ***



# பதினோறாம் திருமுறை



*அடித்தலத்தின் அன்றரக்கன் ஐந்நான்கு தோளும்*
*முடித்தலமும் நீ முரித்த வாறென்*

காரைக்கால் அம்மையார் அருளிச்செய்த
திருஇரட்டை மணிமாலை 37-14

*செருக்கினால் வெற்பெடுத்த எத்தனையோ திண்தோள்*
*அரக்கனையும் முன்னின்று அடர்த்த*

காரைக்கால் அம்மையார் அருளிச்செய்த
அற்புதத் திருவந்தாதி 123- 80

*தலையாற் சுமந்துந் தடித்துங் கொடித்தேர் அரக்கன் என்னே*
*கலையான் ஒருவிரல் தங்ககில் வான்விட்ட காரணமே*

சேரமான் பெருமாள் நாயனார் அருளிச்செய்த
பொன்வண்ணத்து அந்தாதி 183- 16

*குன்றெடுத் தான்செவி கண்வாய் சிரங்கள் நெரிந்தலற*
*அன்றடர்த் தற்றுச் செற்றவன் நற்றவர்க் கற்றசிவன்*

சேரமான் பெருமாள் நாயனார் அருளிச்செய்த
பொன்வண்ணத்து அந்தாதி 42- 74

*வந்தோர் அரக்கனார் வண்கயிலை மால்வரையைத்*
*தந்தோள் வலியினையே தாம்கருதி – அந்தோ*
*இடந்தார் இடந்திட்டு இடார்க்கீழ் எலிபோல்*
*கிடந்தார் வலியெலாம் கெட்டு*

நக்கீர தேவ நாயனார் அருளிச்செய்த
கயிலை பாதி காளந்திபாதித் திருவந்தாதி 384

*ஏழின் ஓசை இராவணன் பாடத்*
*தாழ்வாய் கேட்டவன் தலையளி பொருத்தினை*
*ஆறிய சிந்தை யாகி ஐங்கதித்*
*தேரொடு திசைநெல விடுத்தோன்*

நக்கீர தேவ நாயனார் அருளிச்செய்த
திருஎழுகூற்றிருக்கை 487 42-45 வரிகள்

*ஈரமில் நெஞ்சத்து இராவணன் தன்னை*
*வீரம் அழித்து விறல்வாள் கொடுத்தனை*

நக்கீர தேவ நாயனார் அருளிச்செய்த
பெருந்தேவபாணி 489 - 46 & 47 வரிகள்

*அறிவின் ஓரா அரக்கனார் உடல்*
*நெறநெற இறுதர ஒருவிரல் ஊன்றியும்*

நக்கீர தேவ நாயனார் அருளிச்செய்த
கோபப் பிரசாதம் 491 - 23 & 24 வரிகள்

*தடுத்து வரையெடுத்த வாளரக்கன் வாயாறு உதிரம்*
*நிரையெடுத்து நெக்குடலம் இற்றுப் – புரையெடுத்த*
*பத்தனைய பொன்முடியும் தோள் இருபதும் நெரிய*
*மெத்தனவே வைத்த விரல் போற்றி*

நக்கீரதேவ நாயனார் அருளிச்செய்த போற்றித் திருக்கலிவெண்பா
500 - 16&17 வரிகள்

*மன்னும் பிறப்பறுக்கும் மாமருந்து வாளரக்கன்*
*துன்னும் சுடர்முடிகள் தோள்நெரியத் – தன்னைத்*
*திருச்சத்தி முற்றத்தான் சித்தத்துள் வைத்தான்!*
*திருச்சத்தி முற்றத்தான் தேசு*

கபிலதேவ நாயனார் அருளிச்செய்த சிவபெருமான் திருஇரட்டை
மணிமாலை - 571

*தாரான் எனினும் சடைமுடியான் சங்கரனந்*
*தாரான் தசமுகனைத் தோள்நெரித்துத் – தாராய*
*நாளுங் கொடுத்தந்த வானவர்கள் தம்முன்னே*
*வாளுங் கொடுத்தான் மதித்து* பரணதேவ நாயனார்
*அருளிச்செய்த சிவபெருமான் திருவந்தாதி* - 708

*மிடலொடியப் பண்டி லங்கையர் கோனொரு*
*விரலின் அமுக்குண்டு பண்பல பாடிய*
*வீரகு செவிக்கொண்டு முன்புளதாகிய*
*வெகுளி தவிர்த்தன்று பொன்றியிடா வகை*
*திடமருள் வைக்குஞ் செழுஞ்சுடர்*

பட்டினத்துப் பிள்ளையார் அருளிச்செய்த
கோயில் நான் மணி மாலை 864 &

*நுதிவிரலால் தாக்கிற்று அரக்கன் தலைகீழ்ப்*
*படத்தன் சுடர்வடிவாள் ஒக்கிற்று* 895 &

*வியந்தவாள் அரக்கனை மிதித்தனை* 902

பட்டினத்து அடிகள் அருளிய திருவிடைமருதூர் மும்மணிக்கோவை - 895, 902

*விரலால் அரக்கன்சென்னி பத்தும் கையான இருபதும்*
*சோர்தர வைத்திலயம் ஒத்துங் கையாலவன் பாடக்*
*கலையின் ஊடுகைவாள் எத்துங் கையான் என்று உகந்தளித்தார்*
*அவரக்கன் போன விமானத்தை ஆயிரம் உண்மை சுற்றும் துவர*

பட்டினத்துப் பிள்ளையார் அருளிய
திருஏகாம்ப முடையார் திருவந்தாதி

*திறல் கெட அரக்கனைத் திருவிரல் – உறுத்தது*

திருவொற்யூர் ஒருபா ஒருபஃது - 1010 வரி ||

*** பதினோறாம் திருமுறை முற்றிற்று ***

## ஆசிரியர்கள்

1. திரு ஆலவாய் உடையார்
2. காரைக்கால் அம்மையார்
3. ஐயடிகள் காடவர்கோன் நாயனார்
4. சேரமான் பெருமான் நாயனார்
5. நக்கீர தேவ நாயனார்
6. கல்லாடதேவ நாயனார்
7. கபில தேவ நாயனார்
8. பரணதேவ நாயனார்
9. இளம் பெருமான் அடிகள்
10. அதிராவடிகள்
11. பட்டினத்துப் பிள்ளையார்
12. நம்பியாண்டார் நம்பி

# சேக்கிழார் பெருமான் அருளிய
## பன்னிரண்டாம் திருமுறை

தெருண்டறியா அத்தன்மையனான இராவணனுக்கருளும்
கருணைத் திறமான
அதன் மெய்த் தன்மை அறிந்து துதிப்பதுவே மேல்கொண்டு
வணங்கினர் மெய்யுறவே

- திருநாவுக்கரசு நாயனார் புராணம் - 1340

தென்னிலங்கை இராவணன்தன் சிரமீரைந் தும்துணித்த
மன்னவனாம் இராமனுக்கு வரும்பெரும் பாதகந்தீர்த்த
பிஞ்ஞகரைத் தொழுவதற்கு நினைந்துபோய்ப் பெருமகிழ்ச்சி
துன்னியமனங் கரைந்துருகத் தொழுதெழுந்தார் சொல்லரசர்

- திருநாவுக்கரசு நாயனார் புராணம்
1673 இராமேஸ்வரத்தில் பாடியது.

மண்ணுலகில் வாழ்வார்கள் பிழைத்தாலும் வந்தடையின்
கண்ணுதலான் பெருங்கருணை கைக்கொள்ளும் எனக்காட்ட
எண்ணமிலா வல்லரக்கன் எடுத்து முறுந்திசைபாட
அண்ணலவற் கருள்புரிந்த ஆக்கப் பாடருள் செய்தார்

- திருஞானசம்பந்த நாயனார் புராணம் 1975

திருஞானசம்பந்த நாயனார் இராமேஸ்வரத்தைத் தொழும்போது பாடியவை:

விண்ணவரைச் செற்றுகந்தான் இலங்கை செற்ற
மிக்கபெரும் பாதகத்தை நீக்க வேண்டித்
திண்ணியபொற் சிலைத் தடக்கை இராமன் செய்த
திருவிரா மேச்சுரத்தைச் சென்று சேர்ந்தார் - 2785

செங்கண்மால் வழிபட்ட கோயில் நண்ணித்
திருமுன்பு தாழ்ந்தெழுந்து தென்னனோடும்
மங்கையர்க்கு நாயகியார் தாமும் மெய்ம்மை
மந்திரி யாரும்சூழ மணிநீள் வாயில்

பொங்கி எழும் விருப்பினால் உடனேபுக்குப்
புடைவலங் கொண் டுள்ளணைவார் போற்றிசெய்து
பங்கயச்செங் கைகுவித்துப் பணிந்து நின்று
பாடினார் மன்னனும் பரவி ஏத்த 2786

சேதுவின்கட் செங்கண்மால் பூசை செய்த
சிவபெருமான் தனைப்பாடிப் பணிந்து போந்து
காதலுடன் அந்நகரில் இனிது மேவி 2787

*** பன்னிரண்டாம் திருமுறை முற்றிற்று ***



ஸ்ரீராம லக்ஷ்மணர்களை தோளில் சுமந்து நிற்கும் அனுமான்
ஏரி காத்த ராமர் கோயில், திருநின்றவூர்

# 5. நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில் இராமாயணம்

ஆழ்வார்கள் தங்கள் பிரபந்தத்தில் இராமரைப் பற்றிப் பாடிய பாடல்கள் கொண்ட பகுதி:

**பெரியாழ்வார்** இவருடைய பாசுரங்கள், கிருஷ்ணாவதாரப் பெருமைகள் கொண்டது. அவர் இராமாவதாரத்தைப் பற்றிப் பாடியுள்ள பாடல்களில் சில:

*என்வில் வலிகண்டு போவென்றெதிர் வந்தான்*
*தன் வில்லினோடும் தவத்தை எதிர் வாங்கி*
*முன் வில் வலித்து முது பெண் உயிருண்டான்*
*தன் வில்லின் வன்மையைப் பாடிப்பற!*
*தாசரதி தன்மையைப் பாடிப்பற!*

(சீதையை மணந்து ராமர் மிதிலையிலிருந்து அயோத்திக்கு வருகையில், பரசுராமர் தன் வில்லுடன் எதிரில் வந்து, *"ராமா! என் வில்லின் வலிமையைக் கண்டு, பின் போவாயாக!"* என்று சொல்ல, பரசுராமருடைய வில்லோடு, தவத்தையும் எதிரிலேயே ராமர் வாங்கினார். அதற்கு முன்பு, வில்லினால் தாடகையின் உயிரைப் பறித்தார். அப்படிப்பட்ட ராமரது வில்லின் வலிமையையும், தசரதன் மகனது இயல்பையையும் பாடிப்பற!) என்று ஒரு பெண் பாடியதாக உள்ளது இப்பாடல்.

அதேபோன்று *"மாற்றுத் தாய் வனம் போகே என்றிட, படியில் குணத்துப் பரத நம்பிக்கு அன்றடிநிலை யீந்தான், சூர்ப்பணகாவைச் செவியோடு மூக்கு அவள் ஆர்க்க, கடலை அடைத்திட்டு இலங்கை புக்கு ஒராதான் பொன்முடி ஒன்பதோடு ஒன்றையும் நேரா அவன் தம்பிக்கே நீளரசீந்த ஆராவமுதன்"* என்றும், சீதைக்கு அனுமன் தெரிவித்த அடையாளங்களை மூன்றாம் பத்து, பத்தாம் திருமொழி பத்துப் பாடல்களிலும் பாடியுள்ளார்.

பெரியாழ்வார் நான்காம் பத்து, எட்டாம் திருமொழியில், திருவரங்கத் திருப்பதிப் பாசுரங்களில், *"பெருவரங்கள் அவைபற்றிப் பிழக்குடைய இராவணனை உருவரங்கப் பொருதழித்திவ் வுலகினைக் கண் பொறுத்தான் ஊர்"* என்றும், ஒன்பதாம் திருமொழியில்

*"மரவடியைத் தம்பிக்கு வான்பணயம் வைத்துப் போய் வானோர் வாழ செருவுடைய திசைக்கருமம் திருத்தி வந்து உலகாண்ட திருமால் கோயில்"* என்றும் பாடியுள்ளார்.

**ஆண்டாள் நாச்சியார்:** திருப்பாவையில் - நோற்றுச் சுவர்க்கம் - என்ற பத்தாவது பாடலில் *"பண்டொரு நாள் கூற்றத்தின் வாய்வீழ்ந்த கும்பகருணனும் தோற்றும் உனக்கே பெருந்துயில் தந்தானோ"* என்றும், "சினத்தினால் தென்னிலங்கைக் கோமானைச் செற்ற மனத்துக் கினியானை - பாடல் 12, *"சென்றங்கு தென்னிலங்கை செற்றாய் திறல் போற்றி"* - பாடல் 24, என்று மூன்று பாடல்களிலும்,

நாச்சியார் திருமொழியில் *"கடலையடைத் தரக்கர் குலங்களை முற்றவும் செற்று இலங்கையைப் பூசலாக்கிய சேவகா!"* (6ம் பாடல்), *"இலங்கையழித்த பிரானே!"* (பாடல் 4 மூன்றாம் திருமொழி), *"மாதலி தேர் முன்பு கோல்கொள்ள மாயன் இராவணன் மேல் சரமாரி தாய் தலை அற்றுவீழத் தொடுத்த தலைவன்"* ஐந்தாம் திருமொழி - பாடல் 3, *"கொல்லை அரக்கியை மூக்கரிந்திட்ட குமரனார்"* பத்தாம் திருமொழி பாடல் 4, நான்கு பாடல்களிலும் ராமாயணத்தைக் குறிப்பிட்டுள்ளார்.

**குலசேகர ஆழ்வார்:** முன் இராமனாய் மாறடர்த்ததும் இரண்டாம் திருமொழி மூன்றாம் பாடலிலும், திருக் கண்ணபுரத்தலப் பாடல்களில் *"மன்னுபுகழ் கௌசலைதன் மணிவயிறு வாய்த்தவனே! என்று தொடங்கி தேவரையும் அசுரரையும் திசைகளையும் படைத்தவனே! ஏவரிவெஞ் சிலைவலவா! இராகவனே! தாலேலோ"* என்று பத்து பதிகங்களிலும் இராமரைப் பற்றிப் பாடியுள்ளார்.

மேலும், ஆழ்வார் தம் ஒன்பதாம் திருமொழியில் *"வன் தாளினிணை வணங்கி"* என்று தொடங்கும் பாடல் முதல் *"ஏரார்ந்த கரு நெடுமால் இராமனாய் வனம் புக்க அதனுக்கு ஆற்றதாரார்ந்த தடவரைத் தோள் தயரதன் தான் புலம்பிய அப்புலம்பல் தன்னை"* என்று, ராமன் காடுநோக்கிச் சென்ற பிரிவினை தாங்காமல், தசரதன் புலம்பியவற்றையும் இப்பகுதியில் தருகின்றார்.

தில்லை நகர் திருச்சித்திரகூடத் திருப்பதி: *"அங்கணெடு மதிள் புடைசூழ் அயோத்தி என்னும் அணி நகரத்து உலகனைத்தும் விளக்கும் சோதி வெங்கதிரோன் குலத்துக்கு ஓர் விளக்காய்த் தோன்றி விண்முழுதும் உயக்கொண்ட வீரன் .. .."* என்று தொடங்கி, "தில்லை நகர்த் திருச்சித்ர கூடந்தன்னுள் திறல் விளங்கு மாருதியோடு

அமர்ந்தான் தன்னை" என்று முடியும் பாடல் வரை அனைத்திலும், இராமாவதாரத்தில் நிகழ்ந்த அருஞ்செயல்களைப் பாடியுள்ளார்.

**திருமழிசை ஆழ்வார்:** திருச்சந்த விருத்தத்தில் *"வேலை சூழ் வெற்பெடுத்த இஞ்சி சூழ் இலங்கை கட்டழித்த, கொண்டை கொண்ட கோதை மீது தேனுலாவு கூனி கூன் உண்டை கொண்டு அரங்க ஒட்டி உள்மகிழ்ந்த நாதன், வெண்திரைக் கருங்கடல் சிவந்து வேவ முன்னொர் நாள் திண்திறல் சிலைக்கை வாள்விட்ட வீரர், சரங்களைத் துரந்து வில்வளைத்து இலங்கை மன்னவன் சிரங்கள் பத்தறுத்துதிர்த்த செல்வர், இலைத்தலைச் சரம் துரந்து இலங்கை கட்டழித்தவன், உடைந்த வாலிதன் தனக்கு உதவ வந்து இராமனாய் மிடைந்த ஏழ்மரங்களும் அடங்கவெய்து, இரும்பரங்க வெஞ்சரம் துரந்த வில்லிராமனே!, ஊர்மேய ஆவி நீ; .. .. .. எம்பிரானும் நீ; இராமனே! மாறுசெய்த வாளரக்கன் நாளுலப்ப அன்று இலங்கை நீறுசெய்து சென்று கொன்று வென்றி கொண்ட வீரனார்"* என்று பல பதிகங்களில் இராமரைக் குறிப்பிட்டுள்ளார்.

**தொண்டரடிப் பொடியாழ்வார்:** திருப்பள்ளி எழுச்சியில், *"இலங்கையர் குலத்தை வாட்டியவரிசிலை வானவரேறே!"*, இலங்கையர்கோன் வழிபாடு செய்கோயில் (விபீஷணன் வழிபட்ட திருவரங்கம்) ராமரைப் பாடியுள்ளார்.

**திருப்பாணாழ்வார்:** *"சதுரமாமதிள் சூழ் இலங்கைக் கிறைவன் தலை பத்து உதிரவோட்டி ஓர் வெங்கணை யுய்த்தவன்"* என்று அமலனாதிபிரான் என்ற தலைப்பில் ஒரு பாடலில் இராமரைப் பாடியுள்ளார்.

**மதுரகவி ஆழ்வார்:** அயோத்தி நகர் திருக்கோயிலில் அருள்பாலிக்கும் இராமர், சீதா தேவியைத் தரிசித்து சில காலம் தங்கி வழிபட்டுவந்தார். நம்மாழ்வாரைத் தவிர வேறு யாரையும் இவர் பாடியதில்லை. இவர் அருளியது "கண்ணிநுண் சிறுத்தாம்பு" என்ற பாசுரம்.

**திருமங்கை ஆழ்வார் பாசுரங்கள் : திருப்பிரிதி**

*வாலி மா வலத்து ஒருவனது உடல் கெட.: வரி சிலை வளைவித்து அன்று*
*ஏலம் நாறு தண்தடம் பொழில் இடம்பெற .: இருந்த நல் இமயத்துள்*
*ஆலி மா முகல் அதிர்தர அரு வரை.: அகடு உற முகடு ஏறி*
*பீலி மா மயில் நடம் செயும் தடஞ் சுனைப்.: பிரிதி சென்று அடை நெஞ்சே*
958

கலங்க மாக் கடல் அரிகுலம் பணிசெய் அரு வரை அணை கட்டி
இலங்கை மாநகர் பொடி செய்த அடிகள் தாம் இருந்த நல் இமயத்து
விலங்கல் போல்வன விறல் இரும் சினத்தன வேழங்க துயர்கூர
பிலம் கொள் வாள் எயிற்று அரியவை திரிதரு பிருதி சென்று அடை நெஞ்சே 959

**திருவதரியாச்சிரமம்**

கானிடை உருவச் சுடுசரம் துரந்து கண்டு முன் கொடுந் தொழில் உரவோன்
ஊனுடை அகலத் தடுகணை குளிப்ப உயிர் கவர்ந்து உகந்த எம் ஒருவன்;
இலங்கையும் கடலும் அடலருந்துப்பின் இருநிதிக்கிறைவனும் அரக்கர்
குலங்களும் கெடமுன் கொடுந்தொழில் புரிந்த கொற்றவன் 980

மான்முனிந் தொருகால் வரிசிலை வளைத்த மன்னவன் 985

**திருச்சாளக்கிராமம்**

கலையும் கரியும் பரிமாவும் திரியும் கானம் கடந்து போய்ச்
சிலையும் கணையும் துணையாகச் சென்றான் வென்றிச் செருக்களத்து
மலைகொண்டு அலைநீர் அணைகட்டி மதிள்நீர் இலங்கை வாளரக்கர்
தலைவன் தலைபத் தறுத்துகந்தான் சாளக்ராமம் அடைநெஞ்சே ! 988

கடம்சூழ் கரியும் பரிமாவும் ஒலிமாந் தேரும் காலாளும்
உடன்சூழ்ந் தெழுந்த கடி இலங்கை பொடியா வடிவாய்ச் சரம் துறந்தான் 989

ஊரான் குடந்தை உத்தமன் ஒருகால் இருகால் சிலைவளையத்
தேரா அரக்கர் தேர்வெள்ளம் செற்றான் 991

அடுத்தார்த் தெழுந்தாள் பிலவாய் விட்டு அலற அவள் மூக்கு அயில் வாளால்
விடுத்தான் விளங்குசுடராழி விண்ணோர் பெருமான் 992

**திருவேங்கடம்**

கண்ணார் கடல்சூழ் இலங்கைக்கு இறைவன் தன்
திண்ணாகம் பிளக்கச் சரம்செல உய்த்தாய் 1038

இலங்கைப் பதிக்கு அன்று இறையாய அரக்கர்
குலம் கெட்டு அவர் மாளக் கொடிப்புள் திரித்தாய் 1039

திருஎவ்வுள் (திருவள்ளூர்)

தையலாள் மேல் காதல் செய்த தானவன் வாளரக்கன்
பொய்யிலாத பொன்முடிகள் ஒன்பதோ டொன்றும் அன்று
செய்த வெம்போர் தன்னில் அங்கு ஓர் செஞ்சரத்தால் உருள
எய்த எந்தை எம்பிரான் எவ்வுள் கிடந்தானே 1059

முன் ஓர் தூது வானரத்தின் வாயில் மொழிந்து அரக்கன்
மன்னூர் தன்னை வாயினால் மாளமுனிந்து அவனே
பின் ஓர் தூது ஆதி மன்னர்க்காகி பெரு நிலத்தார்
இன்னார் தூதனென நின்றான் எவ்வுள் கிடந்தானே 1060

திருவல்லிக்கேணி

பரதனும் தம்பி சத்துருக்கனனும் இலக்குமனோடு மைதிலியும்
இரவும் நண்பகலும் துதி செய்ய நின்ற இராவணாந்தகனை
எம்மானை 1074

பேணாத வலியரக்கர் மெலிய அன்று
பெருவரைத் தோளிற நெரித்து அன்று அவுணர்கோனை
பூணாகம் பிளவெடுத்த போர் வல்லானை 1094

தென்னிலங்கையரக்கர் வேந்தை விலங்குண்ண வலங்கை
வாய்ச்சரங்களாண்டு .. 1096

பரமேச்சுர விண்ணகரம்

குடைத்திறல் மன்னவனாய் ஒருகால் குரங்கைப் படையா மலையால்
கடலை யடைத்தவன் எந்தை பிரான் .. 1135

திருக்கோவலூர்

கறைவளர் வேல்கரன் முதலாக் கவந்தன் வாலி
கணையொன்றினால் மடிய இலங்கை தன்னுள்
பிறையெயிற்று வாளரக்கர் சேனை எல்லாம்
பெருந்தகையோடு உடன்துணித்த பெம்மான் 1142

திருவாலி

அஞ்சுவன் வெஞ்சொல் நங்காய் அரக்கர் குலப்பாவை தன்னை
வெஞ்சின மூக்கரிந்த விறலோன் 1210

**திருவைகுந்த விண்ணகரம்**

*கலையிலங்கும் அகலல்குல் அரக்கர் குலக்கொடியைக்*
*காதொடு மூக்குடன் அரியக் கதறி அவளோடி*
*தலையில் அங்கை வைத்து மலையிலங்கை புகச்செய்த*
*தடந்தோளன் மகிழ்ந்து இனிது மருவியுறை கோயில்* 1231

*மின்னனைய நுண்மருங்குல் மெல்லியற்கா இலங்கை*
*வேந்தன் முடியொருபதும் தோளிருபதும் போயுதிர*
*தன்னிகரில் இலை வளைத்து அன்று இலங்கை பொடி செய்த*
*தடந்தோளன் மகிழ்ந்து இனிது மருவியுறை கோயில்* 1232

**திரு அரிமேய விண்ணகரம்**

*வாள் நெடுங்கண் மலர்க் கூந்தல் மைதிலிக்கா இலங்கை*
*மன்னன் முடியொருபதும் தோளிருபதும் போயுதிர*
*தாள் நெடுந்திண் சிலை வளைத்த தயரதன் சேய்* 1243

**திருவண் புருடோத்தமம்**

*கம்பமா கடலடைத்து இலங்கைக்குமன் கதிர் முடியவை பத்தும்*
*அம்பினா லறுத்து அரசு அவன் தம்பிக்கு அளித்தவன் உறை கோயில்* 1258

**திருச்செம்பொன் செய்கோயில்**

*தீமனத்தரக்கர் திறலழித்தவனே! என்று சென்றடைந்தவர் தமக்கு*
*தாய் மனத்திரங்கி அருளினைக் கொடுக்கும் தயரதன் மதலை* 1272

*மல்லை மாமுந் நீரதர் படமலையால் அணைசெய்து மகிழ்ந்தவன் தன்னை*
*கல்லின் மீதியன்ற கடிமதிளிலங்கை கலங்க ஓர் வாளி தொட்டானை* 1273

**திருத்தெற்றியம்பலம்**

*தான் போலும் என்றெழுந்தான் தரணியாளன்*
*அது கண்டு தரித்திருப்பான் அரக்கர் தங்கள்*
*கோன்போலும் என்றெழுந்தான் குன்றமன்ன*
*இருபது தோளுடன் துணித்த ஒருவன் கண்டீர்* 1283

**திருமணிக்கூடம்**

*கருமகளிலங்கை யாட்டி பிலங்கொள்வாய் திறந்து தன்மேல்*
*வருமகள் செவியும் மூக்கும் வாளினால் தடிந்த எந்தை* 1292

**திருக்காவளம்பாடி**

*உருத்தெழுவாலி மார்வில் ஒரு கணை உருவவோட்டி*
*கருத்துடைத் தம்பிக்கு இன்பக்கதிர் முடியரசு அளித்தாய்!* 1300

முனைமுகத்து அரக்கன் மாள முடிகள் பத்தறுத்து வீழ்த்து ஆங்கு
அனையவற் கிளையவற்கே அரசளித் தருளினானே! 1301

**திருவெள்ளக்குளம்**

கல்லால் கடலை அணைகட்டி உகந்தாய்! 1313

**திருப்பார்த்தன் பள்ளி**

அரக்கர் ஆவிமாள அன்று ஆழ்கடல் சூழிலங்கை செற்ற
குரக்கரச னென்றும் கோலவில்லி யென்றும் 1322

**திருப்புள்ளம் பூதங்குடி**

மேவா அரக்கர் தென்னிலங்கை வேந்தன் வீயச்சுரம் துரந்து
மாவாய் பிளந்து மல்லடர்த்து மருதம் சாய்த்த மாலதிடம் 1350
வெற்பால் மாரி பழுதாக்கி விறல் வாளரக்கர் தலைவன் தன்
வற்பார் திரள் தோள் ஐந்நான்கும் துணித்த வல்விலிராமனிடம் 1351

**திருவெள்ளறை**

ஆறினோடொரு நான்குடைநெடுமுடி அரக்கன் தன் சிரமெல்லாம்
வேறுவேறுக வில்லது வளைத்தவனே! எனக்கு அருள்புரியே! 1374

**திருவரங்கம்**

விளைத்த வெற்போர் விறல் வாளரக்கன் நகர் பாழ்பட
வளைத்த வல்வில் தடக்கையவனுக்கு இடமென்பரால் 1381
வம்புலாம் கூந்தல் மண்டோதரி காதலன் வான்புக
அம்பு தன்னால் முனிந்த அழகன் இடம் 1382
நீரழலாய் நெடு நிலனாய் நின்றானை அன்று அரக்கனூர்
அழலாலுண்டானைக் கண்டார் 1402

**திருப்பேர் நகர்**

விலங்கலால் கடலடைத்து விளங்கிழை பொருட்டு வில்லால்
இலங்கை மாநகர்க் கிறைவன் இருபது புயம் துணித்தான் 1433

**திருவிண்ணகர்**

கல்லா .. மல்லலம் சீர் மதிள் நீரிலங்கையழித்த !
வில்லா நின்னடைந்தேன் திருவிண்ணகர் மேயவனே! 1463
வற்றா நீள் கடல் சூழ் இலங்கை இராவணனைச்
செற்றாய்! கொற்றவனே! திருவிண்ணகரானே! 1472

**திருநறையூர்**

தொன்னீரிலங்கை மலங்க விலங்கெரியூட்டினான்
நன்னீர் நறையூர் நாம் தொழுதும் எழு நெஞ்சமே! 1483
கல்லார் மதிள்சூழ் கடியிலங்கைக் காரரக்கன்
வல்லாகம் கீள வரிவெஞ்சரம் துரந்த
வில்லானை செல்வ விபீடணற்கு வேறாக
நல்லானை நாடி நறையூரில் கண்டேனே. 1522
இலங்கைக்கோன்
வல்லாளாகம் வில்லால் முனிந்த எந்தை விபீடணற்கு
நல்லானுடைய நாமம் சொல்லில் நமோ நாராயணமே 1541
தென்னிலங்கை அடையா அரக்கர் வீயப்பொழுது மேவி வெங்கூற்றம்
நடையா வுண்ணக் கண்டான் 1542
கான எண்கும் குரங்கும் முகவும் படையா அடலரக்கர்
மாமழிந்து நின்ற வென்றியம்மான் 1543
வில்லேர் நுதல் வேல் நெடுங்கண்ணியும் நீயும்
கல்லார் கடுங்கானம் திரிந்த களிறே ! 1552
ஆழி சூழிலங்கை மலங்கச் சென்று
சரங்களாண்டதண் தாமரைக் கண்ணன் 1571

**திருச்சேறை**

மீதோடி வாளெயிறு மின்னிலக முன் விலகும் உருவினானை
காதோடு கொடி மூக்கன்றுடனறுத்த கைத்தலத்தா! 1580
தேராளும் வாளரக்கன் தென்னிலங்கை வெஞ்சமத்துப் பொன்றிவீழ
போராளும் சிலையதனால் பொருகணைகள் போக்குவித்தாய்
1581

**திருவழுந்தூர்**

செம்பொன் மதில்சூழ் தென்னிலங்கைக் கிறைவன் சிரங்கள் ஐயிரண்டும்
உம்பர் வாளிக்கு இலக்காக உதிர்த்த உரவோன் 1590
அடையார் தென்னிலங்கை யழித்தானை 1600
பந்தணைந்த மெல்விரலாள் சீதைக்காகிப்
பகலவன் மீதியங்காத இலங்கை வேந்தன்
அந்தமில் திண்கரஞ் சிரங்கள் புரண்டுவீழ
அடுகணையால் எய்துகந்த அம்மான் காண்மின் 1624

**திருக்கண்ணபுரம்**

ஏழு மாமரம் துளை படச்சிலை வளைத்து இலங்கையை
மலங்குவித்த ஆழியான் 1692

கலங்க மாக்கடல் கடைந்தடைத்து இலங்கையர் கோனது வரையாகம்
மலங்க வெஞ்சமத்து அடுசரம் துரந்த எம்மடிகள் 1694

வல்லியிடையாள் பொருட்டாக மதிள் நீரிலங்கையார் கோவை

அல்லல் செய்து வெஞ்சமத்துள் ஆற்றல் மிகுத்த ஆற்றலான்
வல்லாளரக்கர் குலப் பாவை வாட முனிதன் வேள்வியை
கல்விச் சிலையால் காத்தானூர் கண்ணபுரம் நாம் தொழுதுமே.
1700

மல்லை முந்நீர் அதர்படவரிவெஞ்சிலை கால்விளை வித்து

கொல்லை விலங்கு பணிசெய்யக் கொடியோனிலங்கை புகலுற்று

தொல்லை மரங்கள் புகப் பெய்து துவலை நிமிர்ந்து வானணவ

கல்லால் கடலையடைத் தானூர் கண்ணபுரம் நாம் தொழுதுமே.
1701

அலைநீரிலங்கைத் தசக் கிரீவற்கு இளையோற்கு அரசையருளி முன்
கலை மாச்சிலையால் எய்தானூர் கண்ணபுரம் நாம் தொழுதுமே.
1704

வையமெல்லாம் உடன் வணங்கா மன்னனாய்த் தோன்றி
வெய்யசீற்றக் கடியிலங்கை குடி கொண்டோட வெஞ்சமத்து
செய்த வெம்போர் நம்பரன் .. .. 1724

மீனோடு ஆமை கேழல் அரிகுறளாய் முன்னும் இராமனாய்த்
தானாய் பின்னும் இராமனாய்த் தாமோதரனாய்க் கற்கியும் ஆனான்
1727

**திருக்கண்ணங்குடி**

வானுளாரவரை வலிமையால் நலியும் மறிகடலிலங்கையார் கோனை

பானு நேர் சரத்தால் பனங்கனி போலப் பருமுடியுதிர
வில்வளைத்தோன் 1754

கலையுலாவல்குல் காரிகை திறத்துக் கடற்பெரும்
படையொடும் சென்று சிலையினால் இலங்கை தீயெழச்
செற்ற திருக்கண்ணங்குடியுள் நின்றான் 1757

**திருப்புல்லாணி**

வில்லால் இலங்கைமலங்கச் சரம் துரந்த வல்லாளன் 1782

**திருக்குறுங்குடி**

*செற்றவன் தென்னிலங்கை மலங்கத் தேவர்பிரான்* 1797
*சிலையால் இலங்கை செற்றான்* 1807

**திருக்கோட்டியூர்**

*காவலினிலங்கைக் கிறைகலங்கச் சரம் செலவுய்த்து மற்றவன்*
*ஏவலம் தவிர்த்தான்* 1843

பத்தாம் பத்து இரண்டாம் திருமொழியில், இராமாவதாரத்தில் ஈடுபாடு என்ற தலைப்பில் 1858, 59, 60, 61, 62, 63, 64, 65, 66 மற்றும் 67ம் பாடல்களிலும், மூன்றாம் திருமொழியில் 1868, 69, 70, 71, 72, 73, 74, 75, 76 மற்றும் 1877ம் பாடல்களிலும் இராமாயணத்தைப் பாடியுள்ளார்.

*பொரு கடல்சூழ் தென்னிலங்கை ஈடழித்த தேவர்*
11ம் பத்து, மூன்றாம் திருமொழி - 1972

*இலைமலிபள்ளியெய்தி இது மாயமென்ன இனமாய மான்பின் எழில்சேர்*
*அலைமலி வேற்கணாளை அகல்விப்பதற்கு ஓருருவாய மானையமையா*
*கொலை மலி யெய்துவித்த கொடியோனிலங்கை பொடியாக வென்றியமருள்*
*சிலைமலி செஞ்சரங்கள் செலவுய்த்த நங்கள் திருமால் நமக்கு ஓரரணே!*
11ம் பத்து, நான்காம் திருமொழி - 1988

**திருக்குறுந்தாண்டகம்**

*காற்றினைப் புனலைத் தீயைக் கடிமதிளிலங்கை செற்ற ஏற்றினை* 2033
*முன்பொலா இராவணன் தன் முதுமதிளிலங்கை வேவித்து*
*அன்பினால் அனுமன் வந்து ஆங்கடியினை பணியநின்றார்க்கு*
*என்பெலாம் உருகியுக்கிட்டு என்னுடை நெஞ்சமென்னும்*
*அன்பினால் ஞானநீர் கொண்டு ஆட்டுவன் அடியனேனே* 2046
*மாயமான் மாயச் செற்று மருதிற நடந்து வையம்*
*தாயமா பரவை பொங்கத் தடவரை திரித்து வானோர்க்கு ஈயுமால்*
2047

**திருநெடுந்தாண்டகம்**

*தேராளும் வாளரக்கன் செல்வம் மாளத்*
*தென்னிலங்கை முன்மலங்கச் செந்தீஒல்கி போராளன் .. ..* 2071
*தென்னிலங்கையரண் சிதறி அவுணன் மாளச் சென்று.. ..* 2079

**திருமங்கையாழ்வார் திரு எழுகூற்றிருக்கை**

*ஒருமுறை இருசுடர் மீதினில் இயங்கா மும்மதிள்*
*இலங்கை யிருகால் வளைய, ஒருசிலை*
*ஒன்றிய ஈரெயிற் றழல்வாய் வாளியில் அட்டனை*

### திருமங்கையாழ்வார் சிறிய திருமடல் - இராமாவதாரச் செயல் தன் சீதைக்கு

*நேரானவன் என்றோர் நிசாசரிதான் வந்தாளை*
*கூரார்ந்த வாளால் கொடிமூக்கும் காதிரண்டும்*
*ஈரா விடுத்து – அவட்கு மூத்தோனை வெந்நரகம்*
*சேரா வகையே சிலைகுனித்தான் செந்துவர்வாய்*
*வாரார் வனமுலையாள் வைதேவிகாரணமா*
*ஏரார் தடந்தோள் இராவணனை – ஈரைந்து*
*சீரார் சிரமறுத்துச் செற்றுகந்த செங்கண்மால்*

**திருமங்கையாழ்வார் பெரிய திருமடல்**
**- சீதா பிராட்டியின் செயல்**

*போர்வேந்தன் தன்னுடைய தாதை பணியால் அரசொழிந்து*
*பொன்னகரம் பின்னே புலம்ப வலங்கொண்டு*
*மன்னும் வளநாடு கைவிட்டு மாதிரங்கள்*
*மின்னுருவில் விண்டேர் திரித்து வெளிப்பட்டுக்*
*கல்நிறைந்து தீய்ந்து கழையுடைந்து கால் சுழன்று*
*பின்னும் திரைவயிற்றுப் பேயே திருந்துலவாக்*
*கொன்னவிலும் வெங்கானத் தூடு கொடுங்கதிரோன்*
*துன்னுவெயில் வறுத்த வெம்பரல்மேல் பஞ்சடியால்*
*மன்னன் இராமன்பின் வைதேவிஎன்றுரைக்கும்*
*அன்ன நடைய அணங்கு நடந்திலளே*

**சூர்ப்பணகையின் மூக்கரிந்ததிறம், தாடகையைக் கொன்றது:**

*தென்னிலங்கை யாட்டி இரக்கர் குலப்பாவை*
*மன்னன் இராவணன் நல்தங்கை – வாளெயிற்றுத்*
*துன்னு சுடுசினத்துச் சூர்ப்பணகா சோர்வெய்திப்*
*பொன்னிறங் கொண்டு புலர்ந்தெழுந்த காமத்தால்*
*தன்னை நயந்தாளைத் தான் முனிந்து மூக்கரிந்து*
*மன்னிய திண்ணனவும் வாய்த்த மலைபோலும்*
*தன்னிக ரொன்றில்லாத தாடகையை – மாமுநிக்காகத்*
*தென்னுலகம் ஏற்றுவித்த திண்திறலும் மற்றிவைதான்*
*உன்னிய யுலவா வுலகறிய ஊர்வன்நான்*
*முன்னி முளைத்தெழுந் தோங்கிஒளிபரந்த*
*மன்னியபூம் பெண்ணை மடல்.*

**** (பெரிய திருமடல் முற்றியது) ****

**பூதத்தாழ்வார்**

சென்றதிலங்கைமேல் செவ்வேதன் சீற்றத்தால்
கொன்ற திராவணனை .. .. .. 2206
தென்னிலங்கை நீறாக எய்தழித்தாய் நீ 2210
தோளிரண் டெட்டேழும் மூன்றும் முடியனைத்தும்
தாளிரண்டும் வீழச்சரந் துரந்தான் 2224
பின்னின்று தாயிரப்பக் கேளான் பெரும்பணைத்தோள்
முன்னின்று தானிரப்பான் மொய்மலராள் – சொல் நின்ற
தோள்நலத்தான் நேரில்லாத் தோன்றல் அவனளந்த
நீள்நிலத்தான் அத்தனைக்கும் நேர் 2260

**பேயாழ்வார்**

அவனேகலங்காப் பெருநகரம் காட்டுவாடன கண்டீர்
இலங்கா புரமெரித்தா னெய்து 2332
எய்தான் மராமரம் ஏழும் இராமனாய்
எய்தான் அம்மான்மறியை ஏந்திழைக்காய் – எய்ததுவும்
தென்னிலங்கைக் கோன்வீழச் சென்று 2333

**திருமழிசை ஆழ்வார்**

குலைகொண்ட ஈரைந் தலையான் இலங்கையை ஈடழித்த
கூரம்பன் அல்லால் குறை 2389
இது – இலங்கையீடழியக் கட்டிய சேது
இது – விலங்கு வாலியைவீழ்த்தது – இது – இலங்கை
தானொடுங்க வில் நுடங்கத் தண்தார் இராவணனை
ஊனொடுங்க எய்தான் உகப்பு 2409
ஒன்றுக்கொன் றோசனையான் வீழ ஒரு கணையால்
அன்றிக் கொண் டெய்தான் அவன் 2410
கல்லா தவரிலங்கை கட்டழித்த காகுத்தன் 2434
கழி சினத்த வல்லாளன் வானரக்கோன் வாலி மதனழித்த வில்லாளன்
2466

*தென்பா லிலங்கை வெங்களம் செய்த நம் விண்ணோர் பிரானார்*

2554 - திருவிருத்தம்

*மரம் ஏழ் அன்றெய்தானை* 2648 - பெரிய திருவந்தாதி

*தொல்லரக்கன் இன்னுயிரை மாட்டே துயரிழைத்த மாயவன்*

2650 - பெரிய திருவந்தாதி

*கரந்துருவில் அம்மானை அந்நான்று பின் தொடர்ந்த ஆழியங்கை அம்மானை யேத்தா தயர்த்து* 2666 - பெரிய திருவந்தாதி

*நீள்கடல் சூழ்இலங் கைக்கோன் தோள்கள் தலைதுணி செய்தான்*

2736 - முதற் பத்து - ஆறாந் திருவாய்மொழி)

*மராமரம் எய்த மாயவன் என்னுள் இரான் எனில் பின்னை யான் ஒட்டுவேனோ?* 2746 - முதற் பத்து - ஏழாந் திருவாய்மொழி

*தீமுற்றத் தென்னிலங்கை ஊட்டினான் தாள்நயந்த யாமுற்றது உற்றாயோ! வாழி! கனைகடலே!*

2787 - இரண்டாம் பத்து - முதல் திருவாய்மொழி

*அரக்கியை மூக்கு ஈர்ந்தாயை அடியேன் அடைந்தேன்*

2812 - இரண்டாம் பத்து - மூன்றாம் திருவாய்மொழி

*குழாங்கொள் பேர்அரக்கன் குலம்வீய முனிந்தவனை*

2817 - இரண்டாம் பத்து - மூன்றாம் திருவாய்மொழி

*இலங்கை செற்றவனே ! & கிளர் வாழ்வை வேவ இலங்கை செற்றீர்*

2821, 2827 - இரண்டாம் பத்து - நான்காம் திருவாய்மொழி

*எந்தாய் ! இலங்கை செற்றாய் ! மராமரம் பைந்தாள் ஏழ் உருவ ஒரு வாளி கோத்தவில்லா !*

2848 - இரண்டாம் பத்து - ஆறாம் திருவாய்மொழி

*இருடீகேசன், எம்பிரான் இலங்கை அரக்கர் குலம் முருடு தீர்த்த பிரான்*

2860 - இரண்டாம் பத்து - ஏழாம் திருவாய்மொழி

*ஏரேல் ஏழும் வென்று ஏர்கொள் இலங்கையை நீறே செய்த நெடுஞ்சுடர்ச் சோதி!*

2884 இரண்டாம் பத்து - ஒன்பதாம் திருவாய்மொழி

*தேவதேவனை தென்னிலங்கை எரி எழச் செய்த வில்லியை & தயரதற்கு மகன் தனை*

2953 & 2959 மூன்றாம் பத்து - ஆறாம் திருவாய்மொழி

*தண் இலங்கைக்கு இறையைச் செற்ற நஞ்சனே!*

2975 மூன்றாம் பத்து - எட்டாம் திருவாய்மொழி

*கொம்பு போல் சீதை பொருட்டு இலங்கை நகர் அம்பு எரி உய்த்தவர்*

3025 நான்காம் பத்து - இரண்டாம் திருவாய்மொழி

*கொடியான் இலங்கை செற்றேனே*

3180 ஐந்தாம் பத்து - ஆறாம் திருவாய்மொழி

*இலங்கை செற்ற அம்மானே*

3184 ஐந்தாம் பத்து - ஏழாம் திருவாய்மொழி

*முன்பு நானதஞ்சுவன் மன்னுடை இலங்கை அரண் காய்ந்த மாயவனே!* 3238 ஆறாம் பத்து - இரண்டாம் திருவாய்மொழி

*புணரா நின்ற மரமேழ் அன்றெய்த ஒருவில் வலவாவோ!*

3330 ஆறாம் பத்து - பத்தாம் திருவாய்மொழி

*பேரெயில் சூழ்கடல் தென்னிலங்கை செற்ற பிரான்*

3365 ஏழாம் பத்து - மூன்றாம் திருவாய்மொழி

*மாறு நிரைத் திரைக் குஞ்ச ரங்களின் நூறு பிணம் மலை பொற்புர*
*ளக்கடல் ஆறு மடுத்துஉதி ரப்புன லாஅப்பன்*
*சிறு படஇலங் கைசெற்ற நேரே*

3376 ஏழாம் பத்து - நான்காம் திருவாய்மொழி

*கற்பார் இராம பிரானை அல்லால் மற்றும் கற்பரோ?*
*புற்பா முதலாம் புல்லெறும் பாதிஒன்று இன்றியே*
*நற்பால் அயோத்தியில் வாழும் சராசரம் முற்றவும்*
*நற்பாலுக்கு உய்த்தனன் நான்முக னார்பெற்ற நாட்டுளே* 3381
*நாட்டை நலியும் அரக்கரை நாடித் தடிந்திட்டு*
*நாட்டை அளித்து உய்யச் செய்து நடந்தமை கேட்டுமே* 3382

(இரண்டு பாடல்கள் ஏழாம் பத்து - ஐந்தாம் திருவாய்மொழி)

ஆளியைக் காண்பரியாய் அரிகாண் நரியார் அரக்கர்
ஊளையிட்டு அன்று இலங்கை கடந்து பிலம்புக்கு ஒளிப்ப
மீளியம் புள்ளைக் கடாய் விறன் மாலியைக் கொன்று பின்னும்
ஆளுயர் குன்றங்கள் செய்து அடர்த் தானையும் காண்டுங்கொலோ?
3399

காண்டுங்கொலோ? நெஞ்சமே! கடிய வினையே முயலும்
ஆண்திறல் மீளிமொய்ம்பில் அரக்கன் குலத்தைத் தடிந்து
மீண்டுமவன் தம்பிக்கே விரிநீர் இலங்கை அருளி
ஆண்டுதன் சோதிபுக்க அமரர்அரி ஏற்றினையே? 3400

(மேல் இரண்டு பாடல்கள் ஏழாம் பத்து - ஆறாம் திருவாய்மொழி)

கணை ஒன்றாலே ஏழ் மா ராமரமும் எய்தஎம் கார்முகிலைப்
புணை என்று உய்யப் போவல் அல்லால் இல்லை கண்டீர் பொருளே

3558 ஒன்பதாம் பத்து - முதல் திருவாய்மொழி

பெயர்கள் ஆயிர முடையவல் அரக்கர்புக்கு அழுந்தது
தயரதன் பெற்ற மரகத மணித் தடத் தினையே

3674 பத்தாம் பத்து - முதல் திருவாய்மொழி

*** நாலாயிர திவ்யப்ரபந்தம் முற்றிற்று ***

அன்று இவ்வுலகம் அளந்தாய் அடி போற்றி !
சென்றங்கு தென்னிலங்கை செற்றாய்திறல் போற்றி !
பொன்றச் சகடம் உதைத்தாய் புகழ் போற்றி !
கன்று குணிலா எறிந்தாய்கழல் போற்றி !
குன்று குடையா எடுத்தாய் குணம் போற்றி !
வென்றுபகைகெடுக்கும் நின்கையில் வேல் போற்றி !
என்றென்று உன்சேவகமேஏத்திப்பறைகொள்வான்
இன்று யாம் வந்தோம் இரங்கேலோர் எம்பாவாய்.

- ஆண்டாள் திருப்பாவை பாசுரம் - 24

# 6. ஸ்ரீ அருணகிரிநாதர்
## திருப்புகழில் இராமாயணம்

*மேலை வானொருரைத்த தசரதற் கொரு*
*பாலனாகி யுதித்தொர் முநிக்கொரு*
*வேள்வி காவல் நடத்தி யகற்குரு அடியாலே*
*மேவியே மிதிலைச் சிலை செற்றுமின்*
*மாது தோள்தழுவிப் பதி புக்கிட*
*வேறுதாயட விக்குள் விடுத்தபி னவனோடே*
*ஞால மாதொடு புக்க வனத்தினில்*
*வாழும் வாலி படக் கணை தொட்டவ*
*னாடி ராவணனைச் செகுவித்தவன்*

மேலுலகத்திலுள்ள தேவர்களும் புகழும் தசரத ராஜனுக்கு ஒப்பற்ற குழந்தையாகப் பிறந்து, விசுவாமித்ர முனிவர் செய்த வேள்விக் காவல் புரிந்து, கல்லாகக் கிடந்த அகலிகையைத் திருவடியினால் மிதித்துப் பழைய உரு எய்தும்படிச் செய்து, மிதிலையில் வில்லை (சிலை) முறித்து, சீதையைத் திருமணம் செய்து, அயோத்திக்குத் திரும்ப வந்து சேர, மாற்றாந் தாயான கைகேயி காட்டுக்குப் போகும்படி பணிக்க, தம்பி இலட்சுமணன், சீதையுடன் சென்று, வாலியை வதம் செய்து, இராவணனை அழித்தவரான திருமால், என்று இராமாயணத்தை இரத்தினச் சுருக்கமாக 'ஆலகால படப்பை' என்று தொடங்கும் திருச்செங்கோடு திருப்புகழில் அருணகிரிநாதர் அழகாகப் பாடியுள்ளார்.

இராமருக்கு உதவும் பொருட்டு, தேவர்கள் இந்த பூமியில் வந்த தகவலைக் கூறும் திருப்புகழ்:

*இரவி இந்த்ரன் வெற்றிக் குரங்கின்*
*அரச ரென்றும் ஒப்பற்ற உந்தி*
*யிறைவன் எண்கினக் கர்த்த னென்றும் நெடுநீலன்*
*எரியதென்றும் ருத்ரற் சிறந்த*
*அநுமனென்றும் ஒப்பற்ற அண்டர்*
*எவரும் இந்த வர்க்கத்தில் வந்து புனமேவ*

*அரிய தன் படைகளுக்குத்தலைவராகக் கொண்டு*
*அசுரர் தங்கிளைக் கட்டை வென்ற*
*அரி முகுந்தன் மெச்சுற்ற பண்பின் மருகோனே.*

சூரியன் கூறாக சுக்ரீவனும், இந்திரன் கூறாக வாலியும் வெற்றிக் குரங்கரசர்களாகவும், திருமால் வயிற்றில் பிறந்த பிரமனின் கூறாக கரடியினத்துத் தலைவன் சாம்புவானாகவும், நெடிய நீலன் எரியின் கூறென்றும், அநுமன் ருத்திரனின் கூறாகவும், தேவர்கள் இப்பூமியில் வந்து சேர, இவர்களைத் தன் படைகளுக்குத் தலைவராகக் கொண்டு, அசுரர் கூட்டத்தை வென்ற அரி முகுந்தன் என்று, தேவர்கள் வந்த செய்தியைத் தருவது "கருவடைந்த" என்று தொடங்கும் திருப்பரங்குன்றம் திருப்புகழாகும்.

*பருதி மகன் வாசல் மந்த்ரி அநுமன் – சூரியன் மகன் சுக்ரீவனுடைய அரசவையில் மந்திரி அநுமன்*

- சுருளளக பார - பழநி

*இரவி குலம்: தசரத குமார ரகுகுல புங்கவன் –*
*வீடமும் வடிவேலு* - திருவேரகம்

*இராகவ இராமன்* - நிராமய புராதன - விராலிமலை

**குழந்தை ராமரைத் தாய் கோசலை கொஞ்சி அழைப்பதை வர்ணிக்கும் பாடல்:**

*எந்தை வருக ரகுநாயக வருக*
*மைந்த வருக மகனேயினி வருக*
*என்கண் வருக எனதா ருயிர் வருக அபிராம*
*இங்கு வருக அரசே வருக முலை*
*யுண்க வருக மலர்சூ டிட வருக*
*என்று பரிவி னொடு கோசலை புகல வருமாயன்*

- தொந்தி சரிய - திருச்செந்தூர்



**விசுவாமித்திரர் யாகம் : தாடகை, சுவாகு வதம், அகலிகை சாப விமோசனம்:**

*வெடுத்த தாடகை சினத்தையோர் கணை விடுத்து யாகமும்*
*நடத்தியே யொரு மிகுத்த வார் சிலை முறித்த மாயவன்.*

வெடுவெடுத்து வந்த தாடகையின் கோபத்தை ஓர் அம்பு விடுத்து அடக்கியும், யாகத்தை நடத்தியும், மிதிலையில் வில்லை முறித்தவருமான ஸ்ரீராமர். தொடுத்த-அருக்கொணாமலை.

*பாலைவனத்தில் நடந்து நீல அரக்கியை வென்று – பாலைவனத்தில்*
*நடந்து அரக்கி தாடகையை வதைத்து வென்றவர்* - சேலையுடுத்து
- வேதாரணியம்

*காலைக்கே முழுகிக் குண திக்கினில்*
*ஆதித் யாயா எனப்பகர் தர்ப்பண*
*காயத்ரீ செப மர்ச்சனை யைச்செயு முனிவோர்கள்*
*கானத் தாசிர மத்தினி லுத்தம*
*வேள்விச் சாலைய ளித்தல் பொருட்டெதிர்*
*காதத் தாடகை யைக்கொல் க்ருபைக்கடல் மருகோனே*

முநிவர்கள் காலையில் எழுந்து நீராடி கிழக்குத் திக்கு நோக்கி, “ஆதித்யாயா” என்று சூரிய பகவான் மீது துதித்து தர்ப்பணம், காயத்ரி ஜெபம், அர்ச்சனை முதலியன செய்து வாழ்ந்திருந்த காட்டில், யாகசாலையை இடையூறு செய்த தாடகை என்னும் அரக்கியைக் கொன்றவர், என்று கூறுவது - வேலைப் போல் என்னும் திருவானைக்கா திருப்புகழாகும்.

*ஓலமிடு தாடகை சுவாகு வளரேழுமரம்*
*வாலியொடு நீலிபக னோடு விராதனெழு*
*மோதகட லோடுவிறல் ராவண குழாமமரில் பொடியாக*
*ஓகைதழல் வாளிவிடு மூரிதநு நேமிவளை*
*பாணிதிரு மார்பன் அரிகேசன் மருகா*

தாடகை, சுவாகு, மரங்கள் ஏழு, வாலி, நீலி, பகன், விராதன், ராவணனும் அவனுடைய படைகள் அனைத்திலும் அம்பைச்

செலுத்தினவர், வில், சக்கரம், சங்கு இவைகளை ஏந்தியும், திருமகளை மார்பிலுமுடைய திருமால்,

- வாலவயதாகி - இராமேசுரம் .

*கலின் வடிவமான அகலிகை பெண்ணான கமல பாத மாயன் கல் ரூபமாய்க் கிடந்த அகலிகை பெண்ணாக வரும்படிச் செய்த ஸ்ரீராமன்*

- குலைய - விரிஞ்சிபுரம்

*கல்லிலே பொற்றாள் படவேயது நல்ல ரூபத்தே வர கானிடை கௌவை தீரப் போகுமி ராகவன் –*

அகல்யைக்கு ஏற்பட்ட பழிச்சொல் (கௌவை) தீரப் பெறுமாறு செய்த தகவலைத் தரும் திருப்புகழ்

- கொள்ளையாசை - சிதம்பரம்

**சீதையின் திருமணம்:**

*சனகன் அன்புற்றுப் பெற்ற மடப் பெண் ஜனகரின் மகள்*

- கனக தம்ப - காஞ்சிபுரம்

*தாடகை யுரங் கடிந் தொளிர்*
*மாமுனி மகஞ் சிறந் தொரு*
*தாழ்வற நடந்து திண் சிலை முறியாவொண்*
*சாநகி தனங் கலந்த பின்*
*ஊரில் மகுடங் கடந் தொரு*
*தாயர் வசனஞ் சிறந்தவன் மருகோனே*

தாடகையை அழித்து, விசுவாமித்திரரின் யாகத்தைச் சிறப்புற நடத்தி வைத்து, ஒருவித குறையும் இல்லாத வகையில் நடந்து, மிதிலையில் ஜனகராஜன் முன்பு வலிமை பொருந்திய சிவ தனுசுவை முறித்து, ஜாநகியை மணம் முடித்து அயோத்தி திரும்பி, பட்டாபிஷேகத்தைத் துறந்து கைகேயியின் சொற்படி நடந்தவர்.

ஆடல் மதனம் - ஸ்ரீபுருஷ மங்கை

*சிலை மொளுக்கென முறிபட மிதிலையிற் சநகமனருள் திருவினைப் புணர் அரி*

- திருவிடைக்கழி

**வனம் செல்லுதல்**

*எனதுமொழி வழுவாமல் நீயேகு கான்மீதி*
*லெனவிரகு குலையாத மாதாவு நேரோத*
*இசையுமொழி தவறாம லேயேகி மாமாது மிளையோனும்*

*இனிமையொரு வருமாய மாரீச மானாவி*
*குலையவரு கரதூஷ ணாவீரர் போர்மாள*
*இறுகிநெடு மரமேழு தூளாக வேவாலி யுயிர்சீறி*
*அநுமனொடு கவிகூட வாராக நீராழி*
*யடைசெய்தனை தனிலேறி மாபாவி யூர்மேவி*
*அவுணர்கிளை கெடநூறி யாலால மாகோப நிருதேசன்*
*அருணமணி திகழ்பார வீராக ராமோலி*
*யொருபதுமொர் கணைவீழ வேமோது போராளி*
*அடல் மருக குமரேச மேலாய வானோர்கள் பெருமாளே.*

கைகேயியே காட்டுக்குப் போகுமாறு கூறுவது, மனைவியும், தம்பியுமாய் செல்லுதல், காட்டில் மாயமான் மாரீசன், கர தூஷணர் மரணம், ஏழு மரங்களையழித்து வாலியை வதம் செய்தல், கடலை அடைத்து அநுமன் இதர குரங்குகளுடன் இலங்கையை அழித்து இராவணனுடைய தலைகள் பத்தும் ஒரே கணையால் வீழ்ந்தவை, முதலிய தகவல்கள் நிறைந்த திருப்புகழ்

- குனகியொரு - பொது

*தம்பி வரச் சாதி திருக் கொம்பு வரக் கூட வனச் சந்த மயிற் சாய் விலகி*

- தம்பி இலக்குமணனும், கொம்பு போல மெலிந்த சீதை உடன் வர, காட்டிலுள்ள மயில்களெல்லாம், இவள் சாயலில் முன் நமது சாயல் எம்மூலை? என்று ஒதுங்கிக்கொண்டன-

தும்பி முகத்தானை - கும்பகோணம்

*திருவொடு பெயர்ந் திருண்ட வனமிசை நடந்து* - மருமலரினன்-பழநி

*திருவைக் கொண்டொரு தண்டக வனமிசை வர -*

புருவச் செஞ்சிலை - மதுரை

**காகாசுரன்**

*காதுமொரு விழி காகமுற அருள் மாயன் அரி* .

இராமர் சீதை வனத்திலிருந்த காலத்தில், காக்கை உருக்கொண்டு காகாசுரனாக வந்த ஜயந்தன், சீதையின் உடலைத் தன் மூக்கினால் கொத்தினான். கோபங்கொண்ட இராமர், புல்லையே படையாக்கி, அவன் மேல் செலுத்த, அவன் இராமனையே

சரணடைந்தான், அவனுக்கு உயிர்ப் பிச்சையளித்து, கண்களுக்கு ஊனம் வருமாறுரைத்த நிகழ்ச்சியை, பாதி மதி நதி, என்ற திருவேரகம் திருப்புகழ் மூலம் அறிகின்றோம்.

**சூர்ப்பநகை மானபங்கம், மாரீசன், திரிசிரன் வதம், சீதையை இராவணன் சிறையெடுத்து அசோக வனத்தில் வைத்தல் முதலியன:**

*திருவைக் கொண்டொரு தண்டக வனமிசை*
*வரவச் சங்கொடு வந்திடு முழையுடல்*
*சிதறக் கண்டக வெங்கர னொடுதிரி சிரனோடு*
*திரமிற் றங்கிய கம்பக னொருபது*
*தலைபெற் றும்பரை வென்றிடு மவனொடு*
*சிலையிற் கொன்ற முகுந்தன லகமகிழ் மருகோனே*

சீதையை அழைத்துக்கொண்டு தண்டகாரண்யத்தில் வந்திருந்தபொழுது, பயத்தோடு வந்து உலாவின மாரீச மானின் உடல் பாணம் பட்டழிய, கரன், திரிசிரன், கும்பகர்ணன், இராவணன் முதலியவர்களை கோதண்டம் என்ற வில்லால் கொன்ற திருமால்

- புருவச் செஞ்சிலை - மதுரை

*மூக்கறை மட்டை மகாபல காரணி*
*சூர்ப்ப நகைப்படு மூளி யுதாசனி*
*மூர்க்க குலத்தி விபீஷணர் சோதரி முழுமோடி*
*மூத்தவ ரக்கனி ராவண னோடியல்*
*பேற்றி விடக்கம லாலய சீதையை*
*மோட்டன் வளைத்தொரு தேர்மிசை யேகொடு முகிலேபோய்*
*மாக்கன சித்திர கோபுர நீள்படை*
*வீட்டிலி ருத்திய நாளவன் வேரற*
*மார்க்க முடித்த விலாளிகள் நாயகன் மருகோனே*

மூக்கு அறுபட்டவள், பயனற்றவள், மகாபலசாலி, போருக்கு மூல காரணமாயிருந்த சூர்ப்பநகை, மூக்கு, காது முதலிய உறுப்புக்கள் குறைந்தவள், படுமூளி, கொடியவள், அரக்கர் குலத்தைச் சார்ந்தவள், விபீடணரின் சகோதரி, மூத்தவனான அரக்கன் இராவணனிடம், சீதையின் வரலாறு, அழகு முதலியவற்றைக் கூறி, அவனுக்குக் காமத்தை மூட்டிவிட, அவன் சீதையை சூழ்ச்சியால் கவர்ந்து ஒரு தேரின் மேல் ஏற்றிக்கொண்டு, வான் வழியாகச் சென்று, இலங்கை நகரில் சிறை வைத்த பொழுது, அவன் குலம் வேரறும்படி எடுத்து

முடித்த இராமன், என சூர்ப்பநகையின் வர்ணனையை, தாக்கமருக் கொரு, திருத்தணித் திருப்புகழ் வர்ணிக்கிறது.

*வடிவுடைய மானும் இகல்கர னுந்திக*
*ழெழுவகை மராமரம நிகரொ ன்றுமில்*
*வலிய திறல் வாலி யுரமு நெடுங்கட லவையேழும்*
*மறநிருதர் சேனை முழுதுமி லங்கைமன்*
*வகையிரவி போலு மணியுமி லங்க்ருத*
*மணிமவுலி யான வொருபதும் விஞ்சிரு பதுதோளும்*
*அடைவலமு மாள விடுசர அம்புடை*
*தசரத குமார ரகுகுல புங்கவன்*
*அருள்புனை முராரி –*

மாய மான், கரன், ஏழு மரங்கள், வாலி, இராவணனைக் கொன்ற தசரத குமாரன், ரகுகுல புங்கவன், அருள் பாலிக்கும் முராரி - விடமும் வடிவேலு - திருவேரகம்

*இருங் கானகம் போயிளங் காளை பின் போக வெங்கே மடந்தை*
*யெனவேகி ...* பெரும் - பொது

*சானகீ துயரத்தி லருஞ்சிறை*
*போன போது தொகுத்த சினங்களில்*
*தாப சோப மொழிப்ப இலங்கையும் அழிவாகத்*
*தாரை மானொரு சுக்கிரிபன் பெற*
*வாலி வாகு தலத்தில் விழுந்திட*
*சாத வாளி தொடுத்த முகுந்தன் –*

ஜானகியைத் தேடி அலையும் போது வாலியை வதம் செய்து, தாரையைச் சுக்கிரிவனுக்குப் பெற்றுத் தந்தவர்
- மானை நேர் விழி - காவளூர்

*இரவி குலத்தி ராசத மருவியெதிர்த்து வீழ் கடுரணமுக சுத்த வீரிய குணமான இளையவனுக்கு நீண்முடி அரசது பெற்று வாழ்வுற இதமொடளித்த ராகவன்.*

சுக்கிரீவனுக்கு அரசாட்சியைப் பெற்று வாழுமாறு உதவிய ராகவன்
- கதியை விலக்கு - பழநி

*மாலியன் பாறவொரு ஆடகன் சாக மிகு வாலியும் பாழிமரமோடு*
*கும்பாகனு மாலியுங் கோர வலி ராவணன் பாறவிடு மாசுகன் –*

மாலியவான், வாலி, மரங்கள், கும்பகர்ணன், கடல் முதலியன அழியும்படி அம்பைச் செலுத்தியவர் (ஆசுகன்)

- நீல மஞ்சான - திருச்செங்கோடு

**வாலி வதம்:**

*காந்தள் மலர்த்தொடை யிட்டெதிர் விட்டொரு வேந்து*
*குரக்கரணத்தொடு மட்டிடு காண்டிப அச்சுத னுத்தம சற்குணன் – –*

வாலி, சுக்கிரீவன் இவர்களுள் இன்னார் வாலி என்று அடையாளம் தெரிந்து கொள்வதற்காகச் சுக்கிரீவனைக் காந்தள் மாலை அணியச்செய்து, வாலியிடம் போருக்கு அனுப்பி, அவனைக் கொன்ற, வில்லை ஏந்திய அச்சுதன் -

- கூந்தலவிழ்த்து - திருத்தணிகை

*திருத்தம்பு வாலியுரத்தும் பத்துத் திடம் படுகத்துந் தெறித்தான் – –*

மாற்றுதல் செய்து, முன் இராம பாணத்தை வாலியினுடைய மார்பிலும், இராவணனுடைய பத்துத் தலைகளிலும் செலுத்திய ஸ்ரீராமர்

- கந்தர் அந்தாதி - 47

*பார மலைக்குள் அகன்று கணையால் ஏழ் பார மரத்திரள் மங்க*
*வாலியுரத்தையிடந்து*

- சித்திரகூட பர்வதத்தினின்று நீங்கி, வாலியை வென்ற செய்தி

- சேலையுடுத்து - வேதாரணியம்

*ஏழு மரங்களும் வன்குரங்கெனும் வாலியும் அம்பரமும் பரம்பரை*
*ராவணனுஞ் சதுரங் கலங்கையு மடைவே முன் ஈடழியும்படி*
*சந்திரனுஞ் சிவ சூரியனுஞ் சுரரும் பதம் பெற ராம சரந்தொடு*
*புங்கவன்*

- (அம்பரம் - கடல்; ராம சரம் - ராம மந்திரம் கூடிய அம்பு)

தோழமை கொண்டு - கோடி நகர் (வல்லக்கோட்டை)

*கொடுங்கைப்பட்ட மராமர மேழுடன்*
*நடுங்கச் சுக்கிரீவனோ டமராடிய*
*குரங்கைச் செற்று மகோததி தூளெழ நிருதேசன்*
*குலங்கட் பட்ட நிசாசரர் கோவென*
*இலங்கைக்குட் டழலோனெழ நீடிய*
*குமண்டைக் குத்திர ராவணனார் முடி அடியோடே*
*பிடுங்கத் தொட்ட சராதிப னாரதி*
*ப்ரியங் கொட்டக்க நன்மா மருகா*

-விடுங்கைக் கொத்த-சிதம்பரம்

(மகோததி-கடல்; நிசாசரர்-அசுரர்; குமண்டை-செல்வச்செருக்கு)

*சானகி கற்புத் தனைச் சுடத்தன*
*சோக வனத்திற் சிறைப்படு*
*தானை யரக்கற் குலத் தரத்தனை வருமாளச்*
*சாலை மரத்துப் புறத்தொ ளித்தடல்*
*வாலி யுரத்திற் சரத்தை விட்டொரு*
*தாரை தனைச் சுக்ரிவற் களித்தவன்*

- மானை விடத்தை - திருவருணை

*மாய மானொட ரக்கரை வெற்றிகொள்*
*வாலி மார்பு தொளைத்திட விற்கொடு*
*வாளி யேவிய மற்புய னச்சுதன்* - ஆலகாலமென - பழநி

*நிகரில் வஞ்சக மாரீசாதிகள் தசமுகன் படை கோடாகோடிய நிருதரும் பட வோரேவேவியெ யடுபோர்செய் நெடியன் அங்கனுமானோடே யெழுபது வெளங் கவி சேனா சேவித நிருபன் அம்பரர் கோமான் ராகவன்*

மாரீசன், இராவணன் முதலியோரை ஒரு அம்பைச் செலுத்திக் கொன்றவர், அநுமனும், அவருடன் எழுபது வெள்ள குரங்குப் படையாலும் வணங்கப் பெற்ற ராகவன்.

- மகர குண்டல - திருவலஞ்சுழி

*செயலங்கை வாளை யிறைகோயி லைச்சிவ னாரமுதை*
*செயலங்கை வாளை முனிகொண்டல் வாளியைத் தேவர்பிரான்*
*செயலங்கை வாளை முனைவேலை யன்னவிச் சேயுறையுஞ்*
*செயலங்கை வாளை யுகள்செந்தில் வாழ்பவள் சேல்விழியே*

குமாரக் கடவுள் அமர்ந்தருளிய செந்திற் பதியில் வாழும் பெண்ணினது கண்கள், பிரம்மாவுக்கு உறைவிடமாகிய தாமரையையும், பரமசிவனுடைய நஞ்சையும், இலங்கையை அழித்த ஸ்ரீராமரது பாணத்தையும், இந்திரன் கைவாளையும், முருகன் கையிலுள்ள கூர் வேலையும் ஒத்து விளங்குகின்றன.

- கந்தர் அந்தாதி - 88

*வாலி மார்பைத் துணிய ஏழ்மரா இற்று விழ வாளி போடக் கருது மநுராமன்*

(வாலியின் மார்பு பிளக்கவும், ஏழு மரா மரங்கள் முறிந்து வுழவும் அம்பைச் செலுத்த எண்ணங்கொண்ட மநுதர்ம சாஸ்திரத்தை அனுட்டித்த ஸ்ரீராமர் - வேலை வாளை - பொது)

கார்காலம் கழிந்ததும் சேனையுடன் வந்து உதவுகின்றேன் என, சுக்ரீவன் ராமருக்குச் சொன்ன வாக்கைக் காப்பாற்றாமல் காலங் கழித்ததைக் கண்டு ராமர் கோபம் கொண்டு இலக்குவனை அனுப்புவதைக் குறிக்கும் திருப்புகழ்:

*மறந்த சுக்ரிப மாநீசன் வாசலி*
*லிருந்து லுத்த நியோராத தேதுசொல்*
*மனங் களித்திட லாமோது ரோகித முன்புவாலி*
*வதஞ்செய் விக்ரம சீராம னானில*
*மறிந்த திச்சர மோகோ கெடாதினி*
*வரும் படிக்குரை யாய்பார் பலாகவ மென்றுபேசி*
*அறந் தழைத்தநு மானோடு மாகடல்*
*வரம் படைத்ததின் மேலேறி ராவண*
*னரண் குலைத்தெதிர் போராடு நாரணன்*

தான் சொன்ன சொல்லை மறந்துபோன சுக்ரீவன் என்னும் மகா நீசனுடைய இருப்பிடத்தின் வாயிலில் நின்று "ஏ! லுத்தனே - லோபியே - பேராசை யுள்ளவனே! நீ தெளிவு அடையாததற்கு காரணம் என்ன சொல்? கள்ளுண்டு மனம் களிப்புறுதல் நியாயமா! உன் செய்கை பாதகம் ஆகும்;. முன்பு வாலியை வதம் செய்த பராக்ரம ஸ்ரீராமன் உலகெலாம் அறியும் இந்த என்னுடைய அம்பை!

ஓகோ - கெட்டுப்போக வேண்டாம் - இனியேனும் தாமதிக்காது வரும்படிப் போய்ச்சொல் பார்ப்பாயாக. பல போர்களின் விளைவை"

என்றெல்லாம் இலக்குமணர் மூலமாகச் சுக்ரீவனுக்குச் சொல்லி அனுப்பிப் பேசி, தருமநெறி விளங்கும் அநுமாரோடு சென்று பெரிய கடலை அணையிட்டு அடைத்து, அந்த அணைமீதுபோய் ராவணனுடைய கோட்டைகளை அழித்து, எதிர்த்துப் போர் செய்த நாராயண மூர்த்தி - நிறைந்த - திருவானைக்கா.

*அரிமைந் தன்புகழ் மாருதி என்றுள*
*கவியின் சங்கமி ராகவ புங்கவன்*
*அறிவுங் கண்டருள் வாயென அன்பொடு தரவேறுன்*
*அருளுங் கண்டத ராபதி வன்புறு*
*விஜயங் கொண்டெழு போதுபு லலம்பிய*
*அகமும் பைந்தொடி சீதை மறைந்திட வழிதோறும்*
*மருவுங் குண்டலம் ஆழி சிலம்புகள்*
*கடகந் தண்டைபொன் நூபுர மஞ்சரி*
*மணியின் பந்தெறி வாயிது பந்தென முதலான*
*மலையுஞ் சங்கிலி போரம ருங்குவிண்*
*முழுதுங் கண்ட நராயணன் அன்புறு*
*மருகன் தென்புன வாயில மர்ந்தருள் பெருமாளே*

(உரையுஞ் சென்றது - திருப்புனவாயில்)

*குரக்கினங் கொணர்ந் தரக்கர் தண்டமுங் குவட் டிலங்கையுந்*
*துகளாகக் கொதித்த கொண்டலும்* - புரக்க வந்த- பொது

(குரங்கின் கூட்டங்களைத் தன்னுடன் கொண்டு வந்து, அரக்கர்களுடைய படைகளும், மலைகளைக் கொண்ட இலங்கையும் பொடியாகும்படிக் கோபித்து எழுந்த மேக நிறங்கொண்ட திருமால்)

*தேரிரவி யுட்கிப்பு காமுது புரத்திற்றெ சாசிரனை*
*மர்த்தித்த அரிமாயன்* - பாரவித - கதிர்காமம்

(தேரில் எழுந்தருளும் சூரியன், ராவணனுடைய அதிகாரத்திற்கு அஞ்சி உள்ளே புகாத பழைய ஊராகிய இலங்கையில் பத்துத் தலையனாம் ராவணனைக் கலக்கிப் பிசைந்து கடைந்த அரிமாயன்)

*சுட்டபொருட் கட்டியின்மெய்ச் செக்கமலப் பொற்கொடியைத்*
*துக்கமுறச் சொர்க்கமுறக் கொடியாழார்*
*சுத்தரதத் திற்கொடுபுக் குக்கடுகித் தெற்கடைசிச்*
*சுற்றுவனத் திற்சிறைவைத் திடுதீரன்*
*கொட்டமறப் புற்றரவச் செற்றமறச் சத்தமறக்*
*குற்றமறச் சுற்றமறப் பலதோளின்*
*கொற்றமறப் பத்துமுடிக் கொத்துமறுத் திட்டதிறற்*
*கொற்றர்பணிக் கொட்டைநகர்ப் பெருமாளே*

தங்கம் போன்ற அழகிய மேனியை உடைய சீதையைத் துக்கம் படும்படி, எடுத்துக் கொண்டுபோய், சிறையில் வைத்த இராவணனின் பல தோள்களையும், பத்து தலைகளையும் அறுத்துத் தள்ளிய ஸ்ரீராமர்- - பட்டு மணி - கொட்டையூர்

**சீதையைத் தேடுதல், மாருதி இலங்கையை அடைதல்**

*குடக்குச் சிலதூதர் தேடுக*
*வடக்குச் சிலதூதர் நாடுக*
*குணக்குச் சிலதூதர் தேடுக வெனமேவிக்*

*குறிப்பிற் குறிகாணு மாருதி*
*யினித்தெற் கொருதூது போவது*
*குறிப்பிற் குறிபோன போதிலும் வரலாமோ*

*அடிக்குத் திரகார ராகிய*
*அரக்கர்க் கிளையாத தீரனு*
*மலைக்கப் புறமேவி மாதுறு வனமே சென்று*

*அருட்பொற் றிருவாழி மோதிர*
*மளித்துற் றவர்மேல் மனோகர*
*மளித்துக் கதிர்காம மேவிய பெருமாளே*

சீதையைத் தேடுவதற்காக, மேற்கு, வடக்கு, கிழக்குத் திசையில் தூதர்களை அனுப்பி விட்டு. அநுமனைத் தென் திசையில் தேடுமாறு, சுக்கிரீவன் ஆணையிட, இராமர் அநுமனிடம் மோதிரத்தைக் கொடுத்தனுப்பிய வரலாறு - உடுக்கத் துகில் - கதிர்காமம்

*வெங்கைச் சுக்ரீபர் படையை யிலங்கைக்குப் போகவிடவல*
*வென்றிச் சக்ரேசன்* - சங்கைக் கத்தோடு - பட்டாலியூர்

**அநுமன் இலங்கைக்குத் தீயிட்டது:**

*இலங்கை திகழ் எரியிடுங் குரங்கை நெகிழாத திடமுள முகுந்தர்*

மருமலரினன் - பழநி

*தீயிசைந்தெழவே யிலங்கையில்* வேயிசைந்தெழு - பழநி

*பொருந்திடார்ப் புரத்திலங்கை தீப்படக் குரங்கினாற் படைத்து*
*பகைவர்களுடைய ஊராகிய இலங்கை அநுமாரால் தீப்பட்டு*
*எரியும்படி செய்வித்து*

- அரும்பினாற் - பொது

*அந்த மந்தி கொண்டி லங்கை வெந்த ழிந்தி டும்ப கண்டன்*
*அங்க முங்கு லைந்த ரங்கொள் பொடியாக*
*அம்ப கும்பனங் கலங்க வெஞ்சினம் புரிந்து நின்று*
*அம்புகொண்டு வென்ற கொண்டல்*

- சந்தனந்திமிர்ந்த - எண்கண்

*இலங்கையில் இலங்கிய இலங்களுள் இலங்கரு*
*ளிலெங்கணும் இலங்கென முறையோதி*
*இடுங்கனல் குரங்கொடு நெடுங்கடல் நடுங்கிட*
*எழுந்தருள் முகுந்தன் –*

இலங்கை நகரில் அன்பில்லாத எல்லா இடத்தும் அக்கினியைப் பற்றி எரியுமாறு நெருப்பை வைத்த அநுமன்- தலங்களில் - பெருங்குடி

*இலங்கேசர் வனத்துள்வனக் குரங்கேவி யழற்புகையிட்*
*டிளந்தாது மலர்த் திருவைச் சிறைமீளும்*
*இளங்காள முகிற் கடுமைச் சரங்கோடு கரத்திலெடுத்*
*திருங்கான நடக்குமவற் –*

(சரம்-அம்பு; கோடு-வளை)-அலங்கார முடிக்கிரண - திருக்குரங்காடுதுறை

**கடலில் அணை கட்டியது**

*குரைக் கருங் கடல் திருவணை என முனம் அடைத் திலங்கையின்*
*அதிபதி நிசிசரர் குலத்தொடும் பட ஒரு கணை விடும் அரி*

- வடத்தை மிஞ்சிய - திருப்பரங்குன்றம்

*பரவு பரவை கொல் பரவை வண அரி பரவு மிமையவர் பெருமாளே*

- பரந்துள்ள கடலின் மீது பாண ப்ரயோகஞ் செய்து அடக்கிய கடல் வர்ணத்தையுடைய திருமால்

- குழலடவி- பழநி

*சினத்துக் கடிவீசி மோது மா கடலடைத்துப் பிசிதாசனாதி மாமுடி தெறிக்கக் கணையேவு வீர மாமன்*

- (பிசித அசன ஆதி - மாமிசமுண்ணும் அரக்கர்)-வனப்புற்றெழு

- திருப்புக்கொளியூர்

*அவிநாசி மகர நின்ற தெண்டிரை பொரு கனைகடல் மறுகி யஞ்சி வந்தடி தொழுதிட வொரு வடிகொள் செஞ்சரந் தொடுபவன்*

- முகர வண்டெழும் - திருப்பெருந்துறை

*அடைத்தார் கடலோர் வலி ராவண குலத்தோடரி யோர் சரனார் சினமழித்தார் முகிலேய் நிற ராகவர்*

- குடத் தாமரை - விருத்தாசலம்

*நெடுங் கடல் மங்கவொரம்பு கைதொடு மீளி (மீளி—பராக்ரமசாலி) சருவியிகழ்ந்து*

- சீகாழி

*தருக்கமற் கடப்படைப் பலத்தினிற்*
*றடப் பொருப்பெடுத் தணையாகச்*
*சமுத்திரத்தினைக் குறுக்கடைத் ததிற்*
*றரித் தரக்கர் பொட் டெழவே போர்*
*செருக்கு விக்ரமச் சரத்தை விட்டுறச்*
*செயித்த வுத்தமத் திருமாமன்*

செருக்குள்ள குரங்குப் படை பலத்தினால், பெரிய மலைகளை எடுத்துப்போட்டு, கடலைக் குறுக்கே அடைத்து, அந்த அணை வழியாகச் சென்று, அரக்கர்களை வென்ற மாமன் திருமால் -அருக்கி மெத்தென

- திருப்படிக்கரை

*சங்க தசக்ரீவனோடு சொலவள*
*மிண்டு செயப்போன வாயு சுதனொடு*
*சம்பவ சுக்ரீவனாதி யெழுபது வெளமாகச்*
*சண்ட கவிச் சேனையால் முன் அலைகடல்*
*குன்றிலடைத்தேறி மோச நிசிசரர்*
*தங்கிளை கெட்டோட ஏவு சரபதி மருகோனே*

ராவணனோடு தூது சென்ற சொல் வளம் மிகுந்த அனுமாரோடு (வாயு சுதன்), சுக்ரீவன் முதலான எழுபது வெள்ளம் சேனையுடன், குரங்குப் படையால் (கவிச் சேனை) முன்பு குன்றுகள் கொண்டு அடைத்து, கடலைத் தாண்டிச் சென்று அசுரர்களுடைய சுற்றம் அழியும்படி அம்பினைச் செலுத்திய தலைவன் ஸ்ரீராமன்

- குங்கும கற்பூர - இஞ்சிகுடி

*கவியாற் கடலடைத்தோன் மருகோனை* - கந்தரலங்காரம்

*இலங்காபுரிக்குப் போகைக்கு நீ வழி காட்டென்று போய்க் கடல்*
*தீக்கொளுந்த வாகைச் சிலை வளைத்தோன்* - கந்தரலங்காரம்

*நானாவித கருவிச் சேனை வகைவகை சூழ்போது பிரபலச் சூரர்*
*கொடு நெடு நாவாய் செல் கடலடைத்தேறி நிலைமையிலங்கை சாய*
*நாலாறு மணிமுடிப் பாவி தனையடு சீராமன் மருக ..*

- ஆனாத பிருதிவி - சுவாமிமலை

*திரையாழி சேது கண்டு பொரு ராவணேசை வென்ற திருமால்*

- மன நூறு கோடி - பொது

*கருதி யிருபது கரமுடி யொருபது*
*கனக மவுலிகொள் புரிசைசெய் பழையது*
*கடிய வியனகர் புகவரு கனபதி* *கனல் மூழ்கக்*
*கவச அநுமனொ டெழுபது கவிவிழ*
*அணையி லலையெறி யெதிரமர் பொருதிடு*
*களரி தனிலொரு கணைவிடு மடலரி* மருகோனே

முருகுசெறி என்று தொடங்கும் திருவண்ணாமலைத் திருப்புகழில், இலங்கை எரிந்த வரலாறு, குரங்குகள் கட்டிய கடலைக் கடந்து போர் செய்தது முதலிய தகவல்களைத் தந்துள்ளார்.

*விரி கடல் துகள் எழ வெகுளும் விக்ரமன் அரி* -சித்து வகுப்பு

*முனைச் சங்கோலிடு நீல மகோததி அடைத்து அஞ்சாத இராவணனீள்*
*பல முடிக்கண்றோர் கணையேவுமி ராகவன்*

சங்குகள் ஒலிக்கின்ற நீலக் கடலை அடைத்து, அஞ்சாத இராவணனின் பல முடிகளும் வீழ, அன்று ஓர் அம்பைச் செலுத்திய இராகவன்

- அணிச்சங் கார்முகம் - திருச்செந்தூர்

*வீரவீ நெருங்கு குரங்கி னங்கொடு*

*மொகு மொகெ னுங்கட லுங்க டந்துறு*

*விசைகொடி லங்கை புகுந்த ருந்தவர்* *களிகூர*

*வெயில்நில வும்பரு மிம்ப ரும்படி*

*ஜெயஜெய வென்று விடுங்கொ டுங்கணை*

*விறல் நிருதன் தலை சிந்தினன்* - வரைவில் - வள்ளிமலை

*அலை கடலடைத்தே மகா கோர ராவணனை மணிமுடி துணித்*

*தாவியேயான சானகியை அடலுட னழைத்தே கொள் மாயோனை*

*மாமனெனு மருகோனே* - தலைவலி மருத்தீடு - பழநி

*ஆழியடைத்துத் தங்கை யிலங்கையை யெழுநாளே ஆண்மை*

*செலுத்திக் கொண்ட கரும் புயல்* சூழும் வினை - வேதாரணியம்

*வளைய மலை கடல் சுவற விடு பகழி வரதன்..*

- அளகநிரை - பொது

*உததி புதைபட அடைத்தா தவன்*

*நிகரி விரதமும் விடுக்க நகர்*

*ஒருநொ டியில்வெயி லெழச் சாநகி* *துயர்தீர*

*உபய வொருபது வரைத்தோள் களு*

*நிசிச ரர்கள்பதி தசக்ரீ வமு*

*முருள ஒருகணை தெரித்தா னும்*

கடல் புதைபடும்படி அடைத்து, சூரியனுடைய ஒப்பற்ற தேரும் வரக்கூடாதென்று தடுக்கப்பட்டிருந்த நகரமாகிய இலங்கையில், ஒரு நொடிப்பொழுதில், சூரியன் ஒளிரும்படிச் செய்து, சீதையின் துயரம் தீரும்படி இருபது மலை போன்ற தோள்களும், அரக்கர் தலைவனாம் ராவணனுடைய பத்துக் கழுத்தும், உருண்டு மாண்டு ஒழிய, ஒரே பாணத்தை விட்ட திருமால் என்று "மதன" என்று தொடங்கும் பொதுத் திருப்புகழ் வர்ணிக்கிறது.

*அமரர்துதிக்கப் புரந்தரன் தொழ*

*எழுபது வர்க்கக் குரங்கு கொண்டெறி*

*மலையையடைத்துக் கடந்து சென்றெதிர் முந்து போரில்,*

*அசுரர் முதற் கொற்றவன் பெருந்திறல்*

*இருபது கொற்றப் புயங்கள் சிந்திட,*

*அழகிய கொத்துச் சிரங்க ளொன்பது மொன்றுமாளக்*

*கமல மலர்க் கைச்சரந் துரந்தவர்*

தேவர்கள் துதி செய்ய, இந்திரன் தொழுது வணங்க, எழுபது வகையான குரங்குப் படைகளைக் கொண்டு அலைவீசும் கடலை அணையிட்டு அடைத்து, கடலைக் கடந்து இலங்கை சென்று, அரக்கர்களின் தலைவனாம் இராவணனுடைய மிக்க பராக்ரமம் கொண்ட இருபது வெற்றித் தோள்கள் அற்று விழவும், அழகான கொத்தாயிருந்த தலைகள் பத்தும் மாண்டு விழத் தாமரை மலர் போன்ற கரத்தால் அம்பைச் செலுத்தியவர் என்று இமகிரி என்ற பொதுத் திருப்புகழ் விவரிக்கிறது.

*வரிமுக எண்கினுடன் குரங்கணி*
*பணிவிடை சென்று முயன்ற குன்றணி யிடையேபோய்ப்*
*பகடி யிலங்கை கலங்க அம்பொனின்*
*மகுட சிரந் தசமுந் துணிந்தெழு*
*படியு நடுங்க பனம்பழ எனவாகும்*

ஒளி பொருந்திய முகத்தை உடைய சாம்புவான் முதலான கரடிப் படையும், குரங்குப் படையும் பணிபுரிய, போருக்குச் சென்று முயற்சிகொண்டு, மலை வரிசைகளின் இடையேபோய், ராவணனது இலங்கை கலங்கும்படி, அவனுடைய பொன்னாலாய கிரீடங்களை அணிந்த தலைகள் பத்தும் துணிபட்டு, ஏழுலகமும் நடுங்க, விழுகின்ற பனம்பழம்போல விழும்படி ஆக்கினவர் - கரதலமும் - விராலிமலை.

**இராம இராவண யுத்தம்:**

*வஞ்சங்கொண் டுந்திட ராவண*
*னும்பந்தென் திண்பரி தேர்கரி*
*மஞ்சின்பண் புஞ்சரி யாமென வெகுசேனை*
*வந்தம்பும் பொங்கிய தாகஎ*
*திர்ந்துந்தன் சம்பிர தாயமும்*
*வம்புந்தும் பும்பல பேசியு மெதிரேகை*
*மிஞ்சென்றுஞ் சண்டைசெய் போதுகு*
*ரங்குந்துஞ் சுங்கனல் போலவே*
*குண்டுங்குன் றுங்கர டார்மர மதும்வீசி*
*மிண்டுந்துங் கங்களி னாலெதி*
*கர்ந்தங் கங்கர மார்பொடு*
*மின்சந்துஞ் சிந்தறி சாசரர் வகைசேர*
*வஞ்சண்டன் தென்றிசை நாடிவி*

*ழுந்தங்குஞ் சென்றெம தூதர்க*
*ளுந்துந்துந் தென்றிட வேதசை நிணமூளை*
*உண்டுங்கண் டுஞ்சில கூளிகள்*
*டிண்டிண்டென் றுங்குதி போடவு*
*யர்ந்தம்புங் கொண்டுவெல் மாதவன் மருகோனே.*

வலிமை வாய்ந்த இராவணன், பந்து போல வேகமாகச் செல்லும் குதிரை, தேர், யானை முதலிய சேனைகளுடன் வந்து, தனது சாமர்த்திய, பெருமை, வீண், இழிவான பேச்சும் பேசி, எதிரில் உள்ள சேனையுடன் சண்டை செய்த போது, எதிரிலுள்ள குரங்குச் சேனைகள், நெருப்புப் போல கோபங்கொண்டு, மலைகளையும், மரங்களையும் வீசி, அரக்கர்களுடைய இனம் முழுமையும் அழியவும், பேய்கள் கூத்தாடவும், சிறந்த அம்புகளைக் கொண்டு வென்ற திருமால், என்று ஒரு அழகான திருச்செந்தூர் பாடல் முழுதும் போர் நிகழ்வை வர்ணிக்கின்றார்.

*மலையே யெடுத்தருளு மொருவாள ரக்கனுடல்*
*வட மேரெனத் தரையில் விழவேதான்*
*வகையர விடுத்த கணையுடையான்*
*மகிழ்ச்சி பெறு மருகா*

கயிலை மலையை எடுத்த, ஒப்பற்ற வாளை ஏந்தின ராவணன் உடல் தரையில் விழும்படி, அம்பைச் செலுத்திய ராம பிரான் (சிவபிரான் தந்த வாள் ஒன்று இராவணனிடம் உண்டு)

- பல காதல் பெற்றிடவு - திருவேரகம்

*மலையில் நிகரிலதொரு மலைதனை யுடல் மருகி யலமர அறவுர*
*முடுகிய வலிய பெலமிக வுடையவன் –*

கயிலை மலையைத் தனது திடத்தைக் காட்டி எடுக்க முயன்ற ராவணன்

- இலகி - பொது

*.. ஏதத் திலங்கையினில் ஆதிக்கமுண்டதொரு முட்டாளரக்கர் தலை*
*யிற்றே விழ கணைகளே தொட்ட கொண்டல் ..*

- இத்தாரணிக்குள் - பழநி

*சினங்கள் கொண்டிலங்கை மன் சிரங்கள் சிந்த வெஞ்சரந்*
*தெரிந்தவன் –*

கனங்கள் கொண்ட - திருச்செந்தூர்

*கான்பாற் சந்தாடு பொற்கிரி*
*தூம்பாற் பைந்தோளி கட்கடை*
*காண்பாற் றுஞ்சாமல் நத்திடும்* *அசுரேசன்*
*காம்பேய்ப் பந்தாட விக்ரம*
*வான்றோய்க் கெம்பீர விற்கணை*
*காண்டோர்க் கொண்டேவும் அச்சுதன்* *மருகோனே*

காட்டிடையே சீதையின் கடைக்கண் காட்சிபெற விரும்பி, தூக்கங் கொள்ளாது, ஆசையுடனிருந்த அசுரேசன், தலைகள் உருளுமாறு அம்பை, அழகிய தேர் மீதிருந்து செலுத்திய அச்சுதன் மருகன். -மான்போற் கண் - திருச்செந்தூர்

*இலங்கையில் ராவணன் சிரமே யரிந்தவர் சேனையுஞ் செல மாள வென்றவன்* - வேயிசைந்தெழு - பழநி

*எருவை யொடுகொடி கெருடனும் வெளிசிறி*
*திடமு மிலையென வுலவிட அலகையின்*
*இனமும் நிணமுன எழுகுறள் களுமிய* *லிசைபாட*
*இகலி முதுகள மினமிசை யொடுதனி*
*யிரண பயிரவி பதயுக மிகுநட*
*மிடவு மிகவெதி ரெதிரெதி ரொருதனு* *விருகாலும்*
*வரிசை யதனுடன் வளைதர வொருபது*
*மகுட மிருபது புயமுடன் மடிபட*
*வலியி னொருகணை விடுகர முதலரி* *நெடுமாயன்*

போர்க் களத்தில், கழுகு, காக்கை, கருடன் உலவ, பேய்களின் கூட்டங்கள் மாமிசங்களை உண்ண, பூத வேதாளங்கள் இயல், இசைத் தமிழ் பாட, ரணபைரவி நடனமிட, ராவணன் மடிந்து விழ, ஒப்பற்ற அம்பைச் செலுத்திய நீண்ட மாயவன். - முருகு செறி - பொது

*பொருப்பையொக்கப் பணைத்த தோரிரட்டி பத்துப் புயத்தினால்*
*பொறுத்த பத்துச் சிரத்தினால் மண்டு கோபமுடனே பொரப்*
*பொருப்பிற் கதித்த போரரக்கர் பட்டுப் பதைக்கவே*
*புடைத்து முட்டத் துணித்த மால்.*

மலை போன்ற இருபது புயங்களாலும், பத்துத் தலைகளாலும் மூண்ட கோபத்துடன் ராவணன் போர் செய்ய, அரக்கர்கள் சிதைவுண்டு பதைக்கவே, அவர்கள் அனைவரையும் வெட்டி யொழித்த திருமால் - தெருப்புறத்து - திருச்செந்தூர்

*வேத முழுதும் புகல் இராமன் ஒரு தம்பி மிசை*
*வீடணன் அருந்தமையன் மைந்தன் இகலாய்*

*வீசும் அரவஞ் சிதறியோட வரு வெங்கழலுன்*
*மேல்இடி எனும்படி முழங்கி விழுமே*

இராமனுடைய தம்பி லக்ஷ்மணன் மீது, இந்திரஜித் எறிந்த நாக பாசம் என்னும் படை, அஞ்சி விழுந்து ஓடும்படி வந்த கடுமை வாய்ந்த கருடன்

- மயில் வகுப்பு

*இராகவ இராமன்முன் இராவண இராவண இராவண இராஜனுட்குடன்*
*மாய்வென்றி ராகன்*

இரகு வம்சத்தைச் சேர்ந்த ராமன் முன்பு, அழுகுரலோசையுற்ற ராவணன் மாயும்படி வென்ற ராமன், (முன் இராவண - கயிலையங்கிரியை அசைத்தெடுத்துச் சிவபெருமானால் அடக்கப்பட்ட அந்நாளில் அழுகுரலோசையுற்ற; இரா வண - இராவின் வண்ணமாகிய கருமை நிறமுடைய; ராகன் - ராகவன்)

நிராமய புராதன - விராலிமலை

*பத்தான முடித் தலைக் குவடிற்றாட வரக்கருக் கிறை பட்டாவி விடச்*
*செயித்தவன்* முத்தோலை - திருக்குற்றாலம்

*பத்துத் தலை தத்தக் கணை தொடு.. பச்சைப் புயல்* - முத்தைத்தரு

*ஒருபது சிரமிசை போந்த ராவண னிருபது புயமுடனேந்தும் ஏதியு*
*மொருகணை தனிலற வாங்கு மாயவன் – (ஏதி – வாள்)*

தரையினில் - கூந்தலூர்

*கருதி யிலங்கை யழிந்து விடும்படி அவுணரடங்க மடிந்து விழும்படி*
*கதிரவ னிந்து விளங்கி வரும்படி விடு மாயன் –*

போர் முடிந்து சூரியன், சந்திரன் இருவரும் சிறை மீட்கப்பட்டு, பழைய முறைப்படி இயங்க வைத்த மாயன்

- சருவி யிகழ்ந்து - சீகாழி

*மகுட மொருபது முறிய அடு பகழி விடு குரிசில்.. (பகழி – அம்பு)*
- சீர் பாத வகுப்பு

*ஒருபது சிரமும் இருபது கரமும் விழ ஒரு பகழி தொடுத்தோன்*
வேல் வாங்கு வகுப்பு

**விபீஷணர் பட்டாபிஷேகம்**

*எழுது கும்பகன் பினிளைய தம்பி நம்பி*
*யெதிரடைந் திறைஞ்சல் புரிபோதே*
*இதமகிழ்ந் திலங்கை யசுர ரந்தரங்க*
*மொழிய வென்ற கொண்டல் – மருகோனே*

அடைக்கலம் புக எழுந்த கும்பகர்ணனின் தம்பியாகிய விபீடணன், ராமரிடம் வந்து சேர்ந்து வணங்கினபோதே, இதயம் மகிழ்ந்து, இலங்கையிலுள்ள அசுரர்களுடைய ரகசியங்களை எடுத்துரைக்க, வெற்றி பெற்ற மேகவர்ணனாம் ஸ்ரீராமர் - அழகெறிந்த - குன்றக்குடி.

அரக்க ரிலங்கை வீடணருக் கருள் கொண்டல் சேலையுடுத்து
- வேதாரணியம்

*பராதன பண்டப் பாரிய மாருதி தோள்மிசை கொண்டுற் றமராடிப்*
*பாவி யிராவணனார் தலை சிந்திச் சீரிய வீடணர் வாழ்வுற மன்றற்*
*பாவையர் தோள் புணர் மாதுலர்..*

மாருதியின் தோள்மேலே வீற்றிருந்து, போர் செய்து, ராவணனுடைய தலைகள் சிதறவும், உத்தமராம் விபீஷணர் வாழ்வுறவும் வைத்து, சீதா பிராட்டியின் தோளைச் சேர்ந்த திருமால்..
தோலொடு மூடிய - திருச்செந்தூர்

*பருதி மகன் வாசல் மந்த்ரி அநுமனொடு நேர் பணிந்து*
*பரி(வு)தக (அ)ழையா முன் வந்து பரிவாலே*
*பரவிய விபீஷணன் பொன் மகுடமுடி சூட நின்ற*
*படைஞரொடி ராவணன்ற னுறவோடே*
*எரிபுகுத மாறி லண்டர் குடிபுகுத மாறு கொண்ட*
*ரகுபதி யிராமசந்த்ரன் மருகோனே*
*சுருளளக – பழநி*

சுக்ரீவனுடைய மந்திரியாகிய அநுமன் உதவியுடன், அழைக்கு முன்பே வந்து போற்றின விபீஷணருக்குப் பொன் மகுடம் சூட, ராவணனும் அவன் உறவினர்களும், சேனைகளும் அழிய, தேவர்கள் தமது பொன்னுலகில் குடிபுகுமாறு செய்த ரகுகுல திலகம் இராமச்சந்திர மூர்த்தியினுடைய மருகனே! எனப் பட்டாபிஷேகத்தைப் பாடியுள்ளார்.

போர் முடிந்து அயோத்தி திரும்பி, பட்டாபிஷேகம் முடிந்தது. சீதா தேவி வனத்திற்கு அனுப்பப்பட்டாள். அங்கு லவ, குசர் பிறக்கின்றனர். அவர்கள் வளர்ந்து, வீரராகி, இராமர் அனுப்பிய யாகக் குதிரையைப் பிடித்துவைத்து, அதன் மூலம் வரும் போர் நிகழ்வைக் குறிக்கும் சிறுவாபுரித் திருப்புகழ்.

*சிறுவராகி யிருவர் அந்தகரி பதாதி கொடு பொருஞ்சொல்*
*சிலை யிராமனுட னெதிர்ந்து சமராடிச்*
*செயமதான நகரமர்ந்த அளகைபோல வளமிகுந்த*
*சிறுவை மேவி வரமிகுந்த பெருமாளே.*

*தொண்டு பட்டுத் தெண்ட னிட்டுக் கண்டு பற்றத் தண்டை வர்க்கத் துங்க ரத்தப் பங்க யத்தைத் தருவாயே.*

********

# திருப்புகழ் பாடல்கள்

**இராமாயணப் பகுதியில் வரும் திருப்புகழ் பாடல்கள்**

1. ஆலகால படப்பை - திருச்செங்கோடு
2. கருவடைந்த - திருப்பரங்குன்றம்
3. சுருளளக பார - பழநி
4. விடமும் வடிவேலு - திருவேரகம்
5. நிராமய புராதன - விராலிமலை
6. தொந்தி சரிய - திருச்செந்தூர்
7. வேலைப் போல் - திருவானைக்கா
8. சேலையுடுத்து - வேதாரணியம்(2)
9. தொடுத்த - அருக்கொணாமலை
10. வால வயதாகி - இராமேசுரம்
11. குலைய - விரிஞ்சிபுரம்
12. கொள்ளையாசை - சிதம்பரம்
13. கனகதம்ப - காஞ்சிபுரம்
14. ஆடல் மதனம் - ஸ்ரீ புருஷமங்கை

15. திருவிடைக்கழி
16. குனகியொரு - பொது
17. தும்பி முகத்தானை - கும்பகோணம்
18. மருமலரினன் - பழநி
19. புருவச் செஞ்சிலை - மதுரை
20. பாதிமதி - திருவேரகம்
21. தாக்கமருக்கொரு - திருத்தணி
22. விடமும் வடிவேலு - திருவேரகம்
23. பெரும் - பொது
24. மானை நேர் விழி - காவளூர்
25. கதியை விலக்கு - பழநி
26. நீல மஞ்சான - திருச்செங்கோடு
27. கூந்தலவிழ்த்து - திருத்தணிகை
28. தோழமை கொண்டு - வல்லக்கோட்டை
29. விடுங்கைக் கொத்த - சிதம்பரம்
30. மானை விடத்தை - திருவருணை
31. ஆலகாலமென - பழநி
32. மகர குண்டல - திருவலஞ்சுழி
33. பட்டுமணி - கொட்டையூர்
34. உடுக்கத் துகில் - கதிர்காமம்
35. சங்கைக் கத்தோடு - பட்டாலியூர்
36. வேயிசைந்தெழு - பழநி
37. சந்தனந் திமிர்ந்த - எண்கண்
38. தலங்களில் - பெருங்குடி
39. அலங்கார - திருக்குரங்காடுதுறை
40. குழலடவி - பழநி
41. வனப்புற்றெழு - திருப்புக்கொளியூர் அவிநாசி
42. முகர வண்டெழும் - திருப்பெருந்துறை
43. குடத்தாமரை - விருத்தாஜலம்
44. சருவியிகழ்ந்து - சீகாழி
45. அருக்கி மெத்தென - திருப்படிக்கரை
46. குங்கும கற்பூர - இஞ்சிகுடி
47. கந்தரலங்காரம் 43, 54
48. புரக்க வந்த - பொது

# ஸ்ரீராமருக்கு விருந்து

பரத்வாஜர் ஸ்ரீராமனுக்கு விருந்து படைத்த கட்டத்தைப் பாட்டிகள் பாடும் விதமே அலாதியானது!

*வைகுண்டவாசருக்கு வாழை இலை போட்டு*
*வாழை இலைதன்னை வடக்கே நுனி போட்டு*
*காட்டுச் சிறுகிழங்கும் கந்த மூலம் பழமும்*
*தூது விளங்காயுடனே சுண்டைக்காய் பச்சடியும்*
*அஞ்சு வகைப் பச்சடியும் ஆன நல்ல தாளிதமும்*
*பத்துவகைப் பச்சடியும் பால்குழம்பும் சர்க்கரையும்*
*பொறிச்ச பொறி கறியும் பொன்போல் சிறு பருப்பும்*
*புத்துருக்கு நெய்யும் புனுகு சம்பாப் பாயசமும்*
*தேங்காயும் சர்க்கரையும் தித்திக்க மோதகமும்*
*பச்சுன்னு கீரையும் பால்வடியும் மாவடுவும்*
*வேர்புறத்திலே வெடித்த வேண பலாச்சுளையும்*
*தார் பழுத்துச் செறிந்த தேனான கதலிகளும்*
*கொத்தோடு மாம்பழமும் கொம்பிலுள்ள நல்தேனும்*
*கொய்யாப் பழங்களும் கொடி முந்திரிப் பழமும்*
*கிச்சிலிப் பழங்களும் கிளுகிளுத்த மாதுளையும்*
*வெள்ளைக் கடுக்காயும் வெடுக்குன்னு இஞ்சியும்*
*பச்சை மிளகும் பால் வழியும் களாக்காயும்*
*நேர்த்தியாய் நெல்லிக்காய் மணமுள்ள மாகாளி*
*நார்த்தை கடநார்த்தை நறுமண எலுமிச்சை*
*வடுகு மாங்காயும் கார மிளகாயும்*

இப்படி முற்றிலும் அடுக்களைப் பெண்களாகப் பாட்டுச் செய்தவர்கள், போஜனம் முடித்த ராமன் காலும் அலம்பி கனிவாயும் கொப்புளிச்சு ஆசமனம் பண்ணி அவருமங்கே வீற்றிருந்தார் எனும்போது கவிகளாகவும், சாஸ்திர ஆசார சீலிகளாகவும் ஆகி விடுகின்றனர். கையலம்பி வந்ததும் ஜீர்ணம் ஆவதற்காக ஏலமுடன் சுக்கு எல்லார்க்கும் தாம் கொடுத்தார் என்று மறக்காமல் சொல்லுவதை, பாட்டிமார் பாஷையிலேயே, 'பொகு அழகு' என்று சிலாகிக்கலாம்.

- ரா. கணபதி

(நன்றி: ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம், சித்திரை - ஏப்ரல் 2001)

# 7. இராம பக்தர்கள்

**சத்குரு தியாகராஜர் :**

தியாகப் பிரம்மத்தின் பெற்றோர் ராமப் பிரம்மம். சீதம்மா. திருவாரூரில் குடியிருந்தார் தியாக பிரம்மத்தின் தந்தையார் ராமப்பிரம்மம், தாயார்: சீதம்மா. இவர்களுக்கு ஜப்பேசன், இராமநாதன், தியாகராஜன் என மூன்று புதல்வர்கள். தாய்மொழி தெலுங்கு. தந்தையார் இராமப்பிரம்மம் சம்ஸ்கிருதத்திலும், தெலுங்கிலும் மேன்மையுற்று விளங்கினார். இராமாயணச் சொற்பொழிவுகள் செய்வதில் சிறந்து விளங்கினார்.

தியாகராஜ சுவாமிகள் 4-5-1767-ல் அவதரித்தார். ஏழாவது வயதில் பிரம்மோபதேசம் செய்து, ராமதாரக மந்திரத்தையும் தந்தையார் உபதேசித்தார். இராம கிருஷ்ணானந்த சுவாமிகள் 'ராம சடாக்ஷரி' மந்திரத்தை உபதேசம் செய்தருளி, இராம நாமத்தின் சிறப்புகளையும், பெருமையினையும் எடுத்துரைத்தார். அதுமுதல் இராம பக்தரானார். தியாகராஜர் திருவையாற்றில், சம்ஸ்கிருதக் கல்லூரியில் வடமொழிக் கல்வி பயின்றார். தாயார் சீதம்மா, பக்த ராமதாசர், புரந்தர தாசர் போன்றோருடைய கீர்த்தனைகளையும், ஜெயதேவரின் அஷ்டபதியையும் கற்றுத் தந்தார். அன்னை வழிப் பாட்டனார் வீணை காளஹஸ்தி ஐயாவிடமும் சங்கீதம் கற்றார். தகப்பனார் 'ஸொண்டி வெங்கடரமணய்யாவிடம் அனுப்பி, சங்கீத சிக்ஷையை ஆரம்பித்து வைத்தார்.

நாரத மகரிஷி கனவில் தோன்றி 'ஸ்வரார்ணம்' என்ற இசைக் கருவூலத்தை அளித்து மறைந்தார். "ஸ்ரீநாரத முனி குருராய கண்டி" எனப் பாடினார். தினசரி ஒரு லட்சத்து இருபத்தி ஐயாயிரம் ராம நாம ஜபம் செய்து வந்தார். இருபத்தோரு ஆண்டுகளில் தொண்ணூற்று ஆறு கோடி ராம ஜெபத்தைப் பூர்த்தி செய்தார்! ஒருகோடி ஜெபம் பூர்த்தியான தினத்தன்று, ஸ்ரீராமபிரான், லக்ஷ்மணன், விசுவாமித்திரருடன் 'யாக வேள்வியைக் காக்க வரும்' திருக்கோலத்தில் காட்சி தந்தனர்.

தியாகராஜருக்குப் பதினெட்டாம் வயதில் பார்வதி என்ற மங்கை நல்லாளுடன் திருமணம் நடைபெற்றது. ஐந்தாண்டு இல்லறம் நடத்திய

பின்னர் மனைவி இயற்கை எய்தினார். அம்மையாருடைய தங்கை கமலாம்பாளை இரண்டாம் தாரமாக மணந்து கொண்டார். அவருக்கு சீதாலக்ஷ்மி என்று ஒரு பெண் பிறந்தது. காலப் போக்கில் அவளும் இறைவனடி சேர்ந்தாள்.

தியாகராஜர் 6-1-1847 பகுள பஞ்சமி தினத்தில் ஸ்ரீராமபிரான் திருவடி சேர்ந்தார். திருவையாற்றில் காவிரிக்கரையில் அவர் சமாதிக் கோயில் உள்ளது. அதில் தியாகராஜரின் திருவுருவம் உள்ளது. பிருந்தாவனத்தின் முன் அமர்ந்த கோலத்தில் காட்சி தருகிறார். கோயிலின் ஒருபுறத்தில் ராமரின் குழந்தைகளான லவ, குசர்களுக்கு அவர் இராமாயணம் சொல்வதுபோல் உள்ள அழகிய வேலைப்பாடுள்ள கருங்கல் சிலை உள்ளது. சீதா கல்யாணம், இராமர் பட்டாபிஷேகம், இராம ஆஞ்சநேயர் ஆலிங்கனம், சீதை அநுமனிடம் கணையாழி கொடுத்தல் போன்ற சிற்பங்களும் உள்ளன.

" *எந்தரோ மஹாநு பாவு லந்தரிகி வந்தநமு* "

********



**ஸ்ரீ தியாகராஜ சுவாமி கோயில்**
**- சமாதி மந்திர் - திருவையாறு**

**ஸ்ரீ ராகவேந்திர சுவாமிகள்**

1595ஆம் ஆண்டு ராகவேந்திரர் புவனகிரியில் அவதரித்தார். பெற்றோர் கோபிகாம்பா, திம்மண்ணா ஆவர். வெங்கடநாதர் என்று பெயர் சூட்டினர். கும்பகோணம் மத்வ மடாதிபதியாக இருந்த சுதீந்திர தீர்த்த சுவாமிகளிடம் பயின்று வந்தார். ராகவேந்திரருடைய மனைவி சரஸ்வதி அம்மையார்.

அவர்களுடைய புதல்வன் லக்ஷ்மிநாராயணன். தஞ்சாவூரில் 1621ல் ஸ்ரீ சுதீந்திர தீர்த்தர் வெங்கடநாதருக்கு சந்யாசம் அளித்து ராகவேந்திரர் என்ற பெயரையும் சூட்டினார். மடத்திற்கு அதிபதியாகவும் நியமித்து, ஸ்ரீ சுதீந்திர தீர்த்தர் 1671ல் நவ பிருந்தாவனத்தில் சித்தியடைந்தார்.

ஸ்ரீராகவேந்திரர் ஆந்திர மாநிலம், கர்நூல் மாவட்டத்தில் துங்கபத்ரா நதிக்கரையில் மந்திராலயத்தில் மடத்தை ஸ்தாபித்து, மடாதிபதியாக இருந்து 1671-ல் சித்தியடைந்தார். மூல பிருந்தாவனத்திலிருந்து பக்தர்களுக்கு அருள்பாலித்து வருகிறார்.

மூலவர்: ஸ்ரீராகவேந்திரராலும், அவருக்கு முற்பட்ட மடாதிபதிகளாலும் வழிபட்டு வந்த மூர்த்தி, இம்மூர்த்தி சதுர்முக பிரம்மா முதல் தசரதன் வரை வழிபடப்பட்டு வந்தது. பின்பு இராமபிரானால் வழிபடப்பட்டு, மத்வ ஆசார்யர்களில் ஒருவரான ஸ்ரீ ஸ்ரீ நரஹரி தீத்தகரை அடைந்தது 1324-1333). அதுமுதல் மத்வ மடங்களில் மூல ராமர் வழிபாடும் நடைபெற்று வருகிறது.

**ஸ்ரீமத் பகவந்நாம போதேந்திர சரஸ்வதி சுவாமிகள்**

கேசவபாண்டுரங்கன், கருணா தம்பதியருக்குப் புதல்வராக அவதரித்த புருஷோத்தமனை, காஞ்சி சங்கர மடத்தின் 58ஆவது பீடாதிபதியான ஸ்ரீமத் விச்வாதிகேந்த்ர ஸரஸ்வதி சுவாமிகள், காசியில் சந்யாசம் அளித்து ஸ்ரீமத் பகவந்நாம போதேந்திர சரஸ்வதி சுவாமிகள் என்று பெயர் சூட்டி, 59ஆவது பீடாதிபதியாக நியமித்தார். கும்பகோணம் அருகிலுள்ள கோவிந்தபுரத்தில் சுவாமிகளுடைய அதிஷ்டானம் உள்ளது.



**ஸ்ரீ மருதாநல்லூர் (மருதாந்தநல்லூர்)**
**ஸ்ரீ ஸத்குரு வேங்கடராம ஸ்வாமிகள்**

(கி,பி. 1777- 1817) ஸ்ரீசேஷா சாஸ்திரிகள், அபிராமி அம்மாள் தம்பதிகளுக்கு 1977ல் வேங்கட்ராமன் அவதரித்தார்.

குழந்தையைப் படிக்க வைக்கும்போது அவருடைய முதல் சொல்லே "ராமா' என்ற தாரக நாமம். அலர்மேல்மங்கையைத் திருமணம் செய்துவைத்தனர். ஒரு ஆண் குழந்தையைப் பெற்றெடுத்து, தாயும், சேயும் இவ்வுலகத்தைவிட்டு நீங்கினார்கள். அப்பொழுது வயது 22. பாரதத்தின் பல இடங்களுக்கும் யாத்திரை சென்றுவந்தார். காசி முதல் கன்னியாகுமரி வரை தனது பஜனை சம்பிரதாயத்தைப் பரப்பி வந்தார்.

மருதாந்தநல்லூர் கிராமவாசிகள் வேண்டுகோளையேற்று அவ்வூரிலேயே தங்கினார். மருதாந்தநல்லூர் ஒரு சிவஸ்தலம். ஸ்ரீராமபிரானால் அர்ச்சிக்கப்பட்ட திருத்தலம். அங்கேயே ஒரு மடம் அமைத்து தங்கலானார்.

தஞ்சாவூரை ஆண்டுவந்த சரபோஜி மன்னன், தனது கனவில் வந்த உத்தரவுப்படி ஸ்ரீராம பஞ்சாயதன (ஸ்ரீராமர், சீதா, லக்ஷ்மணர், பரத சத்ருக்கனர், ஆஞ்நநேயர்) விக்கிரகங்களை மருதாநல்லூர் சுவாமிகளிடம் ஒப்படைத்தான். சுவாமிகள் 1817-ஆம் ஆண்டு இறைவனடி சேர்ந்தார்.

********

**பக்த ராமதாஸ்**

பத்ராசலம் இராமர் கோயில் : கோபண்ணா (ராமதாசர்) திருப்பணி செய்த தலம். தாசில்தாராகப் பணி செய்தபோது, தான் வசூலித்த அரசாங்க வரிப்பணம் முழுவதையும், கோயில் திருப்பணிக்கே செலவிட்டார். முஸ்லிம் அரசர் தானிஷா, கோபண்ணாவுக்கு 12 ஆண்டுகள் சிறைத்தண்டனை விதித்தார். கோல்கொண்டா மலைக் குகைச் சிறையில் அடைக்கப்பட்டார். கோபண்ணா சிறையில் உள் சுவர்களில் ராமர், சீதை, லக்ஷ்மணன் முதலியோரின் உருவங்களை வரைந்து வழிபட்டு வந்தார். சீதா தேவியைப் பிரார்த்தித்து வந்தார். சீதா தேவி இராமரிடம் ராமதாசருக்கு உதவுமாறு வேண்டியதாகவும், பின்பு இராமர் அவரைக் காப்பாற்றியதாகவும் ஒரு வரலாறு!

ஒருநாள் இரவு இரண்டு வாலிபர்கள் தானிஷாவைச் சந்தித்து, "கோபண்ணா செலவழித்த பணத்தை வட்டியோடு கொண்டு வந்திருக்கிறோம். பெற்றுக்கொள்ளுங்கள்", என்று சொல்லி, பொற்காசுகள் நிறைந்த மூட்டையைத் தருகிறார்கள். உடனே தானிஷா விழித்தெழுந்து பார்க்க, மூட்டை மட்டும் இருக்கக் கொண்டு வந்தவர்களைக் காணவில்லை! வந்த இருவர் உருவங்களும், ராம, லக்ஷ்மணர் உருவத்துடன் ஒத்துப்போவதை உணர்ந்து, உடனே கோயிலுக்குச் சென்று, மூலவர் முன்பு மன்னிப்புக் கேட்டுக்கொண்டு, கோபண்ணாவை விடுதலை செய்தார். விடுதலையான கோபண்ணா 'ராமதாஸ்' என்ற பெயரில், ராமர் மீது கீர்த்தனைகள் இயற்றிப் பாடிய வண்ணம் இறைவனை அடைந்தார்.

********

**துளசிதாசர்**

கோஸ்வாமி துளசிதாஸை வால்மீகியின் மறு அவதாரம் என்று குறிப்பிடுகின்றனர். அஸ்தினாபுரத்தில் ஆத்மாராம் துபே, ஹசிபாய் என்ற தம்பதிகளுக்கு புதல்வராய் அவதரித்தார். ரத்நாவதி அவர் மனைவி. அவரின் விருப்பப்படி ஸ்ரீராமரைத் தரிசிக்க விரும்பி, கடுமையான விரதத்துடன் 12 வருடம் ராமரைக் குறித்து ஜபம் செய்து வந்தார். அநுமாருடைய தரிசனம் கிடைத்தது. அவர் மூலம் இராமபிரானின் தரிசனமும் கிடைத்தது. துளசிதாஸ் அவர்கள் ஸ்ரீராமரை 'மர்யாதா புருஷோத்தமா' என்று குறிப்பிடுகிறார்.

**இராமசரிதமானஸ்** என்று ஹிந்தியில் (லோக பாஷையிலும், பிரிஜ் பாஷையும் கலந்தது) ராமாயணத்தை இயற்றினார். அத்துடன் **ஹனுமான் சாலிஸா** என்ற பிரசித்தி பெற்ற அநுமன் தோத்திரப் பாடலையும் இயற்றினார். தமது 91ஆவது வயதில் வாரணாசியில் இறைவனடி சேர்ந்தார்.

*******





# 8. தோத்திரங்கள்



## திவ்யப் பிரபந்த பாசுரப்படி ராமாயணம்

பெரியவாச்சான் பிள்ளை அவர்கள், பன்னிரு ஆழ்வார்களின் திவ்யப் பிரபந்த பாசுரங்களிலுள்ள பதங்களையே தொகுத்து ராமாயணமாக அருளிச் செய்துள்ளார். தினசரி பாராயணம் செய்வதற்கேற்ப தரப்பட்டுள்ளது.

**பாலகாண்டம்**

*திருமடந்தை மண்மடந்தை இருபாலும் திகழ*
*நலமந்த மில்லதோர் நாட்டில்*
*அந்தமில் பேரின்பத் தடியரோடு*
*ஏழுலகும் தனிக்கோல் செல்ல வீற்றிருக்கும்*
*அயர்வறும் அமரர்கள் அதிபதியான*
*அணியார் பொழில்சூழ் அரங்கநகரப்பன்*
*அலைநீர்க் கடலுள் அழுந்தும் நாவாய் போல்*
*ஆவாரார் துணையென்று துளங்கும்*
*நல்ல அமரர் துயர்தீர*
*வல்லரக்கர் இலங்கை பாழ்படுக்க எண்ணி*
*மண்ணுலகத் தோருய்ய*
*அயோத்தி என்னும் அணிநகரத்து*
*வெங்கதிரோன் குலத்துக்கோர் விளக்காய்க்*
*கௌசலை தன்குல மதலையாய்த்*
*தசரதன் தன் மகனாய்த் தோன்றி*
*குணம் திகழ் கொண்டலாய்*
*மந்திரங்கொள் மறைமுனிவன் வேள்விகாக்க நடந்து*
*வந்தெதிர்ந்த தாடகை தன் உரத்தைக்கீறி*
*வல்லரக்கர் உயிருண்டு கல்லைப் பெண்ணாக்கி*
*காரார் திண்சிலை யிறுத்து*
*இருபத்தொரு கால் அரசு களைகட்ட*
*மழுவானி வெவ்வரி நற்சிலை வாங்கி வென்றிகொண்டு*
*அவன் தவத்தை முற்றும் செற்று*
*அம்பொனொடு மணிமாட அயோத்தி எய்தி*

அரியணைமேல் மன்னன் ஆவான் நிற்கக்
கொங்கைவன் கூனி சொற்கொண்ட
கொடிய கைகேயி வரம் வேண்ட
அக்கடிய சொற்கேட்டு
மலக்கியமா மனத்தனனாய் மன்னவனும் மாறாதொழிய
குலக்குமாரா! காடுறைப் போ என்று விடைகொடுப்ப
இந்நிலத்தை வேண்டாது
ஈன்றெடுத்த தாயரையும் இராச்சியமும் ஆங்கொழிந்து
மைவாய கனிறொழிந்து மாவொழிந்து தேரொழிந்து
கலனணியாதே காமரெழில் விழலுடுத்து
அங்கங்கள் அழகு மாறி
மானமரு மென்னோக்கி வைதேவி யின்துணையா
இளங்கோவும் வாளும் வில்லும் கொண்டு பின்செல்லக்
கலையும் கரியும் பரிமாவும்
திரியும் கானம் கடந்துபோய்ப்
பத்தியுடைக் குகன் கடத்தக் கங்கை தன்னைக் கடந்து
வனம் போய்ப் புக்குக் காயோடு நீடு கனியுண்டு
வியன் கான மரத்தி நீழல்
கல்லணைமேல் கண் துயின்று
சித்திர கூடத்திருப்ப, தயரதன் தான்
“நின்மகன் மேல் பழிவிளைத்திட்டு
என்னையும் நீள்வானில் போக்க
என் பெற்றாய் கைகேசி!
நானும் வானகமே மிக விரும்பிப் போகின்றேன்”
என்று வானேறத்
தேனமரும் பொழில் சாரல் சித்திரகூடத்து
ஆனை புரவி தேரொடு காலாள்
அணி கொண்ட சேனை சுமந்திரன்
வசிட்டருடன் பரத நம்பி பணியத்
தம்பிக்கு மரவடியை வான் பணயம் வைத்துக்குவலயத்
துங்கக் கரியும் பரியும் இராச்சியமும்
எங்கும் பரதற் கருளிவிடை கொடுத்துத்
திருவுடைய திசைக்கருமம் திருத்தப் போய்த்
தண்ட காரணியம் புகுந்து

## ஆரண்ய காண்டம்

மறை முனிவர்க்கு
'அஞ்சேல்மின்' என்று விடைகொடுத்து
வெங்கண் விறல் விராதனுக விற்குனித்து
வண்டமிழ் மாமுனி கொடுத்த வரிவில் வாங்கிப்
புலர்ந்தெழுந்தகாமத்தால் சீதைக்கு நேராவன்
என்னப் பொன்னிறங் கொண்ட
கடுசினத்த சூர்ப்பனகாவைக்
கொடிமூக்கும் காதிரண்டும்
கூரார்ந்த வாளால் ஈரா விடுத்துக்
கரனொடு தூடனன் தன்னுயிரை வாங்க
அவள் கதறித் தலையில் அங்கை வைத்து
மலை யிலங்கை யோடிப்புகக்
கொடுமையில் கடுவிசை அரக்கன்
அலைமலி வேற் கண்ணானை அகல்விப்பான்
ஓருருவாய் மானையமைத்துச் சிற்றெயித்து
முற்றல் மூங்கில் மூன்று தண்டத்தனாய் வஞ்சித்து
இலைக் குரம்பில் தனி யிருப்பில்
கனிவாய்த் திருவினைப் பிரித்து
நீள் கடல் சூழ் இலங்கையில்
அரக்கர் குடிக்கு நஞ்சாகக் கொடுப்போய்
வம்புலாங் கடிகாவில் சிறையாய் வைக்க
அயோத்தியர்கோன் மாயமான் அகன்று தளர்வெய்திச்
சடாயுவை வைகுந்தத்தேற்றிக்
கங்குலும் பகலும் கண்துயிலின்றிக்
கானகம் படி யுலாவி யுலாவிக்
கணையொன்றினால் கவந்தனை மடித்துச்
சவரி தந்த கனியுவந்து

## கிஷ்கிந்தா காண்டம்

வனமருவு கவியரசன் தன்னோடு காதல் கொண்டு
மரா மரமே ழெய்து
உருத்தெழு வாலி மார்பில்
ஒரு கணை உருவ ஓட்டிக்
கருத்துடைத் தம்பிக்கு
இன்பக் கதிர்முடி அரசளித்து
வானரக் கோனுடனிருந்து வைதேகி தனைத்தேட
விடுத்த திசைக் கருமம் திருத்து
திறல் விளங்கு மாருதியும்
மாயோன் தூதுரைத்தல் செப்ப!

**சுந்தர காண்டம்**

சீராரும் திறல் அநுமன் மாக்கடலைக் கடந்தேறி
மும்மதில் நீள் இலங்கை புக்கு கடிகாவில்
வாராருமுலை மடவாள் வைதேவி தனைக்கண்டு
நின்னடியேன் விண்ணப்பம் கேட்டருளாய்!
அயோத்தி தன்னில் ஓர்
இடவகையில் எல்லியம் போதினிதிருத்தல்
மல்லிகை மாமாலை கொண்டங்கார்த்ததும்
கலக்கியமா மனத்தனனாய்க் கைகேயி வரம்வேண்ட
மலக்கியமா மனத்தனனாய் மன்னவனும் மறாதொழியக்
'குலக் குமரா! காடுறைப்போ' என்று விடைகொடுப்ப
இலக்குமணன் தன்னோடங்கேகியதும்
கங்கை தன்னில்
கூரணிந்த வேல்வலவன் குகனோடு
சீரணிந்த தோழமை கொண்டதுவும்
சித்திரகூடத்திருப்பப் பரதநம்பி பணிந்ததுவும்
சிறுகாக்கை முலை தீண்ட மூவுலகும் திரிந்தோடி
வித்தகனே! ராமாஓ! நின்னபயம் என்ன
அத்திரமே அதன் கண்ணை அறுத்ததுவும்
பொன்னொத்த மானொன்று புகுந்தினிது விளையாட
பின்னேயங்கு இலக்குமணன் பிரிந்ததுவும்
அயோத்தியர் கோனுரைத்த அடையாளம்
ஈதவன் கை மோதிரமே என்று
அடையாளம் தெரிந்துரைக்க
மலர் குழலாள் சீதையும்
"அநுமான் அடையாளம் ஒக்கும்" என்று
உச்சிமேல் வைத்துக்கத்
திறல் விளங்கு மாருதியும்
இலங்கையர்கோன் மாக்கடிகாவையிறுத்து
காதல் மக்களும் சுற்றமும் கொன்று
கடி இலங்கை மலங்க எரித்து
அரக்கர்கோன் சினமழித்து மீண்டு அன்பினால்
அயோத்தியர்கோன் தளிர்புரையும் அடியிணை பணிய

**யுத்த காண்டம்**

கான எண்கும் குரங்கும் முசுவும்
படையாக் கொடியோனிலங்கை புகலுந்து
அலையார் கடற்கரை வீற்றிருந்து

செல்வ வீபீடணற்கு நல்லானாய்
விரி நீ ரிலங்கை யருளிச்
சரண்புக்க குரைகடலை அடலம்பால் மறுகஎய்து
கொல்லை விலங்கு பணிசெய்ய
மலையாலணை கட்டி மறுகரையேறி
இலங்கை பொடிபொடியாகச்
சிலைமலி செஞ்சரங்கள் செலயுய்த்துக்
கும்பனொடு நிகும்பனும்பட
இந்திரசித் தழியக் கும்பகர்ணன் பட
அரக்கராவி மாள, அரக்கர்
கூத்தர் போலக் குழமணி தூரமாட
இலங்கை மன்னன் முடி யொருபதும்
தோளிருபதும் போயுதிரச்
சிலைவளைத்துச் சரமழை பொழிந்து
கரந்துணிந்து வெற்றிகொண்ட செருக்களத்துக்
கடிக்கமல நான்முகனும் கண்மூன்றத்தானும்
எண்மர் பதினொருவர் ஈராறுவர் ஓரிருவர்
மற்றுமுள்ள வானவர் மலர்மழை பொழிந்து
மணிமுடி பணிதர அடியிணை வணங்கக்
கோலத்திரு மாமகளொடு
செல்வ வீடணன் வானரக் கோனுடன்
இலகுமணி நெடுந்தேரேறி
சீரணிந்த குகனோடு கூடி
அங்கணொடு மதிள்புடைசூழ் அயோத்தி எய்தி
நன்னீராடிப்
பொங்கிளவாடை யரையில் சாத்தித்
திருச்செய்ய முடியும் ஆரமும் குழையும்
முதலா மேதரு பல்கலனிந்து
சூட்டுநன் மாலைகளனணிந்து
பரதனும் தம்பி சத்ருக்கனனும்
இலக்குமணனும் இரவு நண்பகலும் ஆட்செய்ய
வடிவினை இல்லாச் சங்கு தங்கு முன்கைநங்கை
மலர்க்குழலாள் சீதையும் தானும்
கோப்புடைய சீரிய சிங்காதனத்திருந்து எழுலகும்
தனிக்கோல் செல்ல வாழ்வித்தருளினார்.

*******************



# ஸ்ரீ ராம மங்களம்



மங்களம் கோஸலேந்த்ராயமஹநீய குணாப்தயே |
சக்ரவர்த்தி தநூஜாய ஸார்வ பௌமாயமங்களம் || 1

வேதவேதாந்த வேத்யாய மேகச்யாமல மூர்த்தயே |
பும்ஸாம் மோஹனரூபாய புண்யச்லோக்ய மங்களம் || 2

விஸ்வாமித்ராந் தரங்காயமிதிலா நகரீபதே |
பாக்யானாம் பரிபாகாயபவ்யரூபாயமங்களம் || 3

பித்ருபக்தாய ஸததம் ப்ராத்ருபி ஸஹஸீதயா |
நந்திதாகில லோகாயராமபத்ராயமங்களம் || 4

த்யக்த ஸாகேதவாஸாயசித்ரகூடவிஹாரிணே |
ஸேவ்யாயஸர்வயமினாம் தீரோதாராயமங்களம் || 5

ஸௌமித்ரிணா ஷா ஜானக்யா சாபபணாஸி தாரிணே |
ஸம்ஸேவ்யாயஸதா பக்த்யா ஸ்வாமினே மம மங்களம் || 6

தண்டகாரண்யவாஸாய கண்டிதா மரசத்ரவே |
க்ருத்ராஜய பக்தாய முக்திதாயாஸ்து மங்களம் | 7

ஸாதரம் சபரீத்த பலமூலா பிலாஷிணே |
ஸௌலப்ய பரிபூர்ணாய ஸத்வோத்ரிக்தாய மங்களம் || 8

ஹநூமத் ஸம வேதாய ஹரீசா பீஷ்டதாயினே |
வாலிப்ரமதநாயாஸ்து மஹா தீராய மங்களம் || 9

ஸ்ரீமதே ரகுவீராய ஸேதூல்லங்கித ஸிந்தவே |
ஜிதராக்ஷ ஸ ராஷாய ரணதீராய மங்களம் || 10

ஆஸாத்ய நகரீம் திவ்யாமபிக்ஷிக்தாயஸீதயா |
ராஷாதி ராஷராஷாய ராம பத்ராய மங்களம் || 11

மங்களாசாஸனபரைர் மதாசார்ய புரோகமை:
ஸர்வைஸ்ச பூர்வைராசாயஸ் ஸத்க்ருதாயாஸ்து மங்களம் || 12

# ௯. பக்த ஆஞ்சநேயர்

ஆஞ்சநேயர் வாயு பகவானின் அம்சமாக அஞ்சனா தேவியிடம் அவதரித்தார்.

ஹநுமான் என்ற வடசொல் தமிழில் அநுமன் என்று வழங்கப்படுகிறது. ஹநூ என்ற சொல்லுக்கு கன்னம் அல்லது மோவாய் என்பது பொருள். கன்னத்தில் விசேஷம் உடையவன் என்பது ஹநுமான் என்பதற்குப் பொருள். பிறந்த உடனே சூரியனைப் பழம் என்றெண்ணி, அப்பழத்தைப் பற்ற பாய்ந்த போது சினம் கொண்டு இந்திரன் வஜ்ராயுதத்தால் கன்னத்தில் அடிக்க, கன்னம் சிதைந்தது. சிதைந்த கன்னம் உடையவனாதலால் 'ஹனுமான்' என்ற பெயர் வந்தது.

இராமரும், இலக்ஷ்மணரும் பஞ்சவடியிலிருந்து சீதையைத் தேடிக் கொண்டு வரும் சமயம் கபந்தாசுரன் என்ற அசுரன் எதிர்பட்டான். அவன் எந்த உயிரையும் பிடித்து தன் வயிற்றில் அடக்கும் ஆற்றல் பெற்றவன். அவன் இராம, லக்ஷ்மணர்களைப் பிடித்து விழுங்க முயன்றபோது, அவர்களுடைய ஸ்பரிசத்தால் சாப விமோசனம் பெற்று, "நீங்கள் சீதையை மீண்டும் பெறுவதற்கு உங்களுக்கு உதவக்கூடிய வானர சேஷ்டன் இருக்கிறான். அவன் பெயர் சுக்ரீவன். இப்போது அவன் பம்பாசரஸ் அருகிலுள்ள ரிஷ்யமுக மலையில் தங்கியிருக்கிறான். அவன் உங்களுக்கு உதவியாக இருப்பான்" என்று சொல்லி மறைந்தான். சுக்ரீவனைச் சந்திக்க அநுமன் உதவினார்.

**அநுமனுக்கு வெற்றிலை, வடைமாலை சாற்றுவதின் தாத்பர்யம் - வெற்றிலை:**

இலங்கையிலிருந்து அநுமன் சீதா பிராட்டியிடமிருந்து விடைபெறும்போது அருகிலுள்ள வெற்றிலைக் கொடியை மாலையாகவும், வெற்றிலையைக் கிள்ளி தலையிலும் போட்டு ஆசீர்வதித்த காரணத்தால் பக்தர்களும் தமது பிரார்த்தனை நிறைவேற வெற்றிலை சாத்தி வருகின்றனர்.

**வடைமாலை:** அநுமனிடம் சனி, ராகு கிரகங்கள் தோல்வியுற்று கீழ்ப்படிந்தன. பக்தர்களுக்குச் சனியாலும், இராகுவாலும் ஏற்படும் இடையூறுகளிலிருந்து விடுபட சனிக்குப் பிரியமான எண்ணெயாலும்,

இராகுவுக்கு பிரியமான உளுந்தினாலும் செய்யப்பட்ட வடையை மாலையாகச் சாத்துகிறார்கள்!

ஆஞ்சநேயருக்கு பல கோயில்கள் உள்ளன. சுசீந்திரம், நாமக்கல் நங்கநல்லூர், திருவள்ளூர் பஞ்சவடி போன்ற இடங்களில் விஸ்வரூப ஆஞ்சநேயராக அருள்பாலிக்கின்றார்.

ஆஞ்சநேயர் ருத்ராம்சம், உடையவர், நெற்றிக் கண்ணும் உண்டு. சிறப்பு கருதி அனந்த மங்கலம் ஆஞ்சநேயர் தல வரலாறு தரப்பட்டுள்ளது.

**அனந்தமங்கலம் ஸ்ரீ திரிநேத்ர தச புஜ ஆஞ்சநேயர்:**



**அனந்தமங்கலம்
ஸ்ரீ திரிநேத்ர தச புஜ
ஆஞ்சநேயர்**

திருக்கடையூருக்குத் தென்கிழக்கே 5 கி.மீ. தொலைவில் உள்ளது. மூலவர்: ஸ்ரீ வாசுதேவப் பெருமாள். தாயார்: செங்கமலவல்லி. உத்சவர்: ருக்மிணி, சத்யபாமாவுடன் இராஜகோபால சுவாமி.

மூலவருக்கு அடுத்துள்ள மண்டபத்-தில் ஆஞ்சநேயர் எழுந்தருளி-யுள்ளார். ருத்ராம்சம் பொருந்தியதால் நெற்றிக் கண்ணோடு மூன்று கண்களைப் பெற்றுள்ளார். பத்துக் கரங்களில் சங்கம், சக்கரம், சூலம், கபாலம், மழு, பாசம், வில், அம்பு, சாட்டை, நவநீதம் தாங்கிக் கொண்டு, இருபுறமும் சிறகுகளோடு எழுந்தருளியுள்ளார். இரத்தபிந்து, இரக்தாக்ஷன் ஆகியோரை மும்மூர்த்திகளும், இந்திரனும் கொடுத்த ஆயுதங்களுடன், கருடன் தந்த சிறகுகளின் உதவியால் அழித்து, இத்தலத்தில் அவ்வுருவுடன் காட்சி தருகிறார். கோயிலுக்கு வெளியில் சதுர்புஜ ஆஞ்சநேயரையும் தரிசிக்கலாம்.

*அஞ்சிலே ஒன்று பெற்றான் அஞ்சிலே ஒன்றைத் தாவி*
*அஞ்சிலே ஒன்றா றாக ஆரியர்க் காக ஏகி*
*அஞ்சிலே ஒன்று பெற்ற அணங்கைக் கண்டயலார் ஊரில்*
*அஞ்சிலே ஒன்றை வைத்தான் அவனெம்மை அளித்துக் காப்பான்*

- கம்பராமாயணம்

# ஸ்ரீராம பாதுகைகளின் பெருமை

ஸ்ரீராமபிரானின் வனவாச காலத்தில், நந்தி கிராமத்தில் ஸ்ரீராம பாதுகைகளின் பிரதிநிதியாக பரதாழ்வார் அரசு காரியங்களைக் கவனித்து வந்தமையால், அவர் ஒவ்வொரு நாளும் நடந்த ராஜ்ய காரியங்களை ஸ்ரீராமர் பாதுகைகளிடம் விண்ணப்பித்து வந்தார். எதைச் செய்தாலும், ஸ்ரீபாதுகா தேவியிடம் தெரிவிக்காமலும், அவரது நியமனத்தைப் பெறாமலும் செய்வதில்லை. எந்தக் காணிக்கை வந்தாலும் ஸ்ரீபாதுகா தேவியிடம் அர்ப்பணம் செய்வார். இப்படி அந்த மகாத்மா ஸ்ரீராமச்சந்திரனுடைய பாதுகைகளுக்கு அடிமையாயிருந்து, அவரது பலத்தால் ராஜ்யத்தை நன்கு ஆண்டு வந்தார்.

(ஸ்ரீமத் வால்மீகி ராமாயணம் அயோ-115 ஸர்க்கம்)

ஸ்ரீ வேதாந்த தேசிகர் "ஸ்ரீ பாதுகா ஸகஸ்ரத்தில்" இராமருடைய பாதுகையைப் புகழ்ந்துள்ளார்,

*"வர்ஷாணி தாநி வ்ருஷலோ ந தபாம்ஸி தேபே*
*பாலோ ந கச்சிதபி ம்ருத்யுவசம் ஜகாம I*
*ராஜ்யே தவாம்ப ரகுபுங்கவ பாதரக்ஷே*
*நைவாபரம் ப்ரதிவிதேயம் அபூத் சேர்ம II "*

- ஸ்ரீ பாதுகா ஸகஸ்ரம்

ஸ்ரீபாதுகா ராஜ்யத்தில் சாஸ்த்ர வரம்பை யாரும் மீறியதில்லை. சிசு மரணமே கிடையாது. தீமை தோன்றி அதற்கு சாந்தி பண்ணவேண்டிய நிலைமையே ஏற்பட்டதில்லை. ஸ்ரீபாதுகா தேவி பூலோகத்தை மாத்திரமன்றி வானுலகத்தவரையும் ரக்ஷித்ததைப் பெரியாழ்வார் திருமொழி 4-9-1-ம் பாசுரம் கூறுகிறது:



## எடுத்தாண்ட நூல்கள்...


1. திருமுறைத் தலங்கள் - பு. மா. ஜயசெந்தில்நாதன், 1995 தமிழ் நிலையம், சென்னை - 600017.
2. 108 ஸ்ரீவைஷ்ணவ திவ்யதேச வைபவமும், புராண - அபிமான ஸ்தலங்களும், தி லிட்டில் ப்ளவர் கம்பெனி, சென்னை - 600017 - பதிப்பு 1994.
3. அருணகிரிநாதர் அடிச்சுவட்டில் திருப்புகழ்த் தலபயணம் - டாக்டர் ரா.ராமகிருஷ்ணன், வலையப்பேட்டை ரா. கிருஷ்ணன் 2018 நான்காம் பதிப்பு,
4. கோயிற் களஞ்சியம், செங்கை - எம்.ஜி.ஆர் மாவட்ட காஞ்சிபுரம் கோயில்கள், 1994, தமிழ்ப் பல்கலைக் கழக வெளியீடு
5. திருக்கோயில்கள் வழிகாட்டி, காஞ்சிபுரம் மாவட்டம். தமிழ்நாடு இந்து சமய அறநிலையத்துறை 2014.
6. சிதம்பரம் முதல் தஞ்சாவூர் வரை தரிசிக்க வேண்டிய தலங்கள் - டாக்டர் கே. சுப்ரமணியம், குமரிப் பதிப்பகம், நாகப்பட்டினம் - 1998
7. மற்றும் பத்திரிகைகள், கோயில் தல வரலாறு, இணையம் முதலியன...




அனைவருக்கும்

நன்றி !



**வானதி பதிப்பகம் வெளியிட்டுள்ள ஆசிரியரின் இதர நூல்கள்**

1. திருக்கோயில்கள் திருவிழாக்கள் (சில சுவையான தகவல்கள்)
2. மகான்களின் வாழ்க்கையில் மகத்தான நிகழ்ச்சிகள்
3. ஸ்ரீ அழகிய சிங்கனின் அற்புத ஆலயங்கள்
4. திருப்புகழ் போற்றும் தெய்வங்கள்
5. ஆறு முகங்கள் ஏழு மூர்த்திகள்
6. சிவபெருமான் அடியார்களுக்கு அருளிய அருட்கோலங்கள்
7. திரு ஞான வேழம்
8. அருள்மிகு நடராஜரின் அற்புதத் தகவல்கள்

(சென்னை ஓய்வுபெற்ற விவேகானந்தா கல்லூரி பேராசிரியர் முனைவர் **S. சுந்தரம்** அவர்களுடன் இணைந்து எழுதிய நூல்கள் : 2 & 3)



ஸ்ரீ ராமர் - மதுராந்தகம் (ஏரி காத்த ராமர்)



ஸ்ரீ ராமர் - தில்லைவிளாகம்

## மருத்துவர் கைலாசம் சுப்ரமணியம்



தஞ்சாவூர் மாவட்டத்தில், செந்தலை கிராமத்தில் பிறந்து, ஆரம்பப் பள்ளிப் படிப்பிற்குப் பின், சிதம்பரம் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் இண்டர்மீடியட்டும், சென்னை கீழ்ப்பாக்கம் மருத்துவக் கல்லூரி, செங்கல்பட்டு மருத்துவக் கல்லூரி, சென்னை மருத்துவக் கல்லூரிகளில் மருத்துவக் கல்வி பயின்று பட்டம் பெற்று, தமிழக அரசில் ஆரம்ப சுகாதார நிலையம் முதல் சென்னை பொது மருத்துவமனை வரை மருத்துவ அலுவலர், நிலைய மருத்துவ அலுவலர், மருத்துவமனைக் கண்காணிப்பாளர், மாவட்ட மருத்துவ அலுவலர், இணை இயக்குனர் போன்ற பதவிகள் வகித்து 1994ல் பணி ஓய்வு பெற்றார்.

சிதம்பரம் முதல் தஞ்சாவூர் வரை தரிசிக்க வேண்டியவைகள், சப்த விடங்கத் தலங்கள். திருக்கோயில் திருவிழாவில் (சில சுவையான தகவல்கள்) திருப்புகழ் போற்றும் தெய்வங்கள், ஆறுமுகங்கள், ... மூர்த்திகள், சிவபெருமான் அடியார்களுக்கு அருளி அருட்கோலங்கள், திரு ஞான வேழம், அருள்மிகு நடராஜரின் அற்புதத் தகவல்கள் முதலிய நூல்களை எழுதியுள்ளார்.

நண்பர் முனைவர் சீ. சுந்தரம் அவர்களுடன் இணைந்து மகான்களின் வாழ்க்கையில் மகத்தான நிகழ்ச்சிகள், ஸ்ரீ அழகிய சிங்கன் அற்புத ஆலயங்கள் மற்றும் Saint and Sages of India (4 vols) என்ற ஆங்கில நூலும் எழுதியுள்ளார்.

தினமணி / வெள்ளிமணி, சப்தகிரி, திருக்கோயில், அம்மன் தரிசனம், கோபுர தரிசனம் மற்றும் பல பத்திரிகைகளுக்கு ஆன்மீக கட்டுரைகளும் எழுதியுள்ளார்.

குரோம்பேட்டை குமரன் குன்றம் அருள்மிகு பாலசுப்ரமண்ய சுவாமி திருக்கோயில், ஸ்ரீபாலசுப்ரமண்ய சுவாமி சத்சங்கம், ஸ்ரீபாரதிய கலாசார சேவா சமிதி மூலமாக ஆன்மீகத் தொண்டாற்றி வருகின்றார். குரோம்பேட்டை குமரன் குன்றம் திருப்புகழ் மன்ற ஒருங்கிணைப்பாளராக, நலம் நல்கும் திருப்புகழ், ஞான யோகத் திருப்புகழ் மற்றும் பல நூல்களும் தொகுத்துள்ளார்.